एतल्लोकि(ल्लौकि)कादि स्वरूपं सर्वात्मशम्भुकृत सिद्धान्त-दीपिकायां प्रपञ्चितमिह ग्रन्थगौरवभयान्नलिखितम् । तत्रैवावधार्यताम् ॥ 46

तत्र मान्त्रिकं पञ्चविधमपि क्रमेण ऊर्ध्व पूर्व कुबेर वरुण याम्य सम्बन्धात् मुक्तिप्रदसिद्धान्त-सर्वविषहरणगारुड-सर्ववशीकरणवाम - भूतग्रहनिवारक भूततन्त्र - शत्रुक्षयकर भैरवसंज्ञकम् ॥

तथा कामिके —

तथैव मन्त्रतन्त्राख्यं सदाशिव मुखो अभ(खोद्भ)वम् ।
सिद्धान्तं गारुडं वामं भूततन्त्रंच भैरवम् ॥
ऊर्ध्वपूर्व कुबेराप्य याम्यवक्त्राद्यथाक्रमम् ॥

---

*ஹேமஸித்தாந்தத்திலும் இவ்வாறு தந்திரபேதங்கள் கூறப்பட்டுள்ளன. 45

இந்த லௌகிகம் முதலிய தந்திரங்களின் இலக்கணம் ஸ்ரீ ஸர்வாத்மசம்பு இயற்றிய சித்தாந்த தீபிகை என்னும் நூலில் விரிவாகச் சொல்லப் பட்டுள்ளது. ஈண்டு விரிவஞ்சி விடப்பட்டது ஆங்கு உணரத்தக்கது. 46

அவற்றுள் மாந்திரிக தந்திரமானது ஈசான முகத்தில் தோன்றிய முக்தி யளிக்கும் சித்தாந்தம், தத்புருஷமுகத்தில் தோன்றிய எல்லா விஷத்தையும் போக்கும் காருடம், வாமதேவமுகத்தில் தோன்றிய எல்லார்வற்றையும் வசீகரணம் செய்யும் வாமம், ஸத்யோஜாத முகத்தில் தோன்றிய பூதம் கிரஹம் இவைகளின் பீடைகளைப் போக்கும் பூததந்திரம், அகோரமுகத்தினின்று தோன்றிய பகைவரையழிக்கும் பைரவம் என ஐவகைப்படும்.

காமிகத்தில் சதாசிவப்பெருமானின் முகத்தில் தோன்றிய மந்த்ரமானது சித்தாந்தம், காருடம், வாமம்,

---

*ஸோமஸித்தாந்தம் (பாடபேதம்)

एतानि सिद्धान्तादीनि *कामिकाधूर्ध्वस्रोतः, **तालादि प्राक्स्रोतः, संमोहनाद्युत्तरस्रोतः चण्डासिधारादि पश्चिम स्रोतः, असिताङ्गादि दक्षिणस्रोतोरूपाणि पञ्चस्रोतांसि ।

यथा मृगेन्द्रे —

"स्रोतांसि कामिकाधूर्ध्वमसिताङ्गादि दक्षिणम् ।
सम्मोहाद्युत्तरं, प्राच्यं तन्त्रं ***तालादि विस्तरम् ॥
आप्यं चण्डासिधारादि सण्डना (चण्डनाथ) परिग्रहम्"
इति ॥

चत्वारोऽपि वेदा अथ स्रोतोरूपा एव ।

---

பூததந்திரம், பைரவம் என ஐவகைப்படும். இவை வரிசையாக ஈசான தத்புருஷ வாமதேவ ஸத்யோஜாத அகோரம் முதலிய முகத்திலிருந்து உண்டானவை. சித்தாந்தமான காமிகம் முதலிய ஞானசாஸ்திரங்கள் மேல்முகத்திலுண்டானவை; தாலம் முதலிய * ஞானங்கள் கிழக்கு முகத்திலுண்டானவை; ஸம்மோஹம் முதலிய ஞானங்கள் வடக்கு முகத்திலுண்டானவை; சண்டாஸிதாரா முதலிய ஞானங்கள் மேற்குமுகத்தில் உண்டானவை; அஸிதாங்கம் முதலிய ஞானங்கள் தெற்கு முகத்திலுண்டானவை.

மிருகேந்திரம் —

காமிகம் முதலியவை ஊர்த்வ முகத்திலும், அஸிதாங்கம் முதலியவை தக்ஷிண முகத்திலும், ஸம்மோஹம் முதலியவை உத்தர முகத்திலும், தாலம்

---

* ख पुस्तके 'कामिके' इत्यधिकः पाठः । इत आरभ्य 'पुराणं बाध्यते वेदेरागमैश्च तदुक्तयः' इत्यन्तो भागः ख पुस्तके नोपलभ्यते

** त्रोतलादि

*** त्रोतलादि सुविस्तरं इतिच मुद्रिते मृगेन्द्रे

*த்ரோதலம் என்று மிருகேந்திர பதிப்பு (பாண்டிச்சேரி)

ननु तत्रैव— "कामिकं पादयुग्मं स्याद्योगजं गुल्फमेवहि चिन्त्यं पादाङ्गुलमित्यादिना पादाद्यङ्गत्ववर्णनात् मूर्धादिवर्णनं विरुद्धमिति चेत् ? सत्यम् । तत्रैव सर्वत्र मकुटादि कल्पनया परिहृतत्वात् । तथा सर्वत्र मकुटं तथा नेत्रं तथास्यकम् तथा पादौच गुल्फौच किन्तु धातृविभेदत" इति ॥ 47

अस्य सिद्धान्तस्य वेदादिभ्यः सर्वेभ्योत्कृष्टत्वम् ।

मोहशूरोत्तरे —

"पुराणं बाध्यते वेदैरागमैश्च तदुक्तयः ।
सामान्यंच विशेषंच शैवं वैशिष्टिकं वचः ॥"

---

முதலியவை கிழக்கு முகத்திலும், சண்டாஸி தாரா முதலியவைமேற்கு முகத்திலும் உண்டானவை என்று சொல்லுகின்றது.

மேலும் நான்கு வேதங்களும் பிரவாகரூபமானவையே.

காமிகம் கால்களாகவும் யோகஜம் கணைக்கால்களாகவும் சிந்தியம் கால் விரல்களாகவும் வர்ணிக்கப்பட்டிருப்பதால் அவைகளைத் தலை முதலியவைகளாக வர்ணித்திருப்பது விரோதமன்றோவெனில், அன்று; அங்கேயே எல்லா ஆகமங்களும் தலை முதலான அங்கங்களாகக் கற்பிக்கப்பட்டு விரோதம் நீக்கப்பட்டது கண்டுகொள்க. மேலும், கூறியவர்களின் பேதத்தால் ஆகமங்கள் தலையாகவும் கண்களாகவும் முகமாகவும் பாதங்களாகவும் அங்கு வர்ணிக்கப்பட்டிருக்கின்றன என்றறிக. ஆதலால் விரோதமன்று. 47

இச்சித்தாந்த சாத்திரமானது வேதங்களைக் காட்டிலும் உயர்ந்தது.

மோஹ சூரோத்தரத்தில் :—

வேதபுராணங்களுக்கு முரண் ஏற்படும் பொழுது புராணம் உபாதேயமல்ல என்றும், "ஆகமங்

अत्र शास्त्ररूपज्ञाने वेदादिज्ञानमपरम् । सिद्धान्तज्ञानं परम् । सिद्धान्तज्ञानेऽपि शिवज्ञानं परम् । रुद्रज्ञानमपरम् । शिवज्ञानमपि प्रवक्तृक्रमादाद्यजनकक्रमाच्च परापरमाद्व्यात् । एवं रुद्रज्ञानमपि । तथा उपभेदानामपि परापरत्वमिति परापरभेदा बोध्याः । एवं शब्दरूपज्ञानवत् अवबोधरूपज्ञानस्यापि शुद्धमार्ग शिव सदाशिव पशु माया प्रकाशकत्वादिभिः परापरभेदा मन्तव्याः । तथा दीक्षारूप ज्ञानस्यापि नैष्ठिक भौतिक निर्बीज सबीज शिवधर्म (र्मि) लोकधर्म्यादिभिः परापरभेदा ऊहनीयाः ॥ 48

---

களுக்கு முரண் ஏற்படும்பொழுது வேதவாக்கியங்கள் உபாதேயம் அல்ல என்றும், புராணங்களைக்காட்டிலும் வேதமுயர்ந்தது; வேதங்களைக் காட்டிலும் ஆகமம் உயர்ந்தது என்றும் கூறப்பட்டுள்ளது.

சாஸ்திரரூபமான ஞானத்தில் வேதசம்பந்தமான ஞானம் அபரம்; சித்தாந்தசம்பந்த ஞானம் பரமாகும். சித்தாந்த ஞானத்திலும் சிவஞானம் பரம்; உருத்திர ஞானம் அபரம்.

சிவஞானமும் உபதேசக் கிரமத்திலும் தோற்றக் கிரமத்திலும் பரமும் அபரமுமாகும். அவ்வாறே உருத்திர ஞானமும் பராபர பேதமுடையதாகும். அவ்விதமே அவைகளின் உபபேதங்களுக்கும் பராபரத்வம் உண்டு என்பது அறியத்தக்கது. சாஸ்திரரூபமான ஞானம் போல் திருவருள் ஞானத்திற்கும் சுத்தமார்க்க சிவ சதாசிவ பசு மாயை இவற்றை விவரிப்பதால் பராபரபேதம் அறியத்தக்கது. அவ்வாறே தீக்கைரூபமான ஞானத்திற்கும், நைஷ்டிக, பௌதிக, நிர்பீஜ ஸபீஜ சிவதர்மி உலகதர்மி முதலியவற்றாலும் பராபரபேதம் உணரத்தக்கது. 48

उक्तं स्वायंभुवे —

"तदेकमप्यनेकत्वं शिववक्त्राम्बुजोद्भवम् ।
परापर (रेण) भेदेन गच्छत्यर्थप्रतिश्रयात् ॥"

तदा (था) कामिके —

आदावभूद्वि (द्वि) धाज्ञानमधिकारविभेदतः ।
परापरेण भेदेन पतिपश्वा(श्व)र्थदर्शकम् ॥
शिवप्रकाशकं ज्ञानं शिवज्ञानं परं स्मृतम् ।
वेदाद्यपरविज्ञानं पशुपाशार्थदर्शकम् ॥
यथाविलक्षणं चक्षुः क्षपायां *नृबिडालयोः ।
तथा विलक्षणं ज्ञानमेवमेतत् परापरम् ॥ इति ॥ 49

---

ஸ்வாயம்புவத்தில் :—

"சிவபெருமான் முகத்தினின்று தோன்றிய ஞானம் ஒன்ருக இருப்பினும், பொருள் வேறுபாடு கொண்டு பராபரபேதத்தால் பலவிதமாகும்" என்று கூறப்படுகிறது.

காமிகத்தில் :—

"முதலில் ஞானம் ஒன்ருக இருந்தாலும் சிவ ருத்திர அதிகாரி பேதத்தால் பராபர ரூபமாக இரண்டாகிப் பதிபசுபாசங்களைத் தெரிவிக்கும். சிவ பெருமானை உணர்த்தும் ஞானம் சிவஞானம் பரமெனப்பட்டது. பசுபாசங்களை உணர்த்தும் வேதம் முதலான ஞானம் அபரஞானமெனப்பட்டது. இரவில் மனிதனுக்கும் பூனைக்கும் கண்ணொளி வேறுபட்டது போல் பராபரஞானமும் மாறுபட்டது" என்று கூறப்பட்டுள்ளது. 49

---

* (ख) श्वबिडालयोः ।

सिद्धान्तज्ञानं कामिकादीनि प्रणवाद्यंशुपर्यन्तानां प्रणीतानि यानि तानि शिवभेदाभिधेयानि। शिवाधिकरणं ज्ञानं शिवभेद इत्युच्यते। विजयादीन्यष्टादशसंख्यातानि तन्त्राण्यनादिरुद्रादिरुद्राणां यान्यभिहितानि तानि रुद्रभेदाभिधेयानि। रुद्राधिकरणकं ज्ञानं रुद्रभेदमिति। अतएव रुद्रात्मभिन्नमष्टादशसङ्ख्याकमिति। शिवरुद्रात्मकं तन्त्रमष्टाविंशति सङ्ख्याकम् इति॥

स्वायम्भुवे —

चिन्तामणिरिवात्रासौ स्थितस्सर्वस्य कारणम्।
एकमेव शिवज्ञानं विभिन्नं दशधापुनः॥
तथाष्टादशधा भिन्नं भेदान्तर विसर्पितम्। 50

---

ப்ரணவர்முதல் அம்சுமான்வரையில் உபதேசிக்கப் பட்ட காமிகம் முதலிய சித்தாந்த சாஸ்திரங்கள் சிவபேதங்களாகும். சிவமூர்த்திகளுக்கு உபதேசிக்கப் பட்ட சாஸ்திரம் சிவபேதம் என்று சொல்லப்படு கிறது. விஜயம் முதலிய பதினெட்டும் அநாதி ருத்திரர் முதலிய உருத்திர மூர்த்திகளுக்கு உபதேசிக்கப்பட்டமையால், அவை உருத்திர பேதங் கள் எனப்பட்டன. அவை பதினெட்டாம். ஆகவே, சிவருத்திர பேதமாகத் தந்திரங்கள் இருபத்தெட்டா கின்றன என்க.

சுவாயம்புவத்தில்: —

“எல்லாவற்றிற்கும் முதன்மையான தந்திர பேதம் சிந்தாமணி போல் விளங்குகின்றது. ஒன்றாகிய சிவ ஞானமே முதலில் பத்தாகவும் பின்னர்ப் பதினெட் டாகவும் வேறுபட்டது” எனப்படுகிறது. 50

श्रोतृ(तृ) भेदो मकुटतन्त्रे वर्णितः

श्रोतारः शिवभेदानां पारंपर्यात्त्रयस्त्रयः ।
द्वौ द्वौ तु रुद्रभेदानां षष्टिरुक्ताः षडुत्तराः ॥

तद्भेदः किरणे प्रपञ्चितः —

सृष्टयनन्तरमेवेशः शिवान् सृष्ट्वा *दशात्मजान् ।
ज्ञानमेकं **वि[भज्याशु] तेषां तत्संख्ययाऽवदत् ॥
कामिकं प्रणवाख्यस्य सुधाख्यस्य तु योगजम् ।
दीप्ताख्यस्यापि चिन्त्यं तु कारणाख्यस्य कारणम् ॥

---

கேட்டவர்களின் வேறுபாடு மகுடாகமத்தில் :—

"சிவ பேதத்தை உபதேசம் பெற்றவர் முறையே மும்மூவராவர்; உருத்திர பேதத்தை உபதேசம் பெற்றவர் இருவரிருவராவர்; ஆகவே, உபதேசம் பெற்றவரது தொகை அறுபத்தாறு என்க" எனப்பட்டுள்ளது.

கேட்டவர்களின் பேதம் கிரணாகமத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது:

"சிவபெருமான், உலகப்படைப்புக்குப் பின்னர்ப் பத்துச் சிவ[1] மூர்த்திகளைப் படைத்து அவர்களுக்கு ஒப்பற்ற சிவ சாஸ்திரத்தைப் பிரித்து எண்ணிக்கையோடு உபதேசித்தருளினர்"

"பிரணவருக்குக் காமிகமும், சுதருக்கு யோகஜமும், தீப்தருக்குச் சிந்தியமும், காரணருக்குக்

---

* आत्मजान् परमेश्वरेणैव निरधिकरणेन अनुग्रहेणानुगृहीतान् ।
** विसज्यैकम् ।

1 இவர்கள் சிவபெருமானால் நிரதிகரணமான அனுக்ரஹத்தால் அனுக்ரஹிக்கப்பட்டவர்கள். அதுபற்றியே இவர்கள் ஆத்மஜ என்னும் சொல்லால் வழங்கப்பட்டுள்ளார்கள்.

अजितं सुशिवाख्यस्य ईशस्यापि सुदीप्तकम् ।
सूक्ष्मं तु सूक्ष्मसंज्ञस्य कालस्यापि सहस्रकम् ॥
सुप्रभेदं गणेशस्य अंशुसंज्ञस्य चांशुमान् ।
एवं प्राथमिकं प्रोक्तं पुनरन्यो गुरुक्रमः ॥
प्रणवा[त्]त्रिकलः प्राप्तः कामिकं त्रिकलाद्धरः ।
सुधाख्याद्योग[जं] तन्त्रं भस्मसंज्ञस्ततः प्रभुः ॥
दीप्ताद्रुद्राच्चु चिन्त्यंतु गोपतिश्च ततोऽम्बिका ।
कारणं कारणाच्छर्वस्ततः प्राप्तः प्रजापतिः ॥
अजित[तं]सुशिवात् प्राप्तो[त] उमेशोप्यच्युतस्ततः ।
ईशा[द्]दीप्तं त्रिमूर्तिस्तु ततः प्राप्तो हुताशनः ॥
सूक्ष्मं सूक्ष्माद्भवः प्राप्तस्तस्मात्प्राप्तः प्रभञ्जनः ।
कालसंज्ञात् सहस्राख्यं भीमो धर्मस्ततः खग(ः) ॥

---

காரணமும், சுசிவருக்கு அஜிதமும், ஈசருக்கு தீப்தமும், ஸூக்ஷ்மருக்கு ஸூக்ஷ்மமும், காலருக்கு ஸஹஸ்ரமும், கணேசருக்குச் சுப்ரபேதமும், அம்சுமானுக்கு அம்சுமதாகமமும் என இவ்வாறு முதலில் சிவஞானம் உபதேசம் செய்யப்பெற்றது. பின்னர்த் தோன்றிய குருமுறையும் கூறப்படுகிறது. காமிகத்தைப் பிரணவரிடமிருந்து திரிகலரும், அவ்வரிடமிருந்து ஹரரும், யோகஜத்தைச் சுதரிடமிருந்து பஸ்மரும், அவரிடமிருந்து பிரபுவும், சிந்தியத்தைத் தீப்தரிடமிருந்து கோபதியும், அவரிடமிருந்து அம்பிகையும், காரணத்தைக் காரணரிடமிருந்து சர்வரும், அவரிடமிருந்து பிரஜாபதியும், அஜிதத்தைச் சுசிவரிடமிருந்து உமேசரும், அவரிட மிருந்து அச்யுதரும், தீப்தத்தை ஈசரிடமிருந்து திருமூர்த்தியும், அவரிடமிருந்து ஹுதாசனரும், ஸூக்ஷ்மத்தை ஸூக்ஷ்மரிடமிருந்து பவரும், அவரிட மிருந்து பிரபஞ்சனரும், ஸஹஸ்ரத்தைக் காலரிட

गणेशात सुप्रभो(सुप्रभेदा)ख्यं त्वविघ्नेशस्ततः शशी ।
अंशुमच्चांशुसंज्ञात्तु प्राप्तोह्युग्रस्ततो रविः ॥
एवमेते शिवाख्याताः शिवभेदा दशद्यको (शाद्यके) ।
दशाष्ट संख्ययाप्यन्यो रुद्रभेदः परो मतः ॥ 51

दशाष्टसंख्यया रुद्रान् पूर्वमुत्पाद्य बुद्धिमान् ।
शिवस्तत्संख्ययैवेह पुनस्तात (न) बोधयत् खग ॥
रुद्रस्यनादिसंज्ञस्य विजयं तन्त्रमुत्तमम् ।
पारमेशं महातन्त्रं श्रीरूपस्य प्रभाषितम् ॥
निश्वासं यद् दशार्णस्य प्रोद्गीतं नाम शूलिनः ।
मुखबिम्बं प्रशान्तस्य बिन्दोः सिद्धमतो मतम् ॥

---

மிருந்து பீமரும், அவரிடமிருந்து தர்மரும், ஸுப்ரபேதத்தைக் [1]கணேசரிடமிருந்து அவிக்னேசரும், அவரிடமிருந்து சசியும் அம்சுமதாகமத்தை அம்சுமானிடமிருந்து உக்ரரும், அவரிடமிருந்து ரவியும் என முறையே உபதேசம் பெற்றனர்'' என்கிறது. இவ்வாறு சிவமூர்த்திகளுக்கு உபதேசிக்கப்பட்ட இப்பத்தாகமங்களும் சிவ பேதங்கள் எனப்படும். ஏனைய பதினெட்டும் ருத்திர பேதம் எனப்படும். 51

சிவபெருமான் பதினெண் ருத்திரர்களைப் படைத்து அவர்களுக்கு உருத்திரபேதங்களை எண்ணிக்கையோடு அருளிச் செய்தார்.

அநாதிருத்திரருக்கு விஜயமும், ஸ்ரீரூபருக்கு பாரமேச்வரமும், தசார்ணருக்கு நிச்வாஸமும், சூலிக்கு புரோத்கீதமும், பிரசாந்தருக்கு முகபிம்பமும், பிந்து

---

1 "தசேசரிடமிருந்து விக்னேசரும் அவரிடமிருந்து சசியும்" என்று காமிகாகமம் கூறுகின்றது.

शिवनिष्ठस्य सन्तानं सिद्धं(सिद्धं) सौम्यस्य चोदितम् ।
चन्द्रहासमनन्तस्य भद्रं सर्वात्मनो मतम् ॥
निधनस्य स्वयंभूतं बिरजं तेजसस्सम्मृतम् ।
*रौरवं ब्रह्मणेशस्य शिवाख्यस्य च माकुटम् ॥
किरणं देवपितुःख्यातं ललितं चालयस्य तु ।
आग्नेयं यच्च **तद्वयोम्नि (म्नः) शिवस्यापि पुनःपरम् ॥
एते जाताः सद्ज्ञानें शिवदेहात् पुन(ः)शृणु ।
***प्राप्तश्चानादिसंज्ञं(ज्ञात्)तु विजयं परमेश्वरः ॥
श्रीरुपात् पारमेशं तु प्राप्तो[ऽप्सा] हु(दु)शना मुनिः ।
दशाक्षणच [राच्च] निश्वासं संप्राप्ता शैलसम्भवा ॥
प्रोद्गीतं रुद्रसंज्ञात्तु कचाख्यो मुनिसत्तमः ।
प्रशान्तमु(न्तान्मु)खबिम्बन्तु दधीचिर्नाम यो मुनिः ॥
बिन्दु संज्ञाच्च यतसिद्धं प्राप्तश्चण्डेश्वरो गणः ।
शिवनிष्टाच्च सन्तानं सम्प्राप्तो हंसवाहनः ॥

விற்கு சித்தமும், சிவநிஷ்டருக்கு ஸந்தானமும், ஸோமருக்கு மிருகேந்திரமும், அனந்தருக்கு சந்திர ஹாஸமும், ஸர்வாத்ம தேவருக்கு பத்ரமும், நிதனேசருக்கு ஸ்வயம் பூதமும், தேஜருக்கு விரஜமும், பிரும்மணேசருக்கு ரௌரவமும், ஈசானருக்கு மகுடமும், தேவபிதாவிற்குக் கிரணமும், ஆலயருக்கு லலிதமும், வ்யோமருக்கு ஆக்னேயமும், சிவபெருமானுல் சிவ ஞானம் உபதேசிக்கப்பட்டன. பின்னர், அநாதிருத்திரரிடமிருந்து விஜயத்தைப் பரமேச்வரரும், ஸ்ரீரூபரிட மிருந்து பாரமேச்வரத்தை உசனரும், தசார்ணரிட மிருந்து நிச்வாஸத்தைப் பார்வதியும், சூலியிடமிருந்து புரோத்கீதத்தை கசமுனிவரும், பிரசாந்தரிடமிருந்து முகபிம்பத்தை ததீசிமுனிவரும், பிந்துவினிடமிருந்து

*ख. कौरव्यम्  **ख. व्योम्नः  ***ख. अनादि संज्ञात

नारसिह्मंतु यत सौम्यात नृसिह्मः प्राप्तवान् महान् ।
अनन्ताच्चन्द्रहासंतु प्राप्तो देवपुरोहितः ॥

मद्रं सर्वात्मदेवात्तु वीरभद्रो महागणः ।
स्वायंभुवं तु निधनात संप्राप्तः पद्मसम्भवः ॥

विरजं तेजसः प्राप्तः पू(प्र)जारक्षण तत्परः ।
*रौरवं ब्रह्मणशान्तु सम्प्राप्तो नन्दिकेश्वरः ॥

ईशानात सकलं (मकुटं) प्राप्तो महादेवा[वोध्व]जाश्रयः ।
किरणं देवपितृतः प्राप्तः संवर्तको मुनिः ॥

आलयाल्ललितं प्राप्ता रुद्र(द्रो)भैरव रूपवान् ।
आग्नेयं व्योमसंज्ञात्तु संप्राप्तो हुतभुक् पुनः ॥

---

சித்தத்தை சண்டேச்வரரும், சிவநிஷ்டரிடமிருந்து ஸந்தானத்தை ஹம்ஸவாஹனரும், ஸோமரிடமிருந்து மிருகேந்திரத்தை நரஸிம்மரும், அனந்தரிடமிருந்து சந்திரஹாஸத்தை பிருஹஸ்பதியும், ஸர்வாத்ம தேவரிடமிருந்து பத்ரத்தை வீரபத்திரரும், நிதனேசரிடமிருந்து சுவாயம்புவாகமத்தை பத்மஸம்பவரும், தேஜரிடமிருந்து விரஜத்தை [1]விஷ்ணுவும், பிரும்மணேசரிடமிருந்து ரௌரவத்தை நந்திகேச்வரரும், ஈசானரிடமிருந்து மகுடத்தை மஹாதேவரும், தேவபிதாவிடமிருந்து கிரணத்தை ஸம்வர்த்தக முனிவரும், ஆலயரிடமிருந்து லலிதத்தை உருத்திரரும், வியோமரிடமிருந்து ஆக்னேயத்தை அக்னியும் உபதேசம் பெற்றனர்.

---

* कौरव्यम् ।

1 பிரஜாபதி என்று காமிகாகமம் கூட்டுகிறது.

तन्त्रभेदो यथा (मया) प्रोक्तश्चा(तश्चात्र)संक्षिप्तलक्षणः ।
एषुभेदेषु यो भेद उपभेदस्स उच्यते ॥
भेदोऽयमुपचारेण कल्पितस्स यतस्ततः ।
फलभेदो न कल्प्योऽत्र ज्ञानभेदः प्रकल्प्यते ॥ 52

इदं ज्ञानं क्रमेण सदाशिवानन्तर (नन्त) श्रीकर्ण (ण्ठ) मुनिगणपरंपरया भूमौ प्रवर्तते ।

तथा —

"अनुष्टुप् छन्दसात्पू( पू )र्वं निबध्नं(द्धं) बहुकोटिभिः ।
सदाशिवेन देवेन ततोऽनन्तेन धीमता ॥"

---

சுருக்கிய இலக்கண தந்திர பேதங்கள் இங்கு என்னால் சொல்லப்பட்டன. இந்தத் தந்திரங்களில் உள்ள மற்ற பேதங்கள் உபபேதம் என்று சொல்லப்படுகின்றன. ஆயின் இவை தம்முள் பேதமென்பது உபசார வழக்கே. அதனால் முக்தியில் வேற்றுமை இல்லை; பெயரால் மட்டும் சாத்திர பேதம் கூறப்பட்டது. 52

இந்தச் சித்தாந்த ஞானம், முறையே ஸ்ரீ ஸதாசிவ மூர்த்தியால் அனந்ததேவர்க்கும், அனந்த தேவரால் ஸ்ரீகண்டபெருமானுக்கும், ஸ்ரீகண்டபெரு மானால் முனிபுங்கவர்களுக்கும் உபதேசம் செய்யப் பெற்றுப் பூமியில் பரவியது.

पौष्करे —

"तेनोक्तं परमेशेन श्रीकण्ठाय महात्मने ।
श्रीकण्ठादृषयो लब्धास्तेभ्यो लब्धाः सुमानवाः ॥"
इति ॥

*एतन्महातन्त्रं चतुष्पादात्मकं भवति ।

तथा मृगेन्द्रे —

"त्रिपदार्थं चतुष्पादं महातन्त्रं जगत्पतिः ।" इति॥ 53

---

"பல கோடிக்கணக்கான அனுஷ்டுப் சுலோகத்தால் சொல்லப்பட்ட ஆகம ஞானத்தை மேற்கண்டவாறு முறையே பெற்று மனிதர்களும் அடைந்தனர்" என்று பௌஷ்கரம் முதலிய ஆகமங்கள் கூறுகின்றன.

இந்த மஹா *தந்திரம் நான்கு பாதங்களைக் கொண்டது.

மிருகேந்திரம்

"உலகத்திற்குப் பதியாகிய ஸ்ரீ பரமேச்வரன் பதி பசு பாசம் என முப்பொருளைத் தெரிவிக்கின்றதும், சர்யா கிரியா யோகம் ஞானம் என நான்கு பாதங்களைக் கொண்டதுமான சித்தாந்த சாத்திரத்தை அருளிச் செய்தார்" என்று கூறுதல் காண்க. 53

---

* तन्त्र्यन्ते व्युत्पद्यन्ते अनेनेति तन्त्रम्— शास्त्रमित्यर्थः ।
दर्शनान्तरेभ्योऽधिक फलवत्त्वाच्छिवभेदकत्वेन परत्वाद्वास्य शास्त्रस्य महत्त्वम् ।

* தந்திரம்—சாத்திரம். மற்ற சாத்திரங்களைக் காட்டிலும் அதிகப் பயனைக் கொடுப்பதால் அல்லது சிவபெருமானைப் பற்றிச் சொல்லும் உயர்வால் இச்சாத்திரத்திற்கு மஹத் தன்மை என்பது அறியத்தக்கது.

** अस्य शब्दरूपस्य ज्ञानस्योन्मुखे विरसत्वेऽपि परिणामसुखतया भेषजवत् तस्य ग्राह्यत्वमिति प्रतिपादयितुं पराख्यसूत्रेण तस्य भेषजत्वनिरूपणं करोति ॥ 54

ज्ञानमेतच्छिवक्ष्मोत्थं सङ्गृह्णे (गृह्य) णात्मभेषजम् ।
परिणामसुखं स्वादु विशेषगुणदर्शकम् ॥ सू-५

आत्मभेषजमेतज्ज्ञानं सङ्गृहाण । गृह्यतामित्यर्थः ।

औषधस्य सर्वस्य भूम्युद्भवत्वात् अस्य ज्ञानरूपौषधस्यापि उत्पत्तिभूमिं दर्शयति — शिवक्ष्मोत्थमिति - शिव एव क्ष्मा भूमिः, तदुत्थं तदुत्पन्नमित्यर्थः ।

---

இந்தச் சப்தரூபமான ஞானமானது தொடக்கத்தில் சுவையற்றது போலத் தோன்றினும், முடிவு இன்ப மயமாகவே யிருப்பதால் மருந்து போல் ஏற்றுக்கொள்ளத் தக்கது என்பதை விளக்குவதற்கு, பராக்ய சூத்திரத்தால் அது மருந்தாய் இருக்கும் தன்மையை நிரூபிக்கிறார். 54

*ஜ்ஞாநமேதச் சிவக்ஷ்மோத்தம் ஸங்க்ருஹாணாத்ம பேஷஜம் 1
பரிணும ஸுகம் ஸ்வாது விசேஷகுணதர்சகம் 11 சூ-5

உயிர்க்கு அருமருந்தாகவுள்ள சிவஞானம் ஏற்றுக் கொள்ளப்படட்டும் என்பது பொருள். மருந்துகள் யாவற்றிற்கும் பூமியே தோன்றுமிடமாக இருப்பதால், இந்த ஞானரூபமான மருந்திற்கும் உற்பத்தியிடத்தை விளக்குகின்றார்:

---

** अन्यशब्दरूपस्य (ख)

[சிவநில முளைத்துயர் சிறப்பு ணர்த்திவெம்
பவமறு மருந்தெனப் பட்டு நன்கனம
சுவையொடு முடிவுறிற் சுகம ளித்தரு
ணவையக ளனையவிஞ் ஞானங் கொள்கவே]

पुनः कीदृशम्? परिणामसुखम् — परिणामः – उदर्कः उत्तरकाल सुखकरम्। स्वादु अमृतसमानत्वात्। विशेषगुणदर्शकम् – सर्वज्ञत्वादिगुणानामभिव्यञ्जकम्। औषधपक्षे विशेषगुणस्य स्वास्थ्य[स्य] दर्शकम्। अनेन विशेषणत्रयेणापि ज्ञानस्यास्य अग्राह्यताशङ्का निरस्ता। लोके उदर्कसुखकराणाममृतरूपाणां विशेषगुणसंपादकानां पदार्थानां सर्वैरपि ग्राह्यत्वादिति। आत्मभेषजमित्यस्याभिप्रायः — यथा चक्षुषः प्रकाशनशक्तिः वर्तमाना पशुत्वमलरुद्धा गुरुरूपेण परमशिववैद्येन परमकृपालुना तद्भेषजप्रयोगेण पशुत्वनिरसनद्वारा पुनरभिव्यज्यत इति ॥

---

சிவபெருமானுகிற பூமியினின்று உண்டானது. மேலும் எப்படிப்பட்டதெனில், முடிவில் நலத்தைக் கொடுப்பதும், அமுதத்திற்குச் சமமாக இருப்பதால் சுவையுள்ளதும், முற்றறிவு முதலிய குணங்களைத் தோற்றுவிப்பதும்.-ஆகியது. (மருந்துக்குள்ள விசேஷ குணம் உடல் நலத்தைக் கொடுப்பது) இந்த மூன்று அடைமொழிகளாலும், 'சிவஞானம் ஏற்றுக்கொள்ளத் தக்கதன்று' என்ற ஆசங்கை நிராகரிக்கப்பட்டது.

உலகத்தே முடிவில் நலத்தைக் கொடுப்பனவும், அமுதம் போல்வனவும், சிறந்த குணங்களைத் தோற்றுவிப்பனவுமான பொருள்கள் யாவராலும் ஏற்றுக் கொள்ளத்தக்கவாக இருப்பதால் என்க.

"உயிருக்கு மருந்து" என்று சொல்லியது எற்றுக்கெனின், படலத்தால் மறைப்புண்ட கண், வைத்தியருடைய மருந்தால் ஒளிபெறுவதுபோல, ஆணவ மலத்தால் மறைப்புண்ட உயிர்களின் ஞானகிரியா சக்திகள், பவரோக வைத்தியனும் பரமகருணமூர்த்தியும் குருவடிவினனுமான பரமேச்வரன் ஞானமென்ற மருந்தை அருள, பசுத்தன்மை நீங்கிச் சக்திகள் விளங்குகின்றன என்னும் வாய்மையை விளக்க என்பது கண்டுகொள்க.

तदुक्तं शिवधर्मोत्तरे —

व्याधीनां भेषजं यद्वत् प्रतिपक्ष[ः] स्वभावतः ।
तद्वत् संसारदोषाणां प्रतिपक्षः शिवस्स्मृतः ॥
ओ[औ]षधस्यच सामर्थ्यात् यथादोषं विसर्जयेत् ।
*तथात्माज्ञानदोषंच ज्ञानमेषा[मेव]न्निवर्तते[येत्] ॥
तस्मात् स पण्डितः शान्तस्तपस्वी विजितेन्द्रियः ।
शिवज्ञानस्य सम्बन्धात् भावमालोच्यमुच्यते ॥ इति ॥ 55

इयता प्रबन्धेन ज्ञानस्य वक्तव्यतां प्रतिज्ञाय, तस्य प्रयोजनमुपवर्ण्य, त[द्]द्वैविध्यमभिधाय, तस्य बहुतन्त्रभेदाकारितां प्रसाध्य, सर्वैरवश्यग्राह्यत्वंच समर्थितम् ।

---

சிவதருமோத்தரம்

"நோய்களுக்கு மருந்து பகையாதல் போல பிறவிக்கு ஏற்பட்ட குற்றங்களுக்குச் சிவபெருமான் பகைவராவார். எவ்வாறு மருந்தின் ஆற்றலால் நோய் நீங்குதலுறுகிறதோ, அவ்வாறே சிவஞானமும் உயிருக்கு ஏற்பட்ட அஞ்ஞானம் என்ற குற்றத்தை நீங்கச் செய்கிறது. ஆதலின் பண்டிதனும் சாந்தனும் தவத்தோனும் ஐம்புலன்களை வென்றவனுமான ஞானி சிவஞான சம்பந்தத்தால் பிறவித் துன்பத்தை ஆய்ந்தறிந்து அதனினின்றும் வீடு பெறுகின்றான்" என்று கூறும். 55

இதுகாறும் ஞானம் சொல்லத்தக்கது என்பதைக் கூறிப் பயனையும் விளக்கி, அஃது இருவகைத்தாம் என்பதையும் உணர்த்தி, அந்த ஞானம் பல ஆகம

---

* (ख) तथात्मज्ञानभैषज्याद्दोषंच विनिवर्तते ।

इदानीमनेन शिवज्ञानेन प्रतिपाद्यानां पति पशु पाशरूपाणां त्रयाणामपि पदार्थानां सद्भावावेदकतया अनुमानं प्रमाणयितुं प्रथममनुमानस्वरूपचतुष्टयं मतङ्गसूत्रेण गृह्णाति ॥ 56

धर्मेण साध्यते धर्मी क्वचित्कार्येण कारणम् ।
कारणेन क्वचित्कार्यं क्वचिदाम्नायदर्शनात् ॥ सू-६

अत्र प्रथमपादेन सामान्यमिति अनुभयात्मकमिति च लब्धसंज्ञाद्वयमनुमानमुक्तम् । धर्मेण - गन्धादिरूपेण अधिष्ठेयपदार्थेन, धर्मी - पृथिव्यादिरूपः आधाररूपः पदार्थः

---

வடிவில் உள்ளவற்றையும் சுட்டி, எல்லோராலும் அஃது ஒருதலையாக ஏற்றுக் கொள்ளத்தக்கது என்பதையும் வற்புறுத்தினர் ஆயிற்று என்க.

இனி, இச்சிவஞானத்தால் சொல்லப்படும் பதி பசு பாசம் என்ற முப்பொருளின் உண்மையைத் தெரிவிக்கு மாற்றால் அனுமானத்தைப் பிரமாணமாக்குவதற்கு முதலில் அனுமான ஸ்வரூப சதுஷ்டயத்தை மதங்க சூத்திரத்தினின்று எடுத்துரைக்கின்றார்:

*தர்மேண ஸாத்யதே தர்மீ க்வசித் கார்யேண காரணம் ।
காரணேன க்வசித்கார்யம் க்வசிதாம்நாயதர்சநாத் ॥ சூ-6

முதல் பாதத்தால் ஸாமான்ய மென்றும் அனுபயாத்மக மென்றும் இருபெயருடைய அனுமானம் சொல்லப்பட்டுள்ளது. பொருளிலிருக்கின்ற வாசனை முதலிய தருமத்தால் அதனைத்தாங்கியுள்ள ப்ருதிவீ முதலிய தருமி அறியப்படுகிறது. காரணலிங்கமும்

---

*[சாருறு தருமந் தன்னாற் றருமியங் கோரி டத்துக்
காரண மதனாற் றேன்றுங் காரிய மோரி டத்துக்
காரிய மதனான் மூல காரண மோரி டத்துச்
சீரிய வுரையாற் சில்ல தெரிவவா மோரி டத்து.]

साध्यते – ज्ञायते । कार्यकारणरूपेण व्यतिरेकेण धर्मधर्मि स्वभावमात्र*प्रतिबन्धमूलत्वादिदमनुभयात्मकं सामान्य-मित्युच्यते ।

तथा योगपादे —

"शेषवत् पूर्ववच्चान्यत् सामान्यमपरं स्मृतम्"

एतेनानुमानेन क्वचित् पतिपदार्थप्रकरणे शक्तिरूप-धर्मेण **शक्तः पतिः धर्मी साध्यते । यथा वा पशुपदार्थ-

---

இல்லாமல் இங்குத் தரும[1] தருமி சம்பந்தத்தை மாத்திரம் [2]வியாப்தியாகக் கொண்டிருப்பதால் அநுபயாத்மகம்[3] என்றும் (காரிய காரணமில்லாதது) ஸாமான்யம் என்றும் சொல்லப்படும் அநுமானம் இது.

யோகபாதத்தில் :—

அநுமானம் ஒன்று சேஷவத்[4] என்றும், மற்றொன்று பூர்வவத்[5] என்றும், பிறிதொன்று ஸாமான்யமென்றும் சொல்லப்படுகின்றன.

இந்தச் சூத்திரத்தில் முதல் பாதத்தில் உள்ள அநுமானத்தால் பதி பதார்த்தத்தைக் கூறுமிடத்தே சக்தி ரூபமான தருமத்தைக் கொண்டு சக்தனை பதி ரூபமான தருமி சாதிக்கப்படுகிறது. அவ்வாறே,

---

* प्रतिबन्धः व्याप्तिः ।      ** (ख) शक्ति पतिः ।

1 எந்தப் பொருளில் தருமம் இருக்கின்றதோ அது தருமி எனவும் எது தருமியோ அது தர்மத்தை உடையது என்பதும் வியாப்தியாகும்.

2 நிலையான பிரிக்க முடியாத தன்மை வாய்ந்த ஸம்பந்தம் வியாப்தி எனப்படும்.

3 பிருதிவியிலிருக்கும் கந்தம் பிருதிவியின் காரியமன்று; பிருதிவியிலிருக்கும் கந்தத்தைக் குறித்துப் பிருதிவியும் காரணமன்று. ஆதலால் இஃது அநுபயாத்மகம், ஸாமான்யம் அநுமானமாகும்.

4 சேஷவத = காரியத்தால் காரணத்தை அநுமானித்தல்.

5 பூர்வவத் = காரணத்தால் காரியத்தை அநுமானித்தல். பூர்வம் = காரணம்.

प्रकरणादौ ज्ञानक्रिया लक्षणेन धर्मेण पशुपदार्थलक्षणो धर्मि[र्मी] साध्यते । यथा गन्धादेः कस्तूरिकादिः ॥ 57

तथा द्वितीयपादेन कार्यलिङ्गमिति विशेषवदिति च लब्धसंज्ञाद्वयमनुमानमुक्तम् । क्वचित कार्येण - क्वचित तद्वत् पदार्थप्रकरणे पृथिव्यादि रूपकार्येण तन्मात्रादिमायान्तं कारणं साध्यते ।

यथा मदगादिभिः [गन्धादिभिः] मद[त्त]गजानुमानम् ।
*तथा —

"स्थूलावृत्त शकृत्पुञ्जभूपृष्टं मदगन्धि च ।
स्तम्भशय्यादिभिश्चिह्नै रत्रासि(सी) न्मत्तवारणः ॥
अतीतोह्यनुमानेन साध्यः शेषवता बुधैः ॥" इति॥ 58

---

பசுப்பொருளை உணர்த்துமிடத்தே அறிவு முதலிய தருமத்தால் பசுரூபமான தருமி சாதிக்கப்படுகிறது. உதாரணம் வாசனையினின்று கஸ்தூரியுண்மை அறியப் படுதல். 57

இரண்டாம் பாதத்தால், காரியலிங்கமென்றும், விசேஷவத்[1] என்றும் இருபெயருடைய அனுமானம் சொல்லப்பட்டது. பதார்த்தப் பிரகரணத்தில் பிருதிவி முதலிய காரியத்தால் தன்மாத்திரை முதலாக மாயை இறுதியாகவுள்ள காரணம் சாதிக்கப்படுகிறது.

மதநீரின் வாசனையால் மதயானை யுண்மையை அறிந்து கொள்வது போல்வது.

யோகபாதத்தில் —

பருத்த உருண்டை உருண்டையான விஷ்டைகளின் கூட்டங்களாலும், மதநீரின் வாசனையாலும், கட்டுத்தறி, படுத்திருந்த இடம் முதலிய அடையாளங் களாலும், யானை அது போது இல்லாவிட்டாலும் அஃது அங்கே இருந்தது என்று காரியலிங்கம் விசேஷானுமானம் கூறப்பட்டது. 58

---

* (ख) योगपादे

1 விசேஷவத் என்பதும் சேஷவத் என்பதும் ஒரு பொருட்கிளவி.

तृतीयपादेन कारणलिङ्गमिति पूर्ववदिति च लब्ध-संज्ञाद्वयमनुमानमुक्तम् । क्वचिद्भोगपदार्थप्रकरणे सुकृत-दुष्कृतानुष्ठानेन आगमसिद्धकारणभावेन कार्यं आमुष्मिक-भोगपदार्थः सुख [रूपो] दुःखरूपो पा (वा) नुमीयते । उभयपदार्थानुष्ठानेन सिद्धिमुक्तिलक्षणं च फलमनुमीयते । यथा विशिष्टघनादिभिः कारणैर्वृष्ट्यादि कार्यमनुमीयते ।

यथात्रैव योगपादे —

कृष्णाञ्जननिभैरुच्चैः सागोपैर्निविडैर्घनैः ।
निर्विघ्नैर्विमलै(विपुलै)स्स्निग्धैस्तटिन्निर्घोष संकुलैः ॥
प्रावृट्समय संप्राप्तैर्दृष्टैर्वृष्टिः प्रमीयते ।
एवं पूर्ववता साध्यमनुमानेन*वृट् सदा ॥ इति ॥ 59

மூன்றாவது பாதத்தால், காரணலிங்கம் என்றும் பூர்வவத் என்றும் இருபெயருடைய அனுமானம் சொல்லப்பட்டது. உதாரணம்: போக பதார்த்தங்களைக் கூறுமிடத்தே, சாத்திரங்களில் சொல்லப்பட்ட பயனுக்குக் காரணமாக உள்ள நல்வினை தீவினையைச் செய்வதால் மறுமையில் போக்கியப் பொருளாகவுள்ள சுகரூபமாகவோ, துக்கரூபமாகவோ உள்ள காரியம் உய்த்துணரப்படுகிறது. இருவினையையும் அனுபவித்ததால் முக்தி லக்ஷணமான பயன் அறியப்படுகிறது. நீருண்ட மேகங்களால் மழை முதலிய காரியம் அனுமானிக்கப்படுகிறது.

யோகபாதத்தில் :—

"கறுத்த அஞ்சனத்துக்கு ஒப்பானவையும், பெருமிதத் தோற்றத்தோடு கூடியவையும், இந்திர[1] கோபங்களோடு கூடியவையும், நீர் நிரம்பியவையும், தடையற்றவையும், எங்கும் பரவியவையும், மின்னல் இடி

* वृट् प्रावृडित्यर्थः

1 தம்மலப்பூச்சி என்பர்.

चतुर्थेन पादेन आगमानुमानमुक्तम् । क्वचित् – यत्र त्रिविधस्यापि कार्यकारणधर्मस्वरूपे(प) प्रतिबन्धस्यापगमः, तत्र विषये आत्मा(म्ना)यस्य दर्शनात् आगमसिद्धेनानुमानेन साध्यते । यथा मन्त्रमन्त्रेश्वरादीनां बैन्दशरीरादिरित्यनुमीयते ॥ 60

ननु धर्मः शौक्ल्यादिरनेकत्र वर्तमानो नियतधर्मिणं व्यभिचरतीति कथं ततो विशिष्टधर्मिसिद्धिः । तथा कार्यमपि वह्न(ह्ने)श्चक्रा(क्र) मूर्धादेर्धूमादि दृश्यते । कारणमपि धनादि कार्यं वृष्ट्यादिकं कदाचित्करोति कदाचिन्नेत्य‡नैकान्तिकत्वात् कथं ताभ्यां कारणकार्ये साधयितुं शक्येते इति ।

---

யோடு இயன்றவையும், கார்காலத் தொடக்கத்தே வந்தவையும், கட்புலனானவையும் ஆகிய மேகங்களால் மழை அறியப்படும் என்பது. இது காரணானுமானத்தால் காரியம் அனுமானித்தல்'' என்று கூறப்பட்டுள்ளது. 59

நான்காம் பாதத்தால் ஆகமானுமானம் சொல்லப்பட்டது. எங்குக் காரியத்தாலோ காரணத்தாலோ தருமத்தாலோ அனுமானம் சொல்லப்படவில்லையோ, அங்கு சப்தப்ரமாணம் காணப்படுவதால் ஆகமசித்தமான அனுமானத்தால் காரியம் சாதிக்கப்படுகிறது.

உதாரணம்:— மந்திரமந்திரேச்வரர்களுக்குப் பிந்துவினின்று தோன்றிய தனுகரணங்கள் உண்டு என்பது ஆகமானுமானத்தால் அறியப்படுகிறது 60

வெண்மை முதலிய தருமம் பலபொருளிலிருப்பதால் அத்தருமத்தைக் கொண்டு நியதமான தருமியை அனுமானிப்பது எங்ஙனம்? அவ்வாறே, அக்னியினு

---

‡ एकः अन्तः यस्य सः एकान्तः । एकान्त एव ऐकान्तिकः । न ऐकान्तिकः अनैकान्तिकः ॥ साध्याभाववद्वृत्तिः अनैकान्तिकः हेतुरित्यर्थः॥

अत्रोच्यते —

न धर्ममात्रस्यास्य हेतुत्वमिष्यते । अपितु अव्यभिचार-विशिष्टधर्मिणः कस्यचिदेव विशिष्टधर्मस्य तथा स्वभावत्वेन निश्चयात् । न तु तस्य व्यभिचारस्सम्भवति । यस्य व्यभिचारः पाण्डुत्वादेः न तस्य हेतुत्वम् । तस्य चाभ्यासहेतु-नियतधर्म(र्मि)गत विशेषग्रहणेन व्यभिचाराभावाद्धेतुत्वमेव ॥ 61

---

டைய காரியமாகிய புகை, அக்னியில்லாத சக்கரவாகப் புள்ளின் தலையினின்றும் அறியப்படுகிறது. காரணமான மேகம் காரியமாகிய மழை முதலியவற்றைச் சில பொழுது தருகிறது சில பொழுது தருகிறதில்லை என்ற [1]அநைகாந்திகக் குற்றமிருப்பதால், அவற்றைக் கொண்டு காரண காரியங்களைச் சாதித்தல் எவ்வாறு இயலும் எனின், கூறுதும்:

தருமத்திற்கு மாத்திரம் காரணம் கூறுதல் பொருந்தாது. ஆனால் அநைகாந்திகமென்ற குற்றமில்லாத தருமியினுடைய விசேஷமான தருமத்திற்குத்தான் காரணத்தன்மையுண்டு. அத்தகைய தருமத்திற்கு ஒரு பொழுதும் அநைகாந்திகம் என்ற குற்றம் நிகழ்வதில்லை.

வெண்மை முதலியவைகளுக்கு வியபிசாரம் வருவதால் அவை காரணமாகா. காரணமானது பல தடவையுள்ள பழக்கத்தால் ஒருதலையாக ஒரு பொருட்கண் இருப்பதாக அறியபபடுமாயின், அஃது ஒருகாலும் அநைகாந்திகம் என்று குற்றப்படுவதில்லையாதலால் காரணமாகவே ஆகும். 61

---

1 ஒரு தலையில்லது பிறழ்வுடையது அநைகாந்திகம்.

तदुक्तम् — "न सुष्टुविवेचितो धर्मिणं व्यभिचरतीति"

तथा कारणमपि मेघादि। यदवश्यं कार्यजनकस्वभावं न तद्ब्रह्मणापि प्रतिबन्धुं शक्यम्। यत्तु अजनकस्वभावं न तदिन्द्रेणापि जनकं शक्यं कर्तुमिति न सुष्टुविवेचितं कारणं कार्यं न व्य(र्यव्य)भिचरतीति।

तदुक्तम् —

"यदभावि न तद्भावि यद्भावि न तदन्यथा।
इति चिन्ताविषघ्नोऽयमगदं(दः)किन्न पीयते॥" इति॥ 62

एवं वक्ष्यमाणपत्यादिपदार्थनिरूपणोपोद्घाततया षट् सूत्राणि गृहीतानि।

यथा "चिन्तां प्रकृतसिद्ध्यर्थामुपोद्घातं प्रचक्षते"

इति उपोद्घातप्रकरणम्॥ 63

---

"நன்கு தெளியப்பட்ட தருமம் ஒருநாளும் தருமியை விட்டு நீங்குதலில்லை." இவ்வாறே மேகம் முதலிய காரணமுங் கொள்க. யாது காரணம் தவருது காரியத்தைத் தோற்றுவிக்குமோ, அக்காரணத்தின் ஆற்றலைப் பிரமனுலும் தடுக்க முடியாது; எது காரியத்தைத் தோற்றுவிக்கும் ஆற்றலிலதோ, அதனுக்கு அவ்வாற்றலை இந்திரனுலும் படைத்தல் முடியாது என்றதனுல், நன்கு ஆராய்ந்து அறியப்பட்ட காரணமும் காரியமும் வியபிசாரத்தை அடைதலில்லை என்க.
பிரமாணம் :—

எது இல்லையோ அஃது உண்டாவதில்லை; எது உளதோ அது மாறுவதில்லை என்ற கவலையாகிற விஷத்தைப் போக்கும் இம்மருந்து பருகப்படவில்லையா என்ன? (எல்லோராலும் பருகப்படுகிறது என்பது பொருள்.) 62

एवं पदार्थसिद्धये अनुमानचतुष्टयं प्रमाणतयोपन्यस्य प्रथमं तावत् पतिपदार्थ(र्थं) *विशेषवतानुमानेन साधयितु(तुं) विश्वसारोत्तरसूत्रं सङ्गृह्णाति ॥

अचेतनस्य मायादेः प्रवर्तकतया पतिः ।
सिद्धः सर्वार्थवित्कर्ता व्यापकः सततोदितः ॥ सू--७

सर्वार्थवित् – सर्वज्ञः, कर्ता – सर्वकर्ता, व्यापकः – सर्वव्यापी, सततोदितः - नित्यमुक्तः, पतिः अचेतनस्य –

---

சொல்லப்போகின்ற பதி, பசு, பாசமென்ற முப்பொருளையும் விளக்குவதற்காக இங்கு ஆறு சூத்திரங்கள் முன்னுரையாக எடுத்துக் கூறப்பட்டன.

"சொல்ல வேண்டியது சித்திப்பதற்காக உண்டான சிந்தனையை முன்னுரை என்று சொல்லுகிறார்கள். 63

முன்னுரை பிரகரணம்

இவ்வாற்றால், பதி பசு பாசம் என்ற முப்பொருளையும் சாதிப்பதற்கு நான்கு வகை அனுமானங்களைப் பிரமாணமாக விளக்கிக் கூறி, முதற்கண் பதிப் பொருளைக் காரியலிங்க அனுமானத்தால் சாதிப்பதற்கு விச்வஸாரோத்தரத்தில் கூறிய சூத்திரத்தை எடுத்துக் கொள்கிறார்.

*அசேதனஸ்ய மாயாதே: ப்ரவர்த்தகதயா:1
ஸித்த: ஸர்வார்தவித் கர்த்தா வ்யாபக: ஸததோதித: ll
சூ–7

---

*कार्यलिङ्गानुमानेनेत्यर्थः ।

* [அழிந்திடா மாயைமூல வசேதன வுலகந் தோன்றி
வழங்கையால் யாவுங் காணும் வலியொடு நிறைந்தோ னுகி
யெழுந்தொழி யாது நின்றுங் கிலங்குறு கருத்தாவாக
மொழிந்திடு பதியதற்கு மொழிந்திடப் படுவ னன்றே.]
(சதமணிமாலை]

जडस्य, मायादेः - माया - महामायाप्रमुखस्य, जगतः - [लोकस्य, प्रवर्तकतया] प्रवृत्तिजनकतया, सिद्धः-परिज्ञातः। 64

एतदुक्तं भवति — मायादेरचेतनस्य प्रवृत्तिः चेतनाधिष्ठानपूर्विका, अचेतनप्रवृत्तित्वात्, रथादिप्रवृत्तिवदिति प्रव(वृ)त्तिरूपकार्यलिङ्गानुमानेन तत्कारणतया पतिसिद्धिरिति। एवं क्षित्यादिकं सकर्तृकं कार्यत्वात्, घटादिवदित्याद्यनुमानेन निरुद्धज्ञानक्रियाशक्तिकपशुविलक्षणतया सर्वज्ञपतिसिद्धिरूहनीया ॥ 65

---

முற்றறிவு உள்ளவரும், எல்லாவற்றையும் ஆக்குகின்றவரும் எங்கும் நிறைந்தவரும் நித்தியமுத்தருமான பதி, சடப்பொருளான குண்டலினி முதலிய உலகத்தை தொழிற்படுத்துவதால் உண்டென்று அறியப்படுகிறார். 64

இஃது உணரத்தக்கது— அசேதனமாகிய மாயை முதலியவற்றின் தொழிற்பாடு சேதனனைச் சார்ந்துள்ளது, அசேதனத்தின் தொழிலாக இருப்பதால், அசேதனமான தேர் முதலியவற்றின் தொழிலைப் போல் என்று தொழிற்படுதல் என்ற காரியலிங்கானுமானத்தால் காரணமான பதிப்பொருள் எய்துகிறது; எய்தவே, உலகம் கருத்தாவை உடையது, காரியப் பொருளாகையால்; 'குடம்போல' என்ற அனுமானத்தால் மலத்தால் தடைபட்ட ஞான கிரியா சக்திகளை உடைய ஆன்மாக்களைக் காட்டிலும் மிக்க சக்தி வாய்ந்த எல்லாம் அறிந்த பதிப்பொருள் உண்டென்பது உணரத்தக்கது. 65

*वायव्ये —

"अस्ति कश्चिदपर्यन्तरमणीय गुणाश्रयः ।
पतिर्विश्वस्य निर्माता पशुपाशविलक्षणः ॥" इति ।

पौष्करे —

"अचेतनं जगद्विप्राश्चेतनप्रेरणं विना ।
प्रवृत्तौ वा निवृत्तौ वा न स्वतन्त्रं रथादिवत् ॥
योऽत्र प्रवर्तकः शक्तः स पतिः परिपठ्यते ।
विना(वा)दाध्यासितं विश्वं विश्ववित् कर्तृपूर्वकम् ।
कार्यत्वादावयोः सिद्धं कार्यं कुम्भादिकं यथा ॥" इति ॥

---

வாயவீயத்தில் :—

"எல்லையற்ற விரும்பத்தக்க குணங்களுக்கு உறைவிடமானவரும், பசு பாசங்களினின்று வேறுபட்டவரும், உலகத்தைப் படைக்கின்றவருமான பதி ஒருவர் உண்டு" என்று குறிக்கப்பட்டுள்ளது.

பௌஷ்கரத்தில் :—

"தேர் முதலியன சேதனப் பொருளின் தூண்டுதல் இல்லாது எவ்வாறு இயங்குவதில்லையோ, அவ்வாறே சடமான உலகமும் சேதனப் பொருளின் தூண்டுதலன்றி எவ்வாற்றாலும் சுதந்திரமாக இயங்குவதில்லை. ஆதலால், இவ்வுலகவிஷயத்தில் எவர் பிரவர்த்தகரோ அவரே ஞானகிரியா சக்திகளை உடைய பதி என்று சொல்லப்படுவர். கர்த்தாவை உடையதா இல்லையா என்ற விவாதத்திற்கு இடமான இந்த உலகம் எல்லாமறிந்த கர்த்தாவைக் காரணமாக உடையது, கார்யமாக இருப்பதால். வாதிப் பிரதிவாதிகளுக்குச் சித்தமான குடம் முதலிய காரியம் போல" என்று விரிவாகக் கூறியுள்ளதை அறிக.

---

* (ख) वायवीये

मतङ्गे —

एवं हि परतन्त्रत्वाज्जगतोऽस्याखिलस्य तु ।
प्रवृत्तिर्दृश्यते यस्मात् तस्मात् कर्ता महेश्वरः ॥ 66

पतिः - शिवभट्टारकः । कथमवसीयते ? पातीति पतिरित्यनेन शब्देन कारणमात्रमेवावगम्यते । स विशिष्ट एवेति । 67

एवं लक्षणप्रमाणाभ्यां वस्तुसिद्धिरिति न्यायेन प्रमाण सिद्धस्य पते(त्यु)रसाधारणधर्मरूपं लक्षणं पराख्यसूत्रेणाह —

द(क्) क्रियात्मकमैश्वर्यं यस्य तद्भावपूर्वकम् ।
ईश्वरस्येतत्समन्तव्यः (ईश्वरः सोऽत्र मन्तव्यः)
शक्तिद्वययुतः प्रभुः ॥ सू--८

---

ஸ்ரீ மதங்கபாரமேச்வரத்தில் :—

"பரதந்திரமான இவ்வுலகம் முழுதும் தொழிற்படுவதால் இதைத் தொழிற்படுத்துகின்றவர் ஸ்ரீ பரமேச்வரன் ஆவார்" என்று சொல்லப்படுகின்றது. 66

பதி=பரமேச்வரன்

மூல சூத்திரத்தில் கூறிய பதி என்ற சொல்லுக்குப் பரமேச்வரன் என்று பொருள் எவ்வாறு கூறப்படுகிறது. "ரக்ஷிக்கின்றார்" என்ற காரணத்தால் "பதி" என்பதால் காரணமானவர் என்பதை மாத்திரம் கூறுமே யன்றி, குறிப்பாகப் பரமேச்வரன் ஒருவரையே குறிக்காது எனின், கூறுவோம்: ரக்ஷகத்தன்மையோடு கூடியவர் அவரே என்றறிக. 67

இதுகாறும், லக்ஷண பிரமாணங்களால் வஸ்து ஸித்தி என்ற நியாயத்தால் அனுமானப் பிரமாணத்தைக் கொண்டு பதிப்பொருளைச் சாதித்து மேலும்

यस्य दृ[क्]क्रियात्मकं - ज्ञानक्रियास्वरूपं, ऐश्वर्यं - ईश्वरत्वं, दात्तपूर्वकं - पूर्वं न विद्यते दाता यस्य तत् दात्तपूर्वकं, पूर्वं केनापि न दत्तं, स्वाभाविकमित्यर्थः । स शक्तिद्वययुतः - ज्ञानक्रियाशक्तियुक्तः । ज्ञानशक्तेः प्रयोजनं जगद्विषयज्ञानम् । क्रियाशक्तेस्तु जगत्कारणम्[त्वम्] ।

---

அப்பதிப்பொருளுக்கு அசாதாரண தரும ரூபமான லக்ஷணத்தைப் பராக்ய சூத்திரத்தால் எடுத்துக் கூறுகிறார் :

* த்ருக் கிரியாத்மகமைச்வர்யம் யஸ்ய தத்தாத்ரபூர்வகம் 1
ஈச்வரஸ்ஸோzத்ர மந்தவ்ய: சக்தித்வயயுதஃ ப்ரபுஃ 11 சூ-8

எவருக்கு, ஞானகிரியா ஸ்வரூபமான ஈச்வரத் தன்மை முன்பு எவராலும் கொடுக்கப்படாததோ, (இயல்பாகவே அமைந்தது என்பது பொருள்) அவர், ஞானசக்தி கிரியாசக்தியோடு கூடியவர்.

உலகத்திற்குக் கருணை செய்வதற்கான உபாயங்கள் எல்லாவற்றையும் இறைவன் அறிவது ஞானசக்தியின் பயன். உலகத்திற்குக் காரணமாயிருப்பது கிரியாசக்தியின் பயன்.

---

* [கெடுத்திடா துயர்ந்த ஞானக் கிரியையாம் வாழ்வொ ருத்தர்
கொடுத்திடா துடையான் யாவன் கூறிலிங் கவனையன் றனே
தடுத்திடா வலியி ரண்டுந் தரித்துள ளுகி யெங்கு
மடுத்துறு மீச னென்ன வறிந்திடப் படுவ னன்றே ]

तदुक्तं रत्नत्रये —

"*ज्ञानशक्त्या च विज्ञानं क्रियाशक्त्या कृतं जगत् ॥"

इति । 68

प्रभुः -- **स्वतन्त्रः अनीश्वरः, ईश्वरः, अत्र -- अस्मिन् शास्त्रे, मन्तव्यः -- ज्ञातव्यः ।

अत्र स्वभावनिर्मलदृ[क्]क्रियालक्षणशक्तिमत्त्वं पतिलक्षणमित्युक्तं भवति । 69

तत्र शक्तिमत्त्वमित्युक्ते मले अतिव्याप्तिः, तदर्थं दृ[क्]क्रियालक्षणेति । एतावत्युक्ते बद्धात्मन्यतिव्याप्तिः,

---

இரத்தினத்திரயத்தில் :—

"பதி ஞானசக்தியால் உலகத்தை அறிகிறார்; கிரியாசக்தியால் உலகத்தைப் படைக்கிறார்" என்று கூறப்பட்டுள்ளது. 68

ப்ரபு= ஸர்வதந்திர சுதந்திரர். தமக்கு மேல் தலைவர் இல்லாதவர் பரமேச்வரன் என்று இந்தச் சித்தாந்தசாத்திரத்தில் அறிந்துகொள்ளவேண்டியது. அஃதாவது இயல்பாகவே நிர்மலமான ஞானகிரியா ரூபமான சக்திகளை உடைத்தாயிருப்பது பதிப் பொருளின் இலக்கணம் என்று சொல்லப்பட்டமை போதரும். 69

"சக்தியை உடைத்தாயிருப்பது" என்று மாத்திரம் பதிப்பொருளுக்கு இலக்கணம் கூறியிருப்பின், மலத்தில் அதிவியாப்தி வரக்கூடும்; அதுபற்றியே ஞான கிரியா சக்திரூபம் என்று கூறப்பட்டுள்ளது. மலத்திற்குச் சக்தியிருப்பினும் ஞான கிரியா ரூபமான சக்தி ஆகாது. அவ்வகையால் மாத்திரம் கூறின், பெத்தான்மாக்

---

* (ख) ज्ञानशक्त्या विजानाति क्रियया कुरुते जगत् ।

** न तु ईश्वरान्तरप्रेर्यं इत्यर्थः ।

तदर्थं निर्मलेति । तावत्युक्ते प्रसादमुक्तेष्वतिव्याप्तिः, तदर्थं स्वभावेति । तेषां शक्तिनैर्मल्यस्य शिवप्रसादाधीनतया स्वाभाविकत्वाभावात् । 70

तदुक्तं पराख्ये —

चिद्रूपमात्मनो रूपं दृ[क्]क्रियागुणलक्षितम् ।
ज्ञानरूपस्थितस्यापि स्वरूपं दृ[क्]क्रियात्मकम् ॥ 71

---

களிடத்தில் அதிவியாப்தி வரும்; அதனை நீக்கவே, 'நிர்மலமான ஞான கிரியா ரூபமான சக்தி' என்று கூறப்பட்டுள்ளது. படவே, பெத்தான்மாக்களும் மல பெத்தராக இருப்பதால், அவர்கள்பால் நிர்மலமான சக்தி இல்லை என்று பெறப்பட்டு, அதிவியாப்தியும் இல்லாது போயிற்று. அவ்வகையால் கூறின், அனுக்கிரஹத்தால் முக்தி பெற்றவர்களிடமும் நிர்மலமான ஞான கிரியா ரூபமான சக்தி இருப்பதால் அதிவியாப்தி எய்தும்; ஆதலின் அக்குற்றத்தை நீக்க 'இயல்பாக' என்று அடைமொழி புணர்க்கப்பட்டது. முத்தான்மாக்களுக்கு நிர்மலமான சக்தி சிவபெருமான் திருவருளால் எய்துதலின், இயற்கையாக அஃது அமைந்ததில்லை என்று அமைதி காண்க. 70

பராக்கியத்தில் :—

"உயிரின் இயல்பும் ஞான மயமானது; ஞான கிரியா சக்திகளோடு கூடியது. ஞானவடிவினரான பரமேச்வரனுக்கு, இயல்பாக அமைந்த நிர்மலமான ஞான கிரியா சக்தியை உடையராயிருத்தலே இலக்கணம்" என்று கூறப்படுவது காண்க. 71

वक्ष्यमि(ति)च —

कर्तृशक्तिरणोर्नित्या विश्वीचेश्वरशक्तिवत् ।

तमश्छन्नतयार्थेषु नाभाति निरनुग्रहा ॥

पौष्करे—

''ज्ञानक्रिये शिवे प्रोक्ते सर्वार्थे निर्मले परे'' इति च । 72

ननु लक्षणप्रमाणाभ्यां सर्वज्ञत्वेन सर्वकर्तृत्वेन च पतिः साधितः । तत्र कर्तृत्वमूर्तिमन्तरेणानुपपन्नमित्याशङ्क्य, तस्य मूर्तिरपि स्वशक्तिरेवेति प्रतिपादयितुं सार्धद्वयमतङ्गसूत्रं गृह्णाति

---

இந்நூலைத் தொகுத்த ஸ்ரீ சுவாமிகள் அவர்களும் 'உயிரின் ஞான கிரியா சக்தியானது ஈச்வரனுடைய; ஞான கிரியா சக்தி போல் முதல் முடிவு இல்லாதது, எங்கும் நிறைந்தது. ஆயின், உயிரின் ஞானசக்தி அநாதிமலத்தால் தடைபட்டிருத்தலால் ஸ்ரீ பரமேச்வரன் அனுக்கிரஹமின்றிப் பொருளை அறிவதில்லை'' என்று பின்னர்க் கூறுகின்றார்.

பௌஷ்கரம்,

''சிவபெருமானிடத்து, மல, கர்ம, மாயா ஸம்பந்தமில்லாத எல்லாவற்றையும் அறியக் கூடிய ஞான கிரியா சக்திகள் சொல்லப்பட்டுள்ளன'' என்று கூறுகின்றது. 72

இலக்கணத்தாலும், அனுமானப் பிரமாணத்தாலும், எல்லாப் பொருளையும் ஒரு சேர அறியும் ஞானத்தாலும் எல்லாச் செயலையும் ஒரு சேரச் செய்யும் கிரியையாலும் பதி உண்மை துணியப்பட்டது அன்றே? அதில் கருத்தாவாக இருக்குந்தன்மை வடிவோடு கூடியன்றி நிகழாது என ஐயுற்று, அவருடைய வடிவும் திருவருட்சக்தியே என்று வலியுறுத்தற்கு, ஸ்ரீ மதங்க பாரமேச்வரத்தினின்று இரண்டரைச் சூத்திரங்களை அமைத்துக்காட்டுகிறார்.

अथ पत्युरधिष्ठानं स्वशक्तिकिरणात्मकम् ।
तस्यां दिवि सुदीप्तात्मा निष्कम्पोऽचलमूर्तिमान् ॥ सू-९

अथ शब्दः पटलादौ मङ्गलार्थः । पत्युः- परमेश्वरस्य पतिपदार्थत्वेन सङ्गृहीतस्य, अधिष्ठानं आधिक्येन सर्वकार्यव्याप्तया स्थीयते यत्तदधिष्ठानं, विशिष्टस्थानमेव प्रोच्यत इत्यनुषङ्गः ।

तच्च तस्य *विद्येश्वरादीनामिव न व्यतिरिक्तं, अपितु स्वशक्तिकिरणात्मकं - स्वशक्तिरेव ज्ञानक्रियात्मिका किरणास्तदात्मि(त्म)कं तत्स्वरूपम् । सवितृरुचिरिव दाहप्रकाशादि कर्तृत्वात् तदात्मिकाः शक्तय एव तत्राधिष्ठेयत्वेनोपचर्यन्त इति ॥ 73

---

* அத பத்யுரதிஷ்டாநம் ஸ்வசக்தி கிரணாத்மகம் ।
தஸ்யாம் திவி ஸுதீப்தாத்மா நிஷ்கம்போऽசல மூர்த்திமான் ॥ சூ-9

'அத' என்பது படலத்தின் ஆரம்பத்தில் மங்களத்தைக் குறிக்கும் சொல்லாகும். பதி என்ற சொல்லுக்குப் பொருளாகத் தமைக் கொண்ட பரமேச்வரனுக்கு, எது எல்லாக் காரியங்களிலும் பரவி நிற்கிறதோ, அது ஆதாரமானது. அது விசேஷ குணங்களோடு கூடிய ஸ்தானமாகச் சொல்லப்படுகிறது. அந்த அதிஷ்டானமும் அவருக்கு வித்யேச்வரர் முதலானோர்க்குப் போல வேறுபட்டதன்று. ஆனால் ஞான கிரியா ரூபமான சக்தியே அவருக்கு அதிஷ்டான

---

* (ख) विद्या विद्येश्वर

* பதியதிட் டானந் தன்சீர்ப் பரையெனப் பட்ட சக்தி
முதிரொளிப் படிவ மாக மொழிந்தவச் சிதாகா சத்தில்
விதிர்விதிர்ப் பின்றி நின்று விளங்குறு மூர்த்தி மானுத்
துதிகொளப் பதிதா னென்பர் தோமினூல் வாய்மை கண்டோர்.

(சதமணிமாலை)

यावतञ्च (ये तावत्) तत्रापि विद्यात्मिक (त्मकं) बौन्दवं वा भुवनं "विन्दुरूपः शिवो ध्येयः" इत्याद्यन्यार्थ-श्रुतिजनित भ्रान्तयः कल्पयन्ति अनेन ते प्रतिक्षिप्ताः। यथा चास्यां दिवि सविता दाहकप्रकाशक स्वभाव एव, तथा तस्यां - शक्तिकिरणात्मिकायां परस्यां दिवि क्रीडास्थाने सुदीप्तात्मा - सुष्टुदीप्तं (तः) सर्वविषयज्ञानैश्वर्यदीप्तिभिरात्मा स्वभावः यस्य सः तत्स्वरूपएव पतिरित्यर्थः। न तु *मनः संयोगादिना नैयायिकादि सिद्धेश्वरस्येव बुद्धिसंयोगात् पातञ्जल सिद्धस्येव वा तस्य संज्ञानात् (संज्ञानं) दीप्तिः। 74

किञ्च निष्कम्पः - निर्गतः कम्पः परिणामः यस्मात् सः निष्कम्पः। विन्दुसदाशिवात्मभेदेन मन्त्र मन्त्रेश्वर भेदेन वा मायादिपृथिव्यन्त भेदेन वा न परिणामिनी

---

மாகும். எவ்வாறு சூரியனின் கிரணம் சுடுதலையும் விளக்குதலையும் செய்கின்றதோ, அவ்வாறே ஞான கிரியாசக்திகளும் மலவலிமையை அழித்துச் சிவ ஞானத்தை விளங்கச் செய்கின்றன. அச்சக்திகளே பரமேச்வரனுக்கு ஆதாரம் என்று உபசாரமாகச் சொல்லப்படுகின்றன. 73

"பிந்து ரூபமான சிவன் தியானிக்கத் தக்கவன்" என்பது முதலிய வேறுபட்ட பொருள்களைக் கூறும் சுருதியால் மயக்கமுற்ற ஒருசிலர், பரமேச்வரனுக்கு வித்யாத்மகமான பைந்தவ சரீரம் உள்ளது என்று கூறுகின்றனர். அவர்கள் கூற்று இதனால் மறுக்கப் பட்டது.

---

* (ख) मनः संयोगात्

प्रकृतिरुपादानम्, मृदादिवदचैतन्य प्रसङ्गादित्यर्थः। ततश्च यैः *कालादि शास्त्रवासनया विवर्तपरिणामपक्षयोरन्यतराभ्युपगमे पत्युरद्वैतवादः समारोप्यते। अनेन ते प्रतिक्षेप्याः। 75

---

எவ்வாறு சூரியன் பூதாகாயத்தில் சுடுதல் விளக்குதலைச் செய்கின்ற ஒளிமயமாக விளங்குகின்ருனே, அவ்வாறே பதியான பரமேச்வரன் சக்திமயமான பராகாச விளையாட்டரங்கில் இயல்பாகவே ஒருசேர அறியும் ஞானம் உள்ளவராகவே விளங்குகிருர் என்பது பொருள்.

மனத்தின் சேர்க்கையால் உண்டானது ஈச்வரனுடைய ஞானம் என்று நையாயிக மதத்திலும், புத்தியின் சேர்க்கையால் உண்டானது ஈச்வரனுடைய ஞானமென்று பாதஞ்சலத்திலும் கூறப்பட்ட கருத்துக்கள் ஈண்டு மறுக்கப்பட்டன. 74

பரிணமம் அற்றவன் பிந்து சதாசிவாத்ம பேதத்தாலோ மந்திர மந்திரேச்வரர் பேதத்தாலோ மாயை முதல் பிருதிவி வரையுள்ள பேதத்தாலோ பரிணமம் அடையும் மாயை பதிக்கு உபாதானம் அன்று; என்னேயெனில், மண் முதலியன போலச் சடத்துவம் ஏற்பட்டு விடும் என்பது கருத்து. காலத்தையே கடவுளாகக் கொள்ளும் சாத்திரங்களின் பயிற்சி வசத்தால் மாயாவாதிகள் கூறும் விவர்த்த வாதமோ, பரிணம வாதமோ ஏற்றுக்கொள்ளப்படின், அப்பொழுது பதிப்பொருளுக்கு அத்வைத நிலை ஏற்றியுரைக்கப்பட்டதாகும். இதனல் அத்தகையோர் மறுக்கத்தக்கவர்கள். 75

---

* (ख) कौलादि

अन्यैस्तु पाञ्चरात्रादिभिः —

अशरीरोह्यधिष्ठाता नात्मा मुक्तात्मवद्भवेत्

इत्येतद्दोषभयात्पतिः शरीरयुक्त एवाभ्युपगतः । तव्द्यापा(वर्त) नायाह -अचल मूर्तिमानिति । अचला मूर्तिर्यस्य स अचलमूर्तिमान्। द्विधाहि आत्मनां मूर्तिः चला अचलाचेति । तत्र चलातु तत्वशरीरात्मिका, अचलातु ज्ञानक्रिया स्वभावा। अयं च पतिरचलमूर्तिमान् नतु भौवनशरीरयुक्त इत्यर्थः ॥ 76

काष्ठा सैव परा सूक्ष्मा सर्वदिक्कामृतात्मिका ।
प्रध्वस्तावरणा शान्ता वस्तुमात्रातिलालसा ॥
आद्यन्तोपरता साध्वी मूर्तित्वेनोपचर्यते । सू-१०

---

"ஒன்றை அதிட்டித்திருக்கின்ற பதி முத்தான்மாக்களைப் போலச் சரீரமற்றவனுக இருக்க முடியாது" என்ற அச்சத்தால், பதி சரீரத்துடன் கூடியவரே என்று பாஞ்சராத்திரிகள் ஒப்புக்கொள்கின்றனர். அதனை விலக்குதற்கு இச்சூத்திரத்தில் "அசலமூர்த்திமான்" என்று பதியைச் சுட்டுகிறுர். ஜீவான்மா பரமான்மாக்களின் வடிவம் "சலம்" எனவும், "அசலம்" எனவும் இரண்டாம். அவற்றுள் சலமாவது தத்துவ புவனங்களாலாகிய வடிவம்; அசலமாவது ஞானக் கிரியா தன்மை வாய்ந்த வடிவம். சிவபெருமான் அசல வடிவினனே; புவன ஸம்பந்தமான வடிவினன் அல்லன் என்பது பொருள். 76

* காஷ்டா ஸைவ பரா ஸூக்ஷ்மா ஸர்வதிக்காம்ருதாத்மிகா ।
ப்ரத்வஸ்தாவரணு சாந்தா வஸ்துமாத்ராதிலாலஸா ॥
ஆத்யந்தோபரதா ஸாத்வீ மூர்த்தித்வேநோபசர்யதே । சூ–10

---

* விண்டகன் மறைப்பு டைத்தாய் மேலதாய் நுண்ணிதாகி
யெண்டிசை முகம டைந்து முதனடு விறுதி யின்றி
யுண்டெனு மளவாய் நீங்கா வொருபெருஞ் சாந்த சத்தி
பண்டுப சரிக்கப் பட்டுப் பதிக்குரு வென்ன நிற்கும்.

(சதமணிமாலை)

अस्यार्थः — सैव - अचलमूर्तिलक्षणाशक्तिः, परा - प्रकृष्टा, काष्ठा - निष्टा सर्वोत्कृष्टेत्यर्थः । एतेनास्मदादिभ्यश्चल मूर्तिमद्भ्योऽतिशयितोऽचलमूर्तिमानधिष्ठातेति दर्शितम् । तथा च परमेश्वरादधिको मोक्ष इति ये वदन्ति ते निरस्ताः । नहि सर्वज्ञत्व सर्वकर्तृत्व प्राप्तेरन्यः प्रकर्षस्तस्यापि प्रकृष्टतरावस्थेत्यादि तर तमादि प्रत्ययप्रतिपाद्य मोक्षभेदावस्थितेरनवस्थैव मुक्तौभवेत् । न तु परमेश्वरादाधिक्यमेव । कल्पितव्यपदेशमात्रभेदस्य न क्वचिद्व्यपसृतिः । सूक्ष्मा - परमाण्वादेरप्यतिसूक्ष्मा, सर्वदिक्का - सर्वदिग्गता, वक्ष्यमाण तत्तत्कार्यव्याप्तेरित्यर्थः ॥ 77

---

இதன் பொருள்— அந்த அசலமூர்த்தி ஸ்வரூப மான சக்தியும் மிக மேலானது. எல்லாவற்றினும் மேம்பட்டது என்பது பொருள்.

இதனல் தத்துவ புவனங்களாலாகிய வடிவ முடைய நம்போன்றவர்களைக் காட்டிலும் மேம்பட்டவர் ஞானகிரியா வடிவினரான பதி என்று சொல்லப் பட்டது. படவே, பரமேச்வரனின் மேம்பட்டது முக்தி என்று சொல்லுகின்றவர்கள் மறுக்கப்பட்டனர். எல்லா வற்றையும் அறியும் தன்மை எல்லாவற்றையும் இயற்றுந்தன்மை இவற்றை அடைவதிலும் மற்ருெரு சிறப்பு இல்லை அன்ரு? உண்டேல், சிறிது உயர்ந்தது மிகவும் உயர்ந்தது எனக் குறிப்பிடத்தக்க பல்வேறு மோக்ஷங்கள் உண்டென்னும்படி

अत्र सूक्ष्मपदेन स्थूलमूर्तियुक्त हिरण्यगर्भरूप विकारेश्वर वादिनो निरस्ताः । सर्वदिक्केतिपदेन अव्यापकशरीर प्रकृति-जन्य प्रद्युम्नादीश्वरत्ववस्थापकपाञ्चरात्रवादोऽपि निरस्तः । अमृतात्मिका – अमृतः - मरणरहितः आत्मा स्वभावः यस्याः सा अमृतात्मिका । अनेन मीमांसकसिद्ध पुरुषेश्वरवादोऽपि

---

வரம்பின்மை என்ற குற்றம் மோக்ஷத்திற்கு ஏற்படும் ஆதலால் பரமேச்வரனைக் காட்டிலும் மோக்ஷத்திற்கு உயர்ந்த தன்மை இல்லை; கற்பிக்கப்பட்ட பெயரால் மாத்திரம் வேற்றுமை. அதனால் எவ்வகைக் குறையு மில்லை. सूक्ष्मा (ஸூக்ஷ்மா) பரமாணுவைக் காட்டிலும் மிக நுண்ணியது. எல்லாத் திசையும் கடந்தது, சொல்லப்போகின்ற எல்லாக் காரியங்களிலும் வியாபித்திருப்பது என்பது பொருள். 77

இங்கு ஸூக்ஷ்ம என்ற சொல்லால், ஸ்தூல வடிவு கொண்ட ஹிரண்யகர்ப்பன் முதலியோரை ஈச்வரன் என்று கூறுகின்றவர்கள் மறுக்கப்பட்டனர். सर्वदिक्का ('ஸர்வதிக்கா') எங்கும் வியாபித்திருப்பது என்ற பொருளைக் கொண்ட இச்சொல்லால், அவ்யாபக சரீர முடைய பிரகிருதியிலிருந்து உண்டான ப்ரத்யும்னன் முதலியவர்களை ஈச்வரனுகக் கூறுகின்ற பாஞ்சராத்திர வாதமும் மறுக்கப்பட்டது. अमृतात्मिका (அம்ருதாத்மிகா) மரணமற்ற தன்மை உடையது.

निरस्तः । तस्य पुरुषस्य मूर्तेः मृतिस्वभावत्वादिति । तस्य सुकृताद्यर्जनमात्रसामर्थ्येऽपि तनुकरण भुवन निर्माणादौ सामर्थ्याद्दृष्टेरनीश्वरत्वमेवेति भावः । प्रध्वस्तावरणा, प्रध्वस्तं-विनिवृत्तं, आवरणं - समस्त बन्धनं यस्याः सा प्रध्वस्तावरणा । एतेन सदाशिवस्याप्यनुग्रह तिरोभावरूप पाशसंसर्गप्रतिपादनेन पशुत्वं वदन्तः प्रक्षिप्ताः । सदाशिवस्य पाशसम्बन्धे जगतः तत्कर्तृत्वानुपपत्तेः । न चानुग्रह तिरोभावयोश्च पाशत्वम् । विमतौ न पाशभूतौ तत्कृत्यविशेषात्मकत्वात् सृष्ट्यादिव-दित्यनुमानेन पाशत्वनिराकरणात् । अतएव न तस्य पशुत्वं इति ॥ 78

शान्ता - रागद्वेषरहिता । अनेन भगवतः सर्वेश्वर-त्वेऽपि आराधन तदभावाभ्यामिष्टानिष्टफलप्रदत्वेन नृपत्या-

---

இச் சொல்லால் மீமாம்ஸகருக்கு ஸித்தமான புருஷேச்வர வாதமும் மறுக்கப்பட்டது. அந்தப் புருஷனின் வடிவு அழியுந்தன்மையுள்ளதால், அந்தப் புருஷனுக்குப் புண்ணியம்முதலியவற்றை ஈட்டுவதில் மாத்திரம் ஆற்றலிருந்துவைத்தும், தனுகரண புவனங்களைப் படைப்பதில் ஆற்றலின்மை காணப்படுவதால் ஈச்வரத்தன்மை அவன்பால் இல்லை என்பது கருத்து. **प्रध्वस्तावरणा** (ப்ரத்வஸ்தாவரணு) எல்லா பந்தங்களும் அற்றது. இதனல், ஸதாசிவப்பெருமானுடைய அனுக்கிரஹ திரோபாவங்களுக்குப் பாசத்தன்மையைப் பிரதிபாதனம் செய்து, பசுத்தன்மையைக் கூறுகின்றவர்களும் மறுக்கப்பட்டனர். ஸதாசிவப்பெருமானுக்குப் பாசஸம்பந்தம் இருக்குமேயானல், உலகத்தைப் படைக்கும் தன்மை அவருக்குப் பொருந்தாது போம்; மேலும் அனுக்கிரஹ திரோபாவங்களுக்குப்

दीनामिव रागद्वेषाभ्युपगमवादो निरस्तः । तदाराधनस्य चोदितत्वे सति श्रेयस्साधनत्वेन ज्योतिष्टोमादेरिव विशिष्ट-फलप्रदत्वात् नृपत्यादिसाधर्म्याभावादिति । अतएव अतिलालसा, लालसा - तृष्णातिरेकः, साऽतीव विद्यते यस्याः सा अतिलालसा। रागद्वेषाभावेऽपि पितेव पुत्रादि(दी)न् योग्यतानुसारेण सर्वं जगत् पातित्यर्थः । वस्तुमात्रा - पतिलक्षणवस्तुमात्रा, तस्यास्तु लयभोगादिको भेदो नात्र विवक्षितः ॥ 79

---

பாசத்தன்மை ஒருபோதும் இல்லை; மாறுபட்ட அவ்விரண்டும் பாசங்களாகமாட்டா; அவை சிவ பெருமானது கருணை நிறைந்த காரிய விசேஷமாக இருப்பதால். 'படைப்புப்போல' = என்ற அனுமானத் தால் அவைகளுக்குப் பாசத்தன்மை இல்லை என்று அறிக. அதனாலேயே ஸதாசிவப்பெருமானுக்குப் பசுத் தன்மையும் இல்லை என்று பெறப்பட்டது. 78

शान्ता(சாந்தா)விருப்பு வெறுப்பு இல்லாதது. இத னால் ஈச்வரனும், தம்மை ஆராதிப்பதால் இஷ்டபயன் களையும் ஆராதியாமையால் அநிஷ்ட பயன்களையும் கொடுக்கின்ற அரசர் முதலியவர்களைப்போல். விருப்பு வெறுப்புக்களோடு கூடியவர் என்று கூறுகின்றவர் களின் வாதமும் நிராகரிக்கப்பட்டது. பரமேச்வர னுடைய ஆராதனமும் ஜ்யோதிஷ்டோமயாகம்போல் ச்ரேயஸ்ஸாதனமாகச் சாத்திரங்களில் கூறப்பட்ட போதிலும், விசேஷமான மோக்ஷப்பயனைத் தருதலால் பரமேச்வரனுக்கு அரசன் முதலியவர்களோடு ஒப்புமை இல்லை என்பது பெறப்பட்டது. அதனா லேயே अतिलालसा (அதிலாலஸா) அளவிறந்த கருணை

नन्वसौ वै(वि)द्येश्वरी(र)मुक्तश्शि(शि)वसम्बन्धिनि (सम्बन्धि) प्रवाह नित्येश्वरवादिवदङ्गी क्रियतामित्यत आह– आद्यन्तोपरतेति । आद्यन्तशून्येत्यर्थः । विद्येश्वराणां त्वाद्यन्तयुक्तामूर्तिः । मुक्तशिवानां त्वादियुक्ता । उभयत्राप्याद्यन्तर(स)हितत्वं **सिद्धमित्यर्थः । न च प्रवाह नित्येश्वरपक्षोऽपि संभवति । ईश्वरभाव[स्य] स्वरूप व्यक्तिलाभात्मकत्वेन विनाशासंभवात् । तत्सम्भवे हि भवेत् प्रवाहनित्येश्वरपक्षः ।

यद्येवं मुक्तशिवानामपि पतिसमत्वेन ईश्वराणां बहुत्वाच्च(च्चा)तुल्यमतित्वेन सर्वकार्या निर्वाह इति चेत् । न । सर्वज्ञत्वात् यथार्थदर्शनप्रवृत्तत्वे तेषामतुल्यमतित्वा सिद्धेः, रागद्वेष(षा)तुल्यज्ञानादि युक्तानामेव नृणां दोषदर्शनात् । 80

---

உடையது. விருப்பு வெறுப்பு இல்லாமல் புதல்வர்களைத் தந்தைகாக்குமாறுபோல, ஈச்வரன் உயிர்களை அவற்றின் பக்குவத்திற்குத் தக்கவாறு காப்பாற்றுகிறான் என்பது பொருள். பதியின் வடிவமான அதற்கும் லயம்போகம் முதலிய பேதம் இங்குச் சொல்லவேண்டுவதில்லை. 79

பதியையும் வித்யேச்வரர் முக்தசிவர்களைப் போலவும், பிரவாஹநித்யேச்வரவாதிகள் கூறுவதுபோலவும்

---

** रहितत्वमसिद्धम् (ख)

यद्येवं प्राप्तप्रापणीयत्वेन प्रयोजनाभावादस्याः मूर्तः [न] निसर्गनिर्माणप्रवृत्तिरुपपद्यते "प्रयोजनमनुद्दिश्य न मन्दोऽपि प्रवर्तते" इति न्यायादित्याह — साध्वीति ।

---

கூறலாமெனிலோ, ஆகாது; (ஆத்யந்தோபரதா) பதியோ ஆதியும் அந்தமும் இல்லாதவர்; வித்யேச்வரர்களின் வடிவு ஆத்யந்தத்தோடு கூடியது; முக்த சிவர்களது வடிவோ ஆதியோடு கூடியது; ஆதலின் இருதிறத்தாரிடத்தும் ஆத்யந்தத்தோடு கூடுதல் உண்மையால், கூறலாகாது என்பது. பிரவாஹ நித்தியேச்வரர் பக்ஷமும் சொல்வதற்கில்லை; எதனுலெனின், ஈச்வரத்தன்மை என்பது சொரூபத்தினுடைய பிரகாசலாபமேயாதலால், அஃது ஒருபொழுதும் அழிவதில்லை என்பதால் என்றறிக. ஈச்வரத் தன்மைக்கு அழிவு ஏற்படுமேயானுல் பிரவாஹ நித்தியேச்வர பக்ஷம் சொல்லலாம்.

அப்படியானுல் முத்தசிவர்களும் பதிஸமமாக இருப்பதால் அப்பொழுது ஈச்வரனும் பலவாக ஏற்படுவதாலும், அவர்களும் சமமான அறிவு இல்லாதவர்களாய் இருப்பதாலும் எல்லாக் காரியங்களும் ஈடேருமற்போம் எனில், அது பொருந்தாது; அவர்களும் எல்லாவற்றையும் அறிந்திருத்தலின் உண்மைத்தன்மையைக் காண்பதில் ஈடுபட்டிருத்தலாலும் அவர்களுக்கு சமமில்லாத அறிவு என்பது ஏற்படமுடியாது. விருப்பு, வெறுப்பு, சமமில்லாத அறிவு முதலிய தோஷமுள்ள மனிதர்களுக்குத்தான் எல்லாக் காரியங்களையும் ஈடேறச் செய்யமுடியாத் தன்மையைக் காண்கிருேம். 80

மந்தனுக இருந்தாலும் ஒருவன் பயனின்றிச் செயலில் ஈடுபடுவதில்லை என்ற நியாயப்படி அடையத்

साध्वी - करुणायुक्ता । स्वप्रयोजनाभावेऽपि करुणावन्तः परार्थं प्रवर्तमाना दृश्यन्त इति नात्र प्रयोजनाभावदोषः ॥ 81

ननु पत्युः सु[दी]प्तात्मस्वभावे[वत्वे]नोक्तत्वात् कथं सा तस्य मूर्तिः ? व्यतिरिक्ता हि मूर्तिः सर्वत्र कथ्यत इत्यत आह — मूर्तित्वेनोपचर्यत इति । मूर्तित्वेन - शरीरत्वेनोपचर्यते । न तु मुख्यतया पतिव्यतिरिक्ता सा मूर्तिरित्यर्थः ।

प्रोक्तंच श्रीमत्पौष्करे —

"ज्ञानक्रिये शिवे प्रोक्ते सर्वार्थे निर्मले परे" इति ।

---

தக்கதாகிய ஸர்வக்ஞத்வம், ஸர்வகர்த்தத்வம் முதலியவைகளை அடைந்தாலும் வேறு பயனின்மையால் இவ் வடிவத்திற்கு இயல்பாகச் செயல்களில் ஈடுபாடு நிகழ்வதற்கில்லையே என ஆசங்கை எழ, விடை கூறுவார். साध्वी (ஸாத்வீ) என்றார். அச்சக்தி அருளோடு கூடியது என்பது. தமக்குப் பயனில்லாவிடினும் அருளுடையார் பிறர் பயனைக் கருதி ஈடுபடுகின்றவர்களாகக் காணப்படுகிறார்கள். ஆதலின் தமக்குப் பயனில்லை என்பது குற்றமாகாது என்றறிக. 81

பதிப்பொருளுக்கு ஞானமே வடிவமாகச் சொல்லப்பட்டமையால் சக்தி அதற்கு எவ்வாறு வடிவமாகும்? வடிவம் என்பது ஞானத்தைக் காட்டிலும் வேறுபட்டது என்றன்றே யாண்டும் கூறப்பட்டுள்ளது என்று வினு எழ, விடை கூறுவார்: வடிவமென உபசார வழக்கால் சொல்லப்படுகிறது; அது பதியின் வேறுபட்டதில்லை என்க.

பௌஷ்கரத்தில் —

"ஆணவ கர்ம மாயா ஸம்பந்தம் இல்லாததும் மேலானதும் எல்லாவற்றையும் அறிவதும் செய்வது

सैवेत्यवधारण *प्रस्तावादत्र **न मन्त्रमन्त्रेश्वराणां† §नापि दीक्षया(या) बिन्दुसदाशिवतत्वयोजितानामपि मूर्ति-रुपचर्यत इति व्यावर्त्यते । ततश्च तेषां मुख्यैव शुद्धमायो-पादाना मूर्तिरित्युक्तं भवति ॥ ८२

तदुक्तं रत्नत्रये —

" बिन्दूपादानजन्येन एषां बैन्दवमुच्यते ।
विद्याश्च विद्याधीशाश्च नादाख्यमधिदेवताः ॥
लयभोगाधिकारेण तनुभोगेन्द्रियाणि च । " इति ॥

---

மான ஞானகிரியாரூபமான சக்தியே வடிவம்" எனக் கூறப்பட்டுள்ளது.

தேற்ற ஏகாரத்தால், மந்திர மந்திரேச்வரர்களுக்கும் தீக்ஷையினுல் பிந்துதத்துவத்திலும் சதாசிவ தத்துவத்திலும் சேர்க்கப்பட்டுள்ளவர்களுக்கும் ஏற்பட்ட சரீரம் இவ்வாறு உபசாரமாகச் சொல்லப் படுகின்ற சரீரமன்று என்பது தெளியப்பட்டது. அவர்களுக்குச் சுத்த மாயா சம்பந்தமுடைய சரீரம் உண்டு என்க. 82

இரத்தினத்திரயத்துள் —

"மந்திரர், வித்யேச்வரர் நாதாக்யதத்துவத்தில் உள்ளவர்கள் ஆகிய இவர்களுக்குச் சரீரம் சுத்த மாயையால் ஆகிய பைந்தவம்" என்று சொல்லப் படுகிறது. "இவர்கள் லயபோக அதிகாரத்தோடு பைந்தவமான தனுகரணமுடையவர்கள்" என்றும் சுட்டப் பெற்றுளது.

---

* प्रधानात (ख)

** च

† मुक्तात्मनामित्यधिक: पाठः (ख)

§ वा

तथा किरणे —

" शुद्धयोनिमयं तस्य वपुरुक्तमकल्मषम् " इति ।

अत्र विद्याविद्येश्वरादीनां वास्तवशरीरयोगत्वे असर्वज्ञत्वप्रसङ्ग इत्याद्यनुमानेन (नाना) * मनैकान्तिकत्वादिभिर्निरासः साधनीयः । तन्निरसनप्रकारस्तु रामकण्ठविरचितायां मतङ्गवृत्तौ विस्तारेण प्रतिपादितः । तत्रैव द्रष्टव्यः । इह तु ग्रन्थगौरवभयान्न लिख्यते । अतएव सदाशिवाद्याकारकल्पनमप्यस्य ध्यानार्थमेव ।

---

கிரணத்தில் —

" வித்யேச்வரருடைய சரீரம் சுத்த மாயையை உபாதானமாகக் கொண்டது " எனவும், "மாயாமல கர்ம மலமற்றது" எனவும் கூறப்படுகிறது.

இங்கு வித்யா வித்யேச்வரர்களுக்கு உள்ளது மாயா சம்பந்தமான சரீரமெனின், முற்றறிவின்மை ஏற்படும் என்ற இது முதலான அனுமானங்களுக்கு வ்யபிசார முதலிய தோஷங்களால் மறுதலே சாதிக்கத் தக்கது. அதை மறுத்த முறை ஸ்ரீராமகண்டரால் இயற்றப்பட்ட மதங்கவிருத்தியில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. அங்குக் கண்டுகொள்க. விரிவஞ்சி அஃது ஈண்டு எழுதப்படவில்லை இவ்வாற்ருல் ஸ்ரீசதாசிவப் பெருமான் முதலிய உருவக்கற்பனையும் தியானத்திற்காகவே என்பது பெற்ரும்.

---

* (ख) अनुमानावस्करणां

पौष्करे —

*"साधकस्य तु लक्ष्यार्थं तस्य रूपमिदं स्मृतम्" इति। 83

तत्वप्रकाशेऽपि —

" चिदचिदनुग्रहहेतो रूपाण्येतानि स प्रभुः कृत्वा ।
कुरुते चितामनुग्रहमनादिमलरुद्धशक्तीनाम् ॥"
इति । 84

ननु ज्ञानक्रियालक्षणाशक्तिः पत्युरन्यति*रेकादौपचारिकमूर्तिरस्तु । तथापि कृत्यानां करणे मुख्यमूर्तिव्यतिरेकेण कथं हेतुता इत्याशङ्क्य तस्य तादृशं वपुरपि **तत्कृत्याधिकारि शरीरमेव न तु पारमार्थिकमिति मृगेन्द्रसूत्र‡मादयाति ॥

---

பௌஷ்கரத்தில் —

"ஸாதகனின் தியான பூஜைக்காகவே சிவபெருமானுக்குத் திருமேனி கூறப்பட்டுள்ளது" என்றமை காண்க. 83

தத்துவப்ரகாசத்தில் —

"அந்தப் பிரபுவான சிவபெருமான் சித்துக்கும் ஜடமான பாசங்களுக்கும் அனுக்கிரகம் செய்வதற்காகச் சதாசிவம் முதலிய உருவங்களைத் தாங்கி, அநாதியாகவே ஆணவமலத்தால் மறைக்கப்பட்ட சக்திகளை உடைய ஆன்மாக்களுக்கு அனுக்கிரகம் செய்கின்றார்" என்று குறிக்கப்பெற்றுள்ளது காண்க. 84

---

* ध्यानार्थमेव ईश्वरस्याकारंकल्पनं न परमार्थतः, निराकारे ध्यान पूजाद्ययोगात् ।

* (ख) कादौपचारिकी ** (ख) तत्तत् ‡ उदाहरति

वपुषोऽविद्यमानत्वाद्यद्यत्कृत्यं करोति सः ।
तत्र तत्रास्य तत्कृत्यं(त्कर्तृ) वपुषा न(नु) कृतं वपुः ॥

सू–११

सः - पतिः, वपुषः - हस्तपादादि शरीरस्य, अविद्यमानत्वात् - असम्भवात्, [यद्यत्] कृत्यं - सृष्ट्यादि करोति । तत्र - तस्मिन् कृत्ये, अस्य - पत्युः, वपुः - शरीरं, तत्कर्तृवपुषा - तत्तत्कृत्याधिकारि शरीरेण, अनु - सदृशतया, कृतं - कल्पितम् । अधिकारिशरीरमेव तत्तत्कृत्येषु मुख्यं शरीरमित्यर्थः । अथवा तत्कर्तृवपुषा - तत्कर्तॄणां पञ्चकृत्योपयोगिनां वपुषा - पञ्चब्रह्मरूपेण शाक्तेन शरीरेण कल्पितमित्यर्थः ॥ 85

---

ஞானகிரியாரூபமான சிற்சக்தி, பதிப்பொருளினின்று பிரியாதிருக்குந்தன்மை உடையதால் உபசாரவடிவமாக இருக்கட்டும்; ஆனல் தொழிலியற்றுங் காலத்து முக்கிய வடிவிற்கு இல்லாமல் உபசாரவடிவத்திற்குக் காரணத்தன்மை எவ்வாறு வரும் என ஐயுற்று, பதிப்பொருளுக்குக் காரியத்தை முடிக்கக் கூடிய திருமேனியும் அவ்வக் கிருத்தியங்களைச் செய்பவர் தம் திருமேனியே; உண்மையாக உள்ளதன்று (அவர் அசரீரியே) என்பதை விளக்க ஸ்ரீமிருகேந்திரசூத்திரத்தை எடுத்துக் கொள்கிருர்.

तदुक्तं श्रीमन्मृगेन्द्र एव —

"तद्वपुः पञ्चभिर्मन्त्रैः पञ्चकृत्योपयोगिभिः ।
ईशतत्पुरुषाघोरवामाद्यैर्मस्तकादिकम् ॥" इति ॥

---

* வபுஷோऽவித்யமாநத்வாத் யத்யத்க்ருத்யம் கரோதி ஸ: ।
தத்ரதத்ராஸ்ய தத்கர்த்ரு வபுஷாநுக்ருதம் வபு: ॥ சூ-11

அந்தப்பதியான சிவபெருமான் கைகால் முதலிய சரீரம் இல்லாததால், படைப்பு முதலிய எவ்வெக் காரியத்தைச் செய்கிறாரோ, அதில், பதிப்பொருளான சிவபெருமானுக்கு, திருமேனி, அச் செயல்களைச் செய்கின்ற அதிகாரித் திருமேனியோடு, சமமாகக் கற்பிக்கப்பட்டுள்ளது. அதிகாரித்திருமேனியே அவ் வவ்வச் செயல்களில் முக்கியத் திருமேனி என்பது பொருள். அல்லது ஐந்தொழிலுக்கும் உபகாரப் படும் பஞ்சபிரம்ம மந்திரரூபமாகிய சக்திரூபத் திரு மேனி கற்பிக்கப்படுகிறது என்பது பொருள். 85

மிருகேந்திரத்தில் —

"பஞ்ச கிருத்தியங்களுக்கும் உபயோகமான ஈசான தத்புருஷ அகோர வாமதேவ ஸத்யோஜாதம் என்னும் பஞ்சபிரம்ம மந்திரங்களால் தலைமுதலிய அவயவங்களோடு கூடிய திருமேனி கற்பிக்கப் பெற் றிருக்கிறது" என்று கூறப்பட்டிருத்தல் காண்க.

---

* உருவறி வரிதாந் தன்மை யுடைமையா லமலன் றானே
மருவிய வுருவாய் நின்று வகுக்குமெச் செயலுஞ் செய்வ
னிரவிய வவன்ற னுது வினையதிங் கிவ்வா றன்றி
யொருவரா லுதவப் பட்ட வுருவினுற் செய்வ தன்றும்.

(சதமணி மாலை)

वस्ततस्तु परमार्थस्वभावेण (ना) मूर्तित्वे[ऽपि] भगवतः [स्वशक्ति] महिम्नैव [सर्वं] घटते । तथापि अशरीरस्य च कार्यनिष्पत्यदर्शनात् यद् यत् किञ्चित् कार्यं विधत्ते, तत्र तत्र तत्कर्तृशरीरमस्य वपुः प्रसादादौ प्रसन्नरूपं क्रोधादौ सक्रोध-माप्यायनादावा (व) मृतस्य तिथ्यतिथि (न्दीति ध्यायि)मि-श्चिन्तनीयमित्यर्थः ॥

यथोक्तं सर्वस्रोतस्सङ्ग्रहसारे —

"येन येन हि रूपेण साधक[ः] संस्मरेत्सदा ।

तस्य तन्मयतां य(या)ति चिन्तामणिरिवेश्वरः ॥" इति ॥86

---

ஆனால் உண்மையாகப் பரமேச்வரனுக்குத் திருமேனி இல்லாதிருந்தும் எல்லாம் அவர்தம் சக்தி மஹிமையாலேயே நடக்கிறது. ஆயினும் சரீரமற்ற ஒன்றால் காரியத்தைத் தோற்றுவிப்பது காணப்படாமையால், சிவபெருமான் எந்த எந்தக் காரியத்தைச் செய்கிறாரோ, அந்த அந்தக் காரியங்களில் அவ்வக் காரியத்தைச் செய்கின்றவரின் திருமேனியே திருமேனி. அஃதாவது அருள் செய்யுங்கால் கருணை வடிவமும், கோபம் கொள்கையில் சினவடிவமும், மகிழ்வுறுகையில் அமுதப்பெருக்குப் போல் மகிழ்விக்கின்ற வடிவமும் தியானம் செய்பவர்களால் தியானிக்கத் தக்கது என்பது கருத்து.

இவ்வாறே ஸர்வஸ்ரோதஸ்ஸங்கிரஹஸாரம் "ஸாதகன் சிவபெருமானை எவ்வெவ்வடிவில் தியானிக்கிறானோ, அவ்வவ்வடிவில் அவர் நின்று, சிந்தாமணிபோல வேண்டுவார்க்கு வேண்டுவனவெல்லாம் அருள்புரிகின்றார்" என்கிறது. 86

वपुषा न कृतं वपुरिति पाठे अयमर्थः — सः - पतिः, यद्यत् कृत्यं करोति, तत्र स्थले तत् कृत्य, अस्य - पत्युः, कर्तृवपुषा भवतीति शेषः । करोतीति कर्तृ, तद्रूपं वपुः क्रियाशक्तिस्वरूपं शरीरं, तेन सर्वमपि कृत्यं घटत इत्यर्थः । कृतं वपुर्न, कर्तृरूपक्रियाशक्तिवपुर्व्यतिरेकेण कृतमुत्पादितमन्यद्वपुर्नास्तीति भावः । अत्र हेतुः —

' वपुषोऽविद्यमानत्वात् ' इति ।

कारणत्वयाभावेन शक्तिव्यतिरिक्तस्य कार्यशरीरस्यासदादिवच्छिवस्यासंभवादित्यर्थः ॥ 87

---

वपुषा न कृतं वपुः (வபுஷா ந க்ருதம் வபு:) என்ற பாடபேதத்திற்கு இவ்விதம் பொருள் கொள்ளல் வேண்டும். तत्कर्तृवपुषा (தத்கர்த்ருவபுஷா) என்ற பதத்தை तत् (தத்) என்றும், कर्तृवपुषा (கர்த்ருவபுஷா) என்றும் இரண்டு பதங்களாகப் பிரித்துக்கொளல் வேண்டும். तत् (தத்) என்ற பதம் முற்கூறிய கிருத்தியம் என்ற பொருளைக் குறிக்கிறது. कर्तृवपुषा (கர்த்ருவபுஷா) என்ற பதத்தில் कर्तृ (கர்த்ரு) என்ற ஏகதேசத்தை करोतीति कर्तृ (கரோதீதி கர்த்ரு) என்று விரித்து. கர்த்ருரூபமான வபு: சரீரம் கிரியாசக்தி ஸ்வரூபமாக உள்ள சரீரம் என்று பொருள் கொளல் வேண்டும்; கொள்ளின், சிவபெருமான் எவ்வெச் செயல்களைச் செய்கிறாரோ, அவ்வச் செயல்கள் கிரியாசக்தியான வடிவத்தால் நடைபெறுகின்றன என்று பொருள் படும் என்க कृतं वपुर्न (க்ருதம் வபுர்ந) என்ற பதத்திற்குக் கிரியாசக்தி வடிவமில்லாத வேறு வடிவம் இல்லை என்பது பொருளாகக்கொள்க. இக் கூற்றுக்குக்

अयमभिप्रायः — पत्युः शरीराभ्युपगमे तस्य शुद्धस्य भौतिकं (क) देहायोगात् बैन्दवदेहो वक्तव्यः । [तस्य बिन्दु-रुपादानं वक्तव्यम्] । तच्चात्र न सम्भवति । तथाहि – सर्वत्र क्षुब्धबिन्दोरेवोपादानत्वम् । तत्क्षोभः स्वतो वा ? शिवतो वा ? नाद्यः । आत्माश्रयदोषापत्तेः । द्वितीये शिवस्य तत्क्षोभक्रियायां वपुरस्ति तद्वपु(ष): साधक-बिन्दुक्षोभार्थं पुनर्वपुरन्तरकल्पनायामनवस्थापत्तेः । यदि तत्राचलमूर्तिमात्रेणैव बिन्दुक्षोभः, तर्हि तस्य सृष्ट्यादि

---

காரணம் அவருக்கு வடிவம் இல்லாதிருப்பதே. *முக்காரணமுமில்லாமையால் நம்மைப்போல் சிவ பெருமானுக்குச் சக்தியைத் தவிர, வேறு கார்ய சரீரம் அமையாது என்பது பொருள். 87

இது கவனிக்கத் தக்கது:— சிவபெருமானுக்கு வடிவம் உண்டென்று உடன்படின், அவர் சுத்தர் ஆகையால் அவருக்குப் பௌதிகசரீரம் இல்லை; இல்லையாகவே, பைந்தவ சரீரத்தை உடன்பட நேரிடும்; அச்சரீரத்திற்குப் பிந்துவை உபாதானமாக கூற வேண்டிவரும். அதுவும் இங்குப் பொருந்தாது. என்னையெனில், கலக்கப்பட்ட பிந்துதான் எங்கும் உபாதானமாகும். அக்கலக்கம் இயல்பாக நிகழ்ந்ததா, சிவபெருமானால் நிகழ்ந்ததா, என்ற வினா எழும். முதற்கண் கூறியவாறு இயல்பாக ஏற்பட்டது என்பது இல்லை; தானே தன்னைக் கலக்கிக்கொள்வது ஆத்மாச்ரயம் என்னும் குற்றமாம் ஆதலின் அடுத்துக் கூறப்பட்டதன்கண் சிவபெருமானுக்குக் கலக்கு

---

* ஸஹகாரிகாரணம்; அதிருஷ்டகாரணம், நிமித்தகாரணம்.

क्रियासु किं शरीरान्तरकल्पनया । एवमेव शरीराधीन-सहकारिणादृ (णोऽदृ) ष्टनिमित्तकारणयोर्निरासः तस्माच्छिवस्य कारणत्रयाभावेन कृतशरीराभावेऽपि स्वदेहस्पन्दनादावात्मनः कर्तृत्ववत सृष्ट्यादिक्रियाकर्तृत्वोपपत्तिरिति ।

तदुक्तं श्रीमत्पौष्करे —

"अदेहस्यापि कर्तृत्वं स्वदेहप्रेरणे यथा ।" इति ॥

---

கின்ற காலத்தில் வடிவமுள்ளது. அவ்வடிவத்திற்கு ஸாதனமான பிந்துவைக் கலக்குவதற்காக மறுபடியும் மற்ருெரு வடிவத்தைக் கற்பிப்பது வரம்பின்மைக் குற்றம் ஆம். ஞானகிரியா ரூபமான வடிவாலேயே பிந்துவைக் கலக்குகின்ருர் எனின், அஃதேல், சிவ பெருமானுக்குப் படைப்பு முதலிய தொழில்களில் வேறு வடிவத்தைக் கற்பிப்பதால் பயன் யாது என மறுக்க. இவ்வாறு சரீரத்திற்கு வேண்டிய ஸஹகாரி காரணம் அதிருஷ்டகாரணம் நிமித்த காரணம் ஆகியவை மறுக்கப்பட்டன. படவே, சிவபெருமானுக்கு முக்காரணமும் இல்லாமையால் ஆக்கப்பட்ட வடிவம் இன்றியும், உலகில் தன் வடிவை அசைப்பதில் ஆத்மா செயற்படுவது போல, படைப்பு முதலிய தொழில் செய்வதிலும் சிவபெருமான் ஆற்றலுடையவராவார் என்பது பொருந்தியதே எனக் காண்க.

ஸ்ரீமத் பௌஷ்கரம் —

"சரீரத்தை இயக்குவது என்ற காரியத்தில் அதற்கு அனுகூலமான சரீரமில்லாத ஆத்மாவுக்கு கர்த்தாவாந்தன்மை எவ்வாறு அமைகிறதோ, அவ்வாறே சிவபெருமான் வடிவமற்றவராய்வைத்தும் எல்லாக் காரியத்தையும் செய்கிருர்" என்று கூறுகிறது. 88

ननु जगत्सृष्टिस्थित्यादिरूपा पत्युः क्रिया नाकरणिका क्रियात्वात् छिदिक्रियावत्, अतः तस्यापि करणेन भवितव्यमित्याशङ्क्य तत्करणं मृगेन्द्रसूत्रेण दर्शयति —

करणं च न शक्त्यन्यच्छक्तिर्नाचेतना चितः ।
विषयानियमादेकं बोधे कृत्ये च तत्तथा ॥ सू–१२

शिवस्य शक्त्यन्यत् - शक्तेरन्यत् इतरद् वस्तु करणं न भवति । अत्र निषेधमुखेन विधिरुच्यते । शक्तिरेव

---

*வெட்டுதல் தொழிலுக்குக் கரணம் எவ்வாறு இன்றியமையாததோ, அவ்வாறே பரமேச்வரனுடைய படைத்தல் காத்தல் முதலிய தொழிலுக்கும் கரணம் இன்றியமையாததே; அதுவும் தொழிலாக இருப்பதால் என்று ஆசங்கித்து, அவருக்குக் கரணமும் சக்தியேயாகும் என்பதை மிருகேந்திர சூத்திரத்தால் விளக்குகிறார்.

⁕கரணஞ்ச ந சக்த்யந்யத் சக்திர் நாசேதநாசித: I
விஷயாநியமாதேகம் போதே க்ருத்யேச தத்ததா II சூ–12

பரமேச்வரனுக்குச் சக்தி அன்றி மற்றொன்று கரணமாகமாட்டாது. இங்கு எதிர்மறைமுகமாக விதி உரைக்

---

*கருவி.

⁕சக்தியின் வேறென் றெண்ணச் சார்கர ணமுமீங் கில்லை
சித்தின்வே றுய சித்தாம் சத்தியுந் தெரியி னில்லை
யித்திற மதனு லந்த வேகமாங் கரணந் தானே
வைத்தபல் வினையான் ஞானக் கிரியையின் மருவி நிற்கும்.
(சதமணிமாலை)

*சக்தி கரணம் தலைவன தாகலிற்
சித்த:. தொன்றே செயலு மறிவும்
வைத்த பொருளின் வரைநிலை யின்றே.
(வெள்ளியம்பலத் தம்பிரான் சுவாமிகள்)

करणं, तथैव (तयैव) तत्तत्क्रियानिष्पादनादित्यर्थः। चितः-चिद्रूपस्य। सम्बन्धे षष्ठी। चित्सम्बन्धिनी सा शक्तिश्च अचेतन स्वरूपा न भवति, चित्स्वभावायाः शक्तेरचिद्रूपत्वायोगादित्यर्थः। यस्मात् ज्ञेयानां करणीयानां (चानन्त्यं) चा(तस्माच्चा)स्य करणैरप्य(न)तै(न्तै) र्भवितव्यम्। अपरिमितविषयं च परमेश्वरस्य ज्ञानं कृत्यं च ॥ 89

तदुक्तं तत्रैव —

"तदेकं विषयानन्त्याद्भेदानन्त्यं प्रपद्यते।
कर्तृत्वं तदभिन्नत्वात् तद्वदेवोपचारतः॥" इति॥

---

கப்படுகிறது. சக்தியைக்கொண்டே அவ்வச்செயல்களைத் தோற்றுவிப்பதால் அச்சக்தியே கரணம் என்பது பொருள். ஞானஸ்வரூபமான பரமேச்வரனுடைய சக்தி அசேதனமாக ஆகாது. அதுவும் ஞானஸ்வரூபமாகவே ஆகும். ஆதலின் ஞானஸ்வரூபமுடைய சக்திக்கு ஜடத்தன்மை பொருந்தாதுஎன்பது பொருள். எக்காரணத்தால் பரமேச்வரனுக்கு அறியத்தக்கவையும் செய்யத் தக்கவையும் எல்லையற்றிருக்கின்றனவோ, அக்காரணத்தால் பரமேச்வரனும் எல்லையற்ற கரணங்களோடு கூடியிருத்தல் வேண்டும். ஆதலின் ஸ்ரீபரமேச்வரனுடைய ஞானமும் செயலும் எல்லையற்றன. 89

மிருகேந்திரம்

"அவருடைய சக்திரூபமான கரணம் ஒன்றாக விருப்பினும் உபாதிபேதத்தால் ஔபசாரிகமான அனந்தத்தன்மையை அடைகிறது. அவ்விதமே பரமேச்வரன் சக்தியைக் காட்டிலும் வேறாக இல்லாததால் அவருக்கும் கர்த்தாவாந்தன்மையும்உபாதிபேதத்தால் எல்லையற்றதாக ஆகிறது" என்று கூறுகிறது.

तस्माद्विषयस्य [ज्ञेयस्य] करणीयस्य चानियतत्वात् अनवच्छिन्नत्वाद्धेतोरेकमपि तत् - शक्तिरूपं करणं बोधे कृत्ये च - ज्ञानविषये, कार्यविषये च, तथा - अनियतं, अनवच्छिन्नं अनन्तमेवेत्यर्थः ।

तथा सिद्धान्तसारावल्याम् —

" शक्तिश्चित्तनुरीश्वरस्य करणं ज्ञेयेषु कार्येषु तद्
भेदैस्सोपहिता प्रयाति गुणतो भेदं क्रियाज्ञानतः ।
नित्यं तत्सकलान्यकर्तृनिहिता वर्त्मन्यशुद्धे सिते
कृत्यं सैव करोति पत्यनुगता वामादि शक्त्यात्मिका ॥ "

इति ॥ 90

---

ஆதலின் அறிய வேண்டியனவும் செய்யவேண் டியனவும் அனந்தமாயிருப்பதால் ஒன்றான சக்திரூப மான கரணமும் ஞானவிஷயத்திலும் காரியவிஷயத் திலும் அனந்தமாகிறது.

*சித்தாந்த ஸாராவளி*

"சிவபெருமானுக்கு ஞானகிரியா வடிவமான சக்தி அறியத்தக்கவற்றிலும், செய்யத்தக்கவற்றிலும் சாதன மாயுள்ளது. அச்சக்தி காரியங்களின் பேதங்களால் ஞானசக்தி கிரியாசக்தி என்ற பேதமுள்ளதாகிறது. பரமேச்வரனோடு சேர்ந்துமிருக்கின்ற அந்தச் சிற்சக் தியே சுத்தாத்துவாவில் படைப்பு முதலிய பஞ்சகிருத் தியங்களைச் செய்கிறார்; அசுத்தாத்துவாவில் அனந்த தேவர்களிடத்தில் வாமை முதலிய சக்திரூபமாக இருந்துகொண்டு பஞ்சகிருத்தியங்களையும் செய்கிறார்" என்று சொல்லுகிறது. 90

अथ ज्ञानक्रियारूपशक्तेः ईश्वरस्य मूर्तित्वेनोक्तत्वात् कथं तस्य करणत्वमित्याकाङ्क्षायामिच्छाशक्त(ते)रेव करणत्वम् , अमूर्तित्वेऽपि कर्तृत्वमविरुद्धमिति प्रतिपादयितुं किरणसूत्रं गृह्णाति —

यथा कालो ह्यमूर्तोऽपि दृश्यते फलसाधकः ।
एवं शिवो ह्यमूर्तोऽपि कुरुते कार्यमिच्छया ॥ सू–१३

यथा लोके कालः - क्षणमूर्तादिकः षडर्त (ड्ऋतु) रूपः, फलं - कार्यं, तस्य साधकः, अमूर्तोऽपि - अशरीरोऽपि कालः स्वस्वोचित पुष्पफलादीनां प्रतिक्षणं द्रव्यपरिपाकस्य बाल(ल्य) यौवनादेश्च साधकः कर्ता दृश्यते - प्रख्यायते ।

---

இனி, ஞானகிரியாரூபமான சக்தி சிவபெருமானுக்குத் திருமேனியாகச் சொல்லப்பட்டமையால், சிவபெருமானுக்கு அஃது எவ்வாறு கரணமாகும் எனில், இச்சாசக்திக்குத்தான் கரணத்துவம் உண்டு என்பதையும், சிவபெருமானுக்குத் திருமேனி இல்லாவிடினும் கருத்தாவாந்தன்மையில் விரோதமில்லை என்பதையும் விளக்கக் கிரண சூத்திரத்தை எடுத்துக் கொள்கிறார் :

* யதா காலோ ஹ்யமூர்த்தோz த்ருச்யதேபி பலஸாதக: 1
ஏவம் சிவோ ஹ்யமூர்த்தோபிz குருதே கார்யமிச்சயா 11 சூ–13

உலகத்தில் க்ஷணம் முகூர்த்தம் ஆறுருது ரூபமான காலம் பயனைத் தோற்றுவிக்கின்றது. எவ்வாறு

---

* உருவிலி யாயுங் கால முதவுறு பயன்கண் டாங்கு
மருவுறு மிறைவன் றானும் வடிவில னுயி ருந்தும்
விரிவுறு முலக மாக்கும் விளங்குதன் னிச்சை யாலென்
றெருவிய மலமு டைப்பே ருணர்வின ருரைப்ப ரன்றே.
(சதமணிமாலை)

एवममूर्तोऽपि शिवः कार्यं - क्षित्यादिकं जगत्, कुरुते हि । अनेन शिवस्य शरीराभावेऽपि कर्तृत्वाभावः परिहृतः । तस्य करणस्वरूपमाह — इच्छया - इच्छाशक्त्या, कुरुत इत्यर्थः । तथाच योगिन इव शिवस्य सर्वासु क्रियासु इच्छैव करण-मित्यभिप्रायः ॥ 91

तदुक्तमत्रैव —

" इच्छैव करणं तस्य यथा तद्योगिनां मता। " इति ॥

न चेन्द्रियादिकरणाभावे कर्तृत्वासिद्धिरित्यपि वाच्यम् । अक्षहीनस्याप्ययस्कान्तस्य लोहकर्षक कर्तृत्ववत्तदुपपत्तेः ॥

---

காலமானது சரீரமில்லாதிருப்பினும் தனக்குரிய மலர் பழங்களைப் பயத்தற்கும், இளமை யௌவனம் முதலியவற்றைக் கொடுத்தற்கும், கருத்தாவாகச் சொல்லப்படுகிறதோ, இவ்விதமே சிவபெருமானும் திருமேனியற்றவராய்வைத்தும், மண் முதலிய உலகத்தைப் படைக்கிறார். இதனால் சிவபெருமானுக்குத் திருமேனி இல்லாவிடினும், கருத்தாவாந்தன்மை இல்லை என்பது மறுக்கப்பட்டது. மேலும் அவருடைய கரணத்தைக் கூறுகின்றார். இச்சாசக்தியால் உலகைப் படைக்கிறார் என்பது பொருள். அதனால் யோகிக்குப் போலச் சிவபெருமானுக்கும் எல்லாச் செயல்களிலும் இச்சா சக்திதான் கரணம் என்பது முடிந்த பொருள். 91

இக்கருத்தே கிரணத்தில் மற்றோரிடத்தும் சுட்டப்பட்டுள்ளது; "யோகிகளுக்குப்போல, சிவபெருமானுக்கும இச்சையே கரணமாகும்" என்று.

இந்திரியங்கள் முதலிய கரணங்கள் இல்லாவிடில் கருத்தாவாந்தன்மை அமையாது என்று சொல்லுதல்

यथा श्रीमत्किरणे —

"शल्या कृष्टिकरो दृष्टो ह्यक्षहीना(नो)ऽपि कर्षकः ।" इति ॥

श्री पौष्करेच —

"अनादिरूपो भगवा**निच्छयाह्यवतारकः ।" इति ॥ 92

इत्थं स्वशक्त्यात्मक शरीरकरणस्य वास्तव शरीरकरण-रहितस्य कर्तुः पतिपदार्थस्य त्रैविध्यं मृगेन्द्रसूत्रेणाह —

---

பொருந்தாது. என்னையெனில், இந்திரியமற்ற காந்தக் கல்லுக்கு இரும்பை ஈர்க்கின்ற கருத்தாவாந்தன்மை வாய்த்தல்போல, சிவபெருமானுக்கும் இந்திரியங்கள் முதலிய கரணமில்லாதிருந்தும் கருத்தாவாந்தன்மை வாய்ப்பதும் சாலப் பொருத்தமே என்பது.

**கிரணம்**

"இந்திரியமில்லாதிருக்கும் காந்தக்கல் இரும்பை இழுப்பதைக் காண்கிரோம்" என்று திருஷ்டாந்தம் கூறுவது காண்க.

பௌஷ்கரம்

"உருவமற்ற சிவபெருமான் தம்மிச்சையினுலேயே எல்லாவற்றையும் தோற்றுவிக்கிருர்" என்று சாற்றுகிறது. 92

இவ்வாறு தம்மிற் பிரியாதிருக்கும் சிற்சக்தியையே சரீர கரணங்களாக உடையவரும், உண்மையான சரீர கரணங்கள் அற்றவரும் உலகக் கருத்தாவுமாயுமுள்ள சிவபெருமானுக்கு மூன்று தன்மையை மிருகேந்திர சூத்திரத்தால் விளக்குகின்ருர்.

---

** इच्छयास्यावतारकः

*शक्तोद्युक्तप्रवृत्तश्च कर्ता त्रिविध इष्यते ।
शक्तेः प्रवृत्तिभेदेन भेदस्त ह्युयु(स्तस्यो)पचारतः ॥

सू-१४

अत्र कर्ता - पतिः, शक्तोद्युक्तप्रवृत्तः - शक्तश्च उद्युक्तश्च प्रवृत्तश्च शक्तोद्युक्तप्रवृत्तः द्वन्द्वैकवद्भावः । नपुंसकाभावश्छान्दसः । समानाधिकरणस्तत्पुरुषो वा । शक्त इति उद्युक्त इति प्रवृत्त इति च त्रिविधः - त्रिप्रकार इष्यते, तस्य - पत्युः, भेदः - शक्तादिभेदः, शक्तेः - चिच्छक्तेः,

---

* சக்தோத்யுக்த: ப்ரவ்ருத்தஸ்ச கர்த்தா த்ரிவித இஷ்யதே I
சக்தே: ப்ரவிருத்திபேதேந பேதஸ்தஸ்யோ பசாரத: II சூ–14

உலகத்தைப் படைக்கின்ற சிவபெருமான் சக்தர், உத்யுக்தர், பிரவிருத்தர் என்று மூன்று வகையாக அழைக்கப்படுகிறார். இங்குச் சக்தோத்யுக்தப்ரவ்ருத்தர் என்பது உம்மைத்தொகையால் ஏற்பட்ட ஒருமை நபும்ஸகலிங்கம் அமையாதிருத்தல் சாந்தஸம் அல்லது கர்மதாரயத் தொகை என்றும் கூறலாம். அந்தப் பேதமும் சக்தியினுடைய காரியவேறுபாட்டால் என்க. அஃதாவது சக்தி, செயற்படாது உதாசீனமாயிருப்பது, காரியம் பண்ண உத்யோகிப்பது, காரியம் பண்ணத் தொடங்குவது என்ற காரியங்களால் என்பது

---

*इदं मुद्रिते मृगेन्द्रे नोपलभ्यते ।

இச்சூத்திரம் பதிப்பிக்கப்பட்ட மிருகேந்திரத்தில் காணப் படவில்லை.

* சத்தனே டுத்தி யுத்தன் றகும்பிர விருத்த னென்ன
முத்திற மருவு மீசன் மொழிந்தவவ் விறைக்கப் பேதஞ்
சத்திதன் பேதந் தன்னுற் றுனுப சார மாக
வைத்ததென் றுரைப்பர் சீர்சான் மறையொடா கமநூல்
வல்லோர்.

(சதமணிமாலை)

प्रवृत्तिभेदेन - व्यापारभेदेन, औदासीन्योद्योगप्रवृत्तिरूप व्यापारैरित्यर्थः । उपचार(तः) भवतीति शेषः ॥ 93

तथाचायमर्थः —

अत्र यच्छक्तृ(च्छक्त)त्वं कार्यं *अप्रतियोगि(प्रत्यनुद्योग) त्वं असौ निष्कलावस्था, तद्वान् शान्त इत्युच्यते । यद्यदु(दुद्यु)क्तत्वं सकल निष्कलावस्था सदाशिवः कथ्यते । प्रवृत्ति(त्त) क्रिया(य)त्वं तु स्थूलत्वात् ईश्वर इति । कृत्य-विषयोऽयमवस्थाभेदः, तेनोपचारात् एतत्तत्वत्रयं भिन्न-मित्युच्यते ; न परमार्थत्वादिति ॥

---

பொருள். சிவபெருமானிடம் அந்தப் பேதம் உபசாரமாக அமைந்தது. 93

சக்தத்வம் (சக்தராயிருக்கும் தன்மை) ஆவது ஞானகிரியாரூபமான சக்தி காரியத்தைக் குறித்து முயற்சி, ஈடுபாடு முதலிய அவஸ்தை இல்லாமல் சிவனிடத்திலேயே இருக்குந்தன்மை. இது நிஷ்களாவஸ்தை எனப்படும். நிஷ்களாவஸ்தை உள்ள பொழுது அவர் சாந்தர் எனப்படுகிறார். உத்யுக்தத்வம் (உத்யுக்தராய் இருக்குந்தன்மை) ஸகல நிஷ்களாவஸ்தை. இதனை உடையவர் சதாசிவப்பெருமான் என்று சொல்லப்படுகிறார்; காரியத்தைச் செய்யத் தொடங்கியபொழுது பிரவிருத்தர் ஆகிறார். இது ஸகளாவஸ்தை. இதனை உடையவர் ஈச்வரன் என்று சொல்லப்படுகிறார். இஃது ஈச்வரதத்துவமாகும். செயல் வேறுபாட்டால் அவஸ்தை வேறுபாடு நிகழ்கிறது. அதனால் இந்த நிஷ்களதத்துவம், ஸகள நிஷ்கள தத்துவம், ஸகள தத்துவம் என மூன்றும் உபசாரமாக வேறுபட்டதாகச் சொல்லப்படுகின்றனவே யன்றி உண்மையில் வேற்றுமை இல்லை என்க.

---

* (ख) प्रतियोग्यित्वम्

तथा किरणे —

“ प्रोक्तः स निष्कलः स्थूलस्तथा सकल निष्कलः ।
ईशस्सदाशिवः शान्त इति नाम्ना स्थितिस्त्विह ॥
इच्छानुग्रह कर्तृत्वाह्वयभोगादि(धि)कारवान् ।
त्रिविधः कृत्यभेदेन कथितो नाम भेदतः ॥ ” इति ॥

मतङ्गे —

“शान्त्यतीतं परं तत्व मविनाश्यं शिवात्मकम् ।
येनोन्मीलितसामर्थ्यात्पशवः शिवतां गताः ॥
सदाशिवस्य देवस्य लयस्तत्वेऽतिनिष्कले ।
चतुर्मूर्तिमयं शुभ्रं यत्तत्सकलनिष्कलम् ॥
तस्मिन् भोग(:)समुद्दिष्टः पत्युर्विश्वस्य सर्वधा(दा) ।

---

கிரணம்

சிவபெருமான் நிஷ்களாவஸ்தையில் சாந்தர் என்றும், ஸகள நிஷ்களாவஸ்தையில் சதாசிவப் பெருமான் என்றும், ஸகளா வஸ்தையில் ஈச்வரன் என்றும், பெயரோடு விளங்குகிறார். அவரே அனுக்ரஹம், கருத்தாவாந்தன்மை, இச்சை என்ற கிருத்தியபேதத்தால் லயசிவன், போகசிவன், அதிகாரசிவன் என்றும் மூன்றுவித நாமபேதத்தை அடைகிறார் என்று சொல்லுகிறது.

மதங்கம்

உயிர்கள் யாதொரு சிவதத்துவத்தால் விளங்கப் பட்ட ஞானகிரியா சாமார்த்தியம் உடையவர்களாய் சிவமாந்தன்மை அடைகிறார்களோ, அப்படிப்பட்ட சிவதத்துவமானது சாந்தியதீதமாயும், மேலானதாயும்,

अथाधिकारिणः पत्युः क्रीडि(ड)तः परमं पदम् ॥
स्वतन्त्रस्यापि वक्तव्यं स्वभावोऽस्य यतः पुरा ।
तथा शिवैकरूपं च स्यान्नटे वहुरूपवत्" ॥ इति ॥

पौष्करे —

लयभोगाधिकाराणां न भेदो वास्तवः शिवे ।
किन्तु बिन्दोरणूनांच वास्तवा एव ते मताः॥ इति॥ 94

---

சிவத்தன்மை பொருந்திய தாயுமுள்ளது. அதற்கு நிஷ்கள தத்துவமென்பது பெயர். அங்குச் சிவபெருமான் லயசிவன் என்று சொல்லப்பெறுவர். சாந்தி முதலிய நான்கு கலைகள் ரூபமாயும் நிர்மலமாயுமிருக்கிற ஸகல நிஷ்கள தத்துவத்தில் உலகத்திற்குப் பதியான சிவபெருமானுக்குப் போகம் கூறப்பட்டிருககிறது. அங்கு போகசிவன் என்றும், ஸகல தத்துவத்தில் அதிகாரசிவன் என்றும் சொல்லப்பெறுவர். சுதந்திரமான சிவபெருமான் இலயபோக அதிகாரங்களால் பேதமுடையராயினும், உண்மையில் அஃதுடையர் அல்லர் என்க. எவ்வாறெனின், நடன் ஒருவனே பல வேடந் தாங்கி நடித்தாலும், தன் தன்மையில் மாறுபட மாட்டாமைபோல என்பது. எனவே சிவபெருமான் ஒருவரே;

பௌஷ்கரம்

"லயபோகாதிகார பிரயுக்தமான பேதமானது சிவபெருமானிடத்து உண்மையானதன்று ஆயின், அஃது ஔபாதிகம். இந்த லயபோகாதிகாரங்கள் பிந்துவிற்கும், சுத்ததத்துவத்தில் உள்ள அணுக்களுக்குமே உண்மையானவை என்கிறது." 94.

तत्र [कार्योपसंहार] कार्योद्योग कार्यसंपत्तिरूपावस्था लयभोगाधिकारात्मानः। बिन्दुरपि त्रिविधः। तद्यथा। वास्तव बिन्दुभेदा लयभोगाधिकारतत्वाधिकरणवशेन। शिवस्यापि लयभोगाधिकारेण त्रैविध्यम्। निष्कलादिरूपेण त्रैविध्यम्। *शिवसदाशिव [महेश्वराह्व] येनच त्रैविध्यम्। औपचारिकं सर्वम्। शक्तोद्युक्तप्रवृत्तश्चेत्यनेन चकारेण सङ्गृहीतम्॥ 95

ननु शिवसदाशिवयोस्तर्हि भेदो यदि शिवान्नादाभि- व्यक्तं (क्तिः)सदाशिवेन चेत् पदादिनियमेन स्थापितम्। तदा अनयोस्तत्वयोः(रस्यात्)भेदस्याच्छेदः (भेदे)शास्त्रविरोधः॥

---

இச்சா ஞானகிரியா சக்திகள் தொழிற்பாடின்றி ஒடுங்கி நிற்கும் நிலை, சுத்த மாயை போக்யமாம்படி செயற்படுத்துவதற்கு ஞானசக்தியால் நோக்கி நிற்கும் நிலை, ஆன்மாக்களுக்குச் சுத்தா சுத்தபோகங்கள் நிகழ்வதின் பொருட்டுப் பிந்துமாயையால் புவன போகங்களை உண்டு பண்ணி நிற்கும் நிலை ஆகிய இந்த மூன்று அவஸ்தைகள் லயபோகாதிகாரங்களாக கருதப்படுகின்றன. பிந்துவும் மூன்று விதமாகிறது. அஃதாவது லயபோகாதிகாரதத்துவங்களுக்கு இடமாக இருப்பதால்தான் பிந்துவிற்கு உண்மையாக இந்தப் பேதங்கள் உள்ளன. அவ்வாறே, சிவபெருமானுக்கும் லயம்போகம் அதிகாரம் என்ற பேதங்களால் மூன்று விதத்தன்மை உள்ளன. சிவபெருமானுக்கும் லயசிவன் போகசிவன் அதிகாரசிவன் என்றும், நிஷ்களர் ஸகலநிஷ்களர் ஸகளர் என்றும், சிவன் ஸதாசிவன் மஹேச்வரன் என்றும் கூறப்பட்ட இவையாவும் சிவபெருமானிடத்தே உபசாரத்தால் ஏற்பட்ட வழக்கு. இவை யாவும் ஆண்டுக் கூறிய சூத்திரத்தில் உள்ள உம்மையால் பெறப்பட்டன. 95

---

† (ख) अधिकारात्मा * (ख) परमेश्वरं

एकमेव हि तत्त्वं परमं शुद्धमव्ययम् ।
ईशः सदाशिवः शान्तः पर्यायास्तस्य संस्थिताः ॥
इति ।

उच्यते- सत्यमेकमेव तत् तत्वं, किन्तु कृत्यभेदाद् भेदव्यपदेशो मणिवदिति । यथा मणिद्रव्यमुपादानवशादनेकप्रत्ययभाक् भवति । एवं शिवतत्वं लयाधिकारभोगदामृ(तृ)त्वात् नानाव्यपदेशभाक् भवतीति सकल निष्कलत्वादिभेदेन भेदश्चात्मवदिति । यथा आत्मा शरीरयोगात्सकलः, प्रलयावस्थायामकलः, मुक्त्यवस्थायां पर इत्युच्यते ; शिवोप्येवं सकल निष्कलभेदाद्भिन्न इत्युपचर्यते ॥ 96

---

சிவனிடமிருந்து நாதம் தோன்றியது; அதுவும் சதாசிவப் பெருமாஞல் தத்துவமுறையாக அமைக்கப் பட்டிருக்குமாயின் அப்பொழுது சிவபெருமானுக்கும் சதாசிவப்பெருமானுக்கும் பேதமுண்டாகும்; உண்டாகவே, சிவதத்துவத்திற்கும் சதாசிவதத்துவத்திற்கும் பேதமேற்படும். ஏற்படவே, சாஸ்திரத்திற்கு முரண் எவ்வாறெனின்; மேலானதும், அழிவில்லாததுமான சிவதத்துவம் ஒன்றேயாகும். சிவபெருமானும் ஒருவரே யாவர் அவருக்கே ஈச்வரன், சதாசிவன் சாந்தன் என்பன பரியாய நாமங்கள் உள" என்று சாஸ்திரம் கூறுகிறது எனக்கடா நிகழ கூறுவம்.

உண்மை: ஒரே தத்துவமாகிய சிவதத்துவம் செயல் வேறுபாட்டால் நாஞுவிதமாகக் கூறப்படு கிறது. இரத்தினம் போல என்பது எவ்வாறெனின், இரத்தினமானது தானடைந்த பொருளைக்கொண்டு பல வேறுபாடு அடைவது போல, சிவதத்துவமும் லயபோகாதிகாரங்களைத் தருவதால் பல பெயர்களை எய்துகிறது; ஸகலம் நிஷ்களம் ஸகளநிஷ்களம் என்ற பேதத்தாலும் பலவிதமாக ஆகிறது, உயிர்

एवंभूतस्य कर्तुरीश्वरस्य प्रपञ्चं प्रति निमित्तत्व मुपादानत्वं चास्ति। अभिन्ननिमित्तोपादानत्वाङ्गीकारादिति केचिद्वदन्ति। तान्निराकर्तुं सर्वस्यापि कार्यस्य पृथक्तया कारणत्रयसद्भावं पराख्यसूत्रेण दर्शयति —

निमित्तमीश्वराख्यं तद्यदृष्टं सहकारणम्।
उपादानं च यत्सूक्ष्मं सर्वकार्येषु संगताम(हितमि)ति ॥ सू१५

ईश्वराख्यं-ज्ञानक्रियाशक्तिरूपैश्वर्येण ईश्वर इत्याख्या यस्य तत् ईश्वराख्यं, यन्निमित्तं – निमित्तकारणम्, यच्चदृष्टं - दण्डचक्रादि सहकारणं - सहकारिकारणं, यच्च सूक्ष्मं- मृदादि उपादानकारणं, त्रितयमपि सर्वकार्येषु संहितं - सम्बद्धम्। तथा च कारणत्रय "सर्वकार्येषु संहित" - मित्येतदुत्तर- वचनेन

---

போல என்பது. அதுதான் எவ்வாறெனில், தனு கரணங்களுடன் கூடிய நிலையில் உயிர் ஸகளம், அதனோடு கூடாத நிலையில் அகளம் என்றும்,முக்தி நிலையில் பரம் என்றும் சொல்லப்படுமாறு போல, சிவபெருமானும் இவ்வாறு ஸகளநிஷ்கள பேதத்தால் பேதமுடையவர் என்று உபசாரமாகச் சொல்லப்படு கிறார். 96

இத்தகைய ஸர்வகர்த்தாவான சிவபெருமான் உலகத்திற்கு நிமித்தகாரணமாகவும் உபாதான காரணமாகவும் ஆகின்றார் என்று அபிந்தநிமித்தோபா தானத்தை அங்கீகரிக்கின்ற சிலர் கூறுவர்; அவர்களை மறுத்தல் வேண்டி, எல்லாக் காரியங்களுக்கும் தனித் தனியாக முதல் துணை நிமித்தம் என்ற முக்காரணங் களின் உண்மையை ஸ்ரீபராக்கிய சூத்திரத்தால் உணர்த்துகின்றார்:—

सर्वकार्यस्य प्र(पृ)थक्तया कारणत्रयव्याप्ति-प्रतिपादनेन प्रपञ्चस्यापि कार्यस्य प्र(पृ)थक् कारणत्रयावश्यकतया अभिन्ननिमित्तोपादानत्वं निरस्तम् । 97

ननु ऊर्णनाभिजन्तोर्लुतातन्तुंप्रति निमित्तत्व-मुपादानत्वं च दृष्टमितिचेत । न । तत्रापि तदन्तस्थगतलालया एवतन्त्रा उपादानत्वात । किञ्च ईश्वरस्योपादानत्वे तस्य परिणामित्वमचिद्रूपत्वं च प्रसज्येत । तदुपादेयस्य सर्वस्य प्रपञ्चस्यापि चिद्रूपत्वापत्तिश्च । अतएव तत्समवायशक्तेरपि सो(नो)पादानत्वम् । चिद्विवर्तत्वाङ्गीकारे जगदसत्यतापत्तिः । न चेष्टापत्तिः । सर्वप्रमाणसिद्धस्य जगतोऽपह्नोतुमशक्यत्वात । 98

---

*நிமித்தமீச்வராக்யம் தத்யத்த்ருஷ்டம் ஸஹகாரணம்
உபாதானஞ்ச யத்ஸூக்ஷ்மம் ஸர்வகார்யேஷு ஸம்ஹிதம் சூ-15

ஞானகிரியா சக்திரூபமான ஐச்வர்யத்தால் ஈச்வரர் என்று பெயரை உடையவர். நிமித்தகாரணம். காணப்படும் தண்டம் சக்கரம் முதலியன துணைக்காரணங்கள். மண் முதலிய முதற்காரணம். இம்மூன்று காரணங்களும் எல்லாக்காரியங்களிலும் சம்பந்தமுடையனஎன்க. அஃதாவது மேலே சூத்திரத்தில் கூறியவாறு எல்லாக்காரியங்களுக்கும் தனித்தனியாக மூன்றுகாரணங்களின் நியத ஸம்பந்தம் வேண்டுமென்று சொல்லப்படுவதால், உலகமாகிய காரியத்திற்கும் தனித்தனியாக மூன்று காரணங்கள் இன்றியமையாதன என்பது பெறப்படுகிறது. இதனால் சிவபெருமானுக்கு அபின்ன நிமித்தோபாதானக் காரணத் தன்மை மறுக்கப்பட்டது காண்க. 97

---

*ஏரிய னிமித்த மீச னெனும்பெய ருடையா னென்ப
காரியந் தொறும்பு ணர்ந்து காணுறப் படுவ தீண்டுச்
சீரிய துணைய தென்னத் திகழ்தரு நுண்ணி தாகி
யோரியல் புற்று நிற்ப துபாதான காரணந் தான்.

— சதமணி மாலை

तदुक्तं पौष्करे–

नात्र शक्तिरुपादानं चिद्रूपत्वाद्यथाशिवः ।
परिणामोऽचितः प्रोक्तश्चेतनस्य न युच्यते ॥
चितोविवर्त इत्युक्तौ तथात्वे कार्यशून्यता ।
सर्वप्रमाणसंसिद्धं चिद्विवर्तः कथं जगत् ॥ इति । 99

अत्र च प्रपञ्चस्य ईश्वरो निमित्तकारणम् ।
शक्तयः सहकारिकारणम् । बिन्दुरुपादानकारणम् ।

---

சிலந்தியின் நூலுக்கு சிலந்தியே நிமித்த காரண மாகவும் உபாதான காரணமாகவும் காண்கின்றோம் எனின், அன்று; ஆண்டும் அதன் வாயிலுள்ள உமிழ் நீரே உபாதானமாக உள்ளது என்க; மேலும் சிவ பெருமானை உபாதான காரணமாகக் கூறின், அவரு க்குப் பரிணமத்தன்மையும் சடத்தன்மையும் ஏற்பட்டுக் குற்றமாய் முடியும்; அன்றியும் அவரை உபாதேய மாகக்கொண்ட எல்லா உலகத்திற்கும் சித்தாந்தன்மை யும் ஏற்படும்; மேற்கூறிய காரணம் பற்றியே சிவபெரு மானுடைய ஸமவாயசக்திக்கும் உபாதான காரணமா யிருக்குந்தன்மை இல்லை என்பது. சித்துக்கு விவர்த்த வாதத்தை ஏற்றுக்கொள்ளின் உலகம் இல்லை என்று படும்; அது நமக்கு உடன் பாடன்று, எல்லா அளவை களாலும் நிலைநாட்டப்பெற்ற உலகை இல்லை என்று கூறி மறைப்பதற்கு இல்லாமையால் என்பது. 98

பௌஷ்கரம்

*சுத்தாத்துவாவில் சிவஸமவேதசக்தி உபாதான மாக மாட்டாது. அது சிவனைப்போலச் சித்து வடிவ மாக இருப்பதே அதற்குக் காரணமாகும். பரிணமமும் ஜடப்பொருளுக்குத்தான் கூறப்பட்டிருக்கிறது; சித்துக்

---

* சிவஸமவேத சக்தி பக்ஷம். உபாதானமாகாது என்பது சாத்தியம் சித்து வடிவமாக இருப்பதால் என்பது ஏது. சிவனைப் போல் என்பது திருஷ்டாந்தம். என்று அனுமான ஸ்வரூபம்.

यथा अत्रैव—

"निमित्तमीश्वरस्तेषामुपादानं स बिन्दुराट् ।"

अन्यत्र

"तपने दीधितिश्चन्द्रे चन्द्रि कौष्ण्यमिवानले ।
समवेता शिवे शक्तिः कारणं सहकारणम् ॥
स्वशक्तिश्चश्वरो माया मृच्चक्र [क] कुलालवत् ।"

तत्रापि शुद्धेऽध्वनि शिवस्य निमित्तत्वं, बिन्दोरुपादानत्वम् । अशुद्धेऽध्वनि तु अनन्तेशस्य निमित्तत्वं मायाया उपादानत्वं वेदितव्यम् ।

---

கல்ல. நிர்விகாரமான சித்துக்குப் பரிணாமம் கூறின் நிர்விகாரத்தன்மையே குன்றிவிடும். ஆதலில் சித்துக்குப் பரிணாமம் உண்டு என்பதும் பொருந்துமாறில்லை. பிரபஞ்சமானது சித்தின் விவர்த்தம் என்று கூறப்படுமேயானால், அப்பொழுது காரியமான பிரபஞ்சத்திற்குச் சூன்யத்தன்மை ஏற்பட்டுவிடும். பிரத்யக்ஷ அனுமான ஆகம† அளவைகளால் நன்கு உறுதி செய்யப்பட்ட உலகம் எவ்வாறு சித்து விவர்த்தமாக ஆதல் கூடும்?" என்று விளக்குகின்றது.

ஆதலின் உலகத்திற்குச் சிவபெருமான் நிமித்த காரணர், சக்தி துணைக்காரணம் சுத்தமாயை உபாதான காரணம் என்று அறிக. 99

நிமித்தகாரணர் சிவபெருமான் என்றும் உபாதான காரணம் முதல்வனுக்குப் பரிக்கிரக சக்தியாகிய சுத்தமாயை என்றும் பிறிதோரிடத்தில் ஸ்ரீபௌஷ்கரம் கூறுகின்றது காண்க.

---

† எல்லோருக்கும் பிரமாணமாக உள்ள காண்டல்அளவையால் என்றும் பொருள் கொள்ளலாம்.

किरणे —

“शुद्धेऽध्वनीति(निशि)[वःकर्ता प्रोक्तोऽनन्तोऽस्विते प्रभुः”]

शुद्धाशुद्धयोर्बिन्दुमाययोः शुद्धाशुद्धकार्यव्यत्यास-कारणत्वमुचितम् 100

---

“சூரியனிடத்துக் கிரணம் போலவும், சந்திரனிடத்து நிலவு போலவும், நெருப்பினிடத்து வெப்பம் போலவும் சிவபெருமானிடத்தில் ஸமவேதையான சக்தி காரணமாகும்.* மண் சக்கரம் குலாலனைப்போல, மாயை உபாதான காரணம், சக்தி துணைக்காரணம், ஈச்வரன் நிமித்த காரணமாவர்” என்று மற்றுமோரிடத்தில் கூறப்பட்டிருப்பதைக் கண்டுகொள்க.

சுத்தாத்துவாவில் முதல்வனுக்கு நிமித்த காரணத் தன்மையும், பிந்துவிற்கு உபாதான காரணத்தன்மையும் கொளல்வேண்டும். அசுத்தாத்துவாவிலோவெனில், ஸ்ரீ அனந்தேசப் பெருமானுக்கு நிமித்த காரணத்தன்மையும் அசுத்தமாயைக்கு உபாதான காரணத்தன்மையும் அறியத்தக்கன.

கிரணம்

சுத்தாத்துவாவில் சிவபெருமான் நிமித்த காரணர் என்றும், அசுத்தாத்துவாவில் ஸ்ரீ அனந்தேசப் பெருமான் நிமித்த காரணர் என்றும் குறிக்கின்றது.

சுத்தாசுத்தாத்துவாக்களுக்கு உபாதான காரணமான சுத்த மாயை அசுத்த மாயை இவைகளுக்கிடையே வேற்றுமை சுத்தாசுத்த காரிய ரூபமான வேறுபாடே யாகும். 100

---

*ஸமவேதையான சக்தி பிந்துவைக் கலக்குவதால் முக்கியக் காரணம் என்பது பொருள்; உபாதான காரணமென்றோ துணைக் காரணமென்றோ பொருளன்று.

उक्तं श्रीपौष्करे

*'मायापि नात्रोपादानं मोहकत्वात् स्वतेजसा'
अत्र मायाऽशुद्धेऽध्वनीत्यर्थः । न च कालकर्मादीनामेव जगन्निमित्तत्वं, नेश्वरस्येति वाच्यम् । तेषामचेतनानां चेतनप्रेरणं विना कार्यकारणत्वानुपपत्त्या तत्प्रेरकचेतनावश्यंभावे सति अस्मदादीनां निरूद्ध[दृक्] क्रियतया तत्प्रेरकत्वाभावेन सर्वज्ञस्य सर्वकर्तुरीश्वरस्यैव तत्सम्भवेन सकलप्रपञ्चं प्रति तस्यैव निमित्तकारणत्वौचित्यात् । 101

---

பௌஷ்கரம்

அசுத்தமாயையானது, தன் சக்தியால் மயக்கத்தைச் செய்வதால் சுத்தாத்துவாவில் உபாதான காரணமாக மாட்டாது என்று சுட்டுகிறது.

अत्र (அத்ர) சுத்தாத்துவாவில் என்பது பொருள்.

காலம், கன்மம் இவைகளே உலகத்திற்கு நிமித்த காரணமாகும், சிவ பெருமான் அல்லர் என்று சொல்லலாமே எனின், ஆகாது; காலமும் கன்மமும் சடப் பொருளாகையால் அவைகளுக்கு அறிவுடையோனது தூண்டுதலின்றிக் காரியத்திற்கு நிமித்தகாரணமாயிருக்குந் தன்மை இயல்பாக ஏற்படாமையால் அதனை இயக்குவிக்கின்ற அறிவுடைப் பொருளின் இன்றியமையாமை பெறப்படுகிறது; நம்மைப் போன்றவர்க்கோ எனில், தடைபட்ட ஞானகிரியா சக்திகளை உடையோமாயிருக்குந் தன்மையால் அதை இயக்குவிக்கின்ற தன்மை இல்லை; ஆதலின் முற்றறிவும் முற்றுத் தொழிலுமுடைய முதல்வனான சிவபெருமானுக்கே அது பொருந்துமாதலின், எல்லா உலகத்திற்கும் அவரே நிமித்த காரணர் என்பது சாலப் பொருந்தும் என்க. 101

---

* माया– अशुध्द् माया

"निमित्तमीश्वराख्यं य[द]दृष्टं सहकारणम्"

इतिपाठे— अदृष्टशब्दवाच्यकर्मणः सहकारिकारणत्वमुक्तम् । यथात्रैवावरणेय(तन्त्रावतार)पटले*—

निमित्तमीश्वरस्तेषामुपादानं स बिन्दुराट् ।
नृकर्म* सहकारिस्यात् कार्यमेतत् त्रिहेतुकम् ॥

तस्मात् प्रपञ्चकार्यस्य निमित्तादिकारणत्रय रूपत्वमीश्वरादित्रयस्येति सर्वैरभ्युपेयमिति ॥ 102

---

இந்தச் சூத்திரத்தில் "अदृष्टं सहकारणम्" ("அதிருஷ்டம் ஸஹகாரணம்") என்றும் ஒரு பாடபேதமுள்ளது. அங்கு "அதிர்ஷ்டம்" என்ற சொல்லால் சொல்லப்படுகின்ற கன்மத்திற்குத் துணைக்காரணம் கூறப்பட்டுள்ளது.

இங்கே தந்திராவதார படலத்தில்:—

சுத்தாத்துவாவில் சிவபெருமான் நிமித்த காரணம்; பிந்து உபாதான காரணம்; ஆன்மாக்களின் கன்மம் துணைக்காரணமாகும்.‡ ஆகவே காரியம் மூன்று ஏதுக்களை உடையது என்பது நிறுவப்பெற்றமை காண்க.

ஆகையால் உலகமாகிற காரியத்திற்கும் நிமித்தம், முதல், துணை என்னும் முக்காரணங்களும் முறையே சிவபெருமான், பிந்து, சக்தி அல்லது கன்மம் என்பது எல்லோராலும் ஏற்றுக்கொள்ளத்தக்கது. 102

---

(ख) * आरणेयपटले

* अन्यथेश्वरस्य वैषम्यनैर्घृण्यापत्तेः

‡ அப்படி இல்லாவிடில் சிவபெருமானுக்கு வேறுபாடு இரக்கமில்லாத்தன்மை ஏற்பட்டுவிடும்.

अथ 'न कदाचिदनीदृशं जगदि'ति न्यायेन प्रपञ्चनित्यत्व-वादिनं निराकर्तुं प्रपञ्चस्य कार्यत्वं पराख्यसूत्रेण साधयति ।

मूर्ताः सावयवा येऽर्था नानारूपपरिच्छदाः ।
स्थूलावयवशिष्टत्वाद्बुद्धिमद्धेतु पूर्वि(र्व)काः ॥
अतोऽस्ति बुद्धिमान् कश्चिदीश्वरः समवस्थितः ॥सू १७

मूर्ताः- आकृतिमन्तः, सावयवाः - अवयवसहिताः, नानारूप परिच्छदाः — नाना - बहुविधैः, रूपैः - संस्थानविशेषैः परिच्छदः - आवरणं, येषां ते नानारूप परिच्छदाः एवं भूता ये अर्थाः पृथिव्यादयः एते पक्षत्वेनोपात्ताः । मूर्तादीनि पक्षविशेषणानि कार्यत्वसाधने प्रत्येकं हेतुत्व सूचकतयोपात्तानि ।

---

மேலும், * உலகம் இவ்விதமாகவே இருந்து வருகிறது என்ற நியாயத்தால் உலகிற்கு நித்தியத்தன்மையைக் கூறுவோரை மறுப்பதற்கு உலகம் காரியம் என்பதைப் பராக்கியத்தின் மற்றொரு சூத்திரத்தால் நிலைநாட்டுகிறார்.

† மூர்த்தா: ஸாவயவா யேர்தா நாநாருப பரிச்சதா:
ஸ்தூலாவயவ சிஷ்டத்வாத் புத்திமத்தேது பூர்வகா :
அதோzஸ்தி புத்திமான் கஸ்சிதீச்வர: ஸமவஸ்தித: சூ-17

உருவத்தோடு கூடியவையும் உறுப்புக்களோடு கூடியவையும் பல்வேறுவகை ஸந்நிவேசங்களோடு சூழப்பட்டவையுமாகிய பிருதிவி முதலிய எப்

---

† [பற்பல வடிவ மெய்தப் படும்பொரு ளெவையுந் தோன்றி
நிற்புறு மவைய வத்தா னிகழ்மதி யுடைய வேது
முற்பெறு வனவே யாமிம் முறைமையா லுணர்வின் மிக்க
பொற்புறு மிறைவ னுகப் பொருந்துவ னொருவ னன்றே.]
— சதமணிமாலை

* உலகம் அநாதியாயும் நித்தியமாயுமிருப்பதால் அதற்கு உபாதானகாரணம் நிமித்த காரணம் சொல்ல வேண்டியதில்லை என்பது இம்மதத்தோரின் கருத்து.

ननु बाधादिनिवारकाणि । तस्य प(प्र)तिज्ञामाह- बुद्धि मद्धेतुपूर्वकाः -- बुद्धिः यस्यास्ति सः बुद्धिमान् । सचासौ हेतुश्च सोऽयं बुद्धिमद्धेतुः पूर्वः पूर्वावधिः, येषांते तथाविधाः उपादानादिगोचरापरोक्षज्ञानवत्कर्तृका इत्यर्थः । हेतु पूर्वि(र्व)कत्वसाधनमात्रेण कार्यत्वसिद्धावपि कर्तृविशेष सिद्धिविवक्षया बुद्धिमत्पदं प्रयुक्तम् । तत्र हेतुमाह स्थूलावयव- शिष्टत्वादिति । स्थूलैः-अस्मदादि बाह्येन्द्रियग्राह्यैरव यवैः, शिष्टत्वात् - संबन्ध(द्ध)त्वात् । अत्र चावयवानामप्रत्यक्ष- तया अवयवयुक्तत्वहेतोरसिद्धिपरिहारसूचकतयैव स्थूलपदमुपा- त्तम्, न च व्यभिचारवारकतया । अत्र घटादिवदित्युदाहरणम- भ्याहर्तव्यम् । निगमनमाह । अतः- सावयवत्वादेव बुद्धिमान् समवस्थितः प्रमाणसिद्धः कश्चिदीश्वरः कर्तास्ति । पृथिव्यादी- नामितिशेषः । 103

---

பொருள்கள் உளவோ, அவை பக்ஷமாகக்* கூறப் பட்டன. பக்ஷத்திற்கு விசேஷணமாகவுள்ள வடிவம் முதலானவை, பிரபஞ்சத்திற்குக் காரியத்தன்மையைச் சாதிப்பதில் ஒவ்வொன்றும் காரணமாயிருக்குந் தன்மையைக் காட்டுவதற்காகவே எடுத்துக் கொள்ளப் பட்டன; குற்றங்களை விலக்குவதற்குக் கொள்ளப் பட்டன அல்ல. அதற்கு முதலில் பிரதிக்ஞையைக் கூறுகிறார். உலகமானது தடையற்ற ஞானகிரியைகளை உடைய ஒருவரைக் காரணமாகக் கொண்டது;

---

* பக்ஷமாவது :— அநுமானத்தின் மூலமாக ஒரு பொருளைச் சாதிக்கும் பொழுது சாதிக்கப்படும் பொருளுக்கு ஆதார மாக உள்ளது.

तथा वायवीये—

'प्रधान परमाण्वादि यावत् किञ्चिदचेतनम् ।
न तत् कर्तृस्वयं दृष्टं बुद्धिमत्क(का)रणं विना ॥
जगच्च कर्तृसापेक्षं कार्यं सावयवं यतः ।
तस्मात् कार्यस्य कर्तृत्वं पत्युर्न पशुपाशयोः' ॥ 104

---

உபாதாஞுதி காரணங்களேக் கொண்டு அபரோக்ஷ ஞானவாஞுன ஈச்வரனேக் கருத்தாவாகக்கொண்டவை பூமி முதலியவை என்பது பொருள். காரணத்தை முதன்மையாக உடையது என்று சொன்ன மாத்திரத்தாலேயே உலகம் காரியம் என்பது சித்தித்தபோதும் ஆன்மாவைக் காட்டிலும் விசேஷகருத்தாவைக் கூற வேண்டிய விருப்பத்தால் கருத்தாவுக்குப் புத்திமான் (தடைபடாத ஞானகிரியைகள் உடையவர்) என்ற அடைமொழி கொடுக்கப்பட்டுள்ளது.

அவ்விஷயத்தில் காரணம் கூறுகிருர் :—

நம்முடைய வெளி உறுப்புக்களால் அறியத்தக்க அவயவங்களோடு கூடியிருப்பதால் புத்திமாஞுன கருத்தா அறியப்படுகின்றது. இங்குக் கூறப்பட்ட அவயவங்கள் கண்ணுக்குத் தோன்ருமையால், அவயவத்தோடு கூடியவை என்ற ஏது சித்திக்காமற் போகும். அதனேப் போக்குவதன் குறிப்பாக "ஸ்தூலம்" என்ற சொல் கூறப்பட்டுள்ளது. அது வியபிசார தோஷத்தைத் தடுப்பதற்கன்று. இங்குக் 'குடம்' போல என்ற மேற்கோள் வருவிக்கத்தக்கது. நிகமனம் கூறுகின்ருர் ஆகையால் அவயத்தோடு கூடியிருக்குந் தன்மையாலேயே பிருதிவி முதலான பிரபஞ்சத்திற்கு முற்றறிவினராகிய சிவபெருமான் கருத்தா என்பது பிரமாணசித்தம். 103

अनेन च सकर्तृकत्वसाधनेन पृथिव्यादीनां कार्यत्वं सिद्धम्। अतः कार्यत्वसाधनस्य सुलभत्वेऽपि सकर्तृकत्व साधन द्वारेण तत्साधनमीश्वरसिद्धि नान्तरीयकतया निरीश्वरवाद निराकरणार्थमिति । इदं च पञ्चरूपोपपन्नत्वादन्वयव्यतिरेक्यनुमानम् ।

तदुक्तं श्रीमत्पौष्करे—

'पक्षधर्मः सपक्षे सन् व्यावृत्तश्च विपक्षतः ।
अबाद्धयो(धोऽ)सत्प्रतिपक्षो व्यतिरेकान्वयात्मकः ॥

इति ॥ 105

---

வாயவீயம்

"ஒப்பற்ற ஞானகிரியாவானான கருத்தா இல்லாமல் சடப்பொருளான பரமாணு முதலியவை தாமே கருத்தாவாக முடியாது என்னெனில், இப்பிரபஞ்சம் அவயவ பகுப்புக்களோடு கூடியிருத்தலாலும், காரியமாக இருத்தலாலும் செய்பவர் ஒருவரை வேண்டி நிற்கின்றது. நிற்கவே காரியமாகிற பிரபஞ்சத்திற்குக் கருத்தாவாந்தன்மை சிவபெருமானுக்கே உள்ளது; பசுபாசங்களுக்கு அல்ல" என்று குறிப்பிடுகிறது. 104

இவ்வாறாகக் கருத்தாவாந்தன்மையைக் கூறியதால் பிருதிவி முதலிய பிரபஞ்சம் காரியமாக உள்ளமை தெளிவாம். உலகத்திற்குக் காரியமாந்தன்மையை நிலை நாட்டுவது எளிதெனினும், அதை இங்கு நிலைநாட்டியிருப்பது, காரியம் கருத்தாவோடு கூடியது என்று சொல்லப்பட, அதனால் ஈச்வரசித்தி சாதிக்கப்பெறவே, அத்துடன் நிரீச்வர வாதமும் மறுக்கப்பட்ட பயனுடையதாகிறது.

இது பஞ்சரூபமுடைத்தாதலின் அந்வய வியதிரேகி அனுமானமாகும்.

इदानीमीश्वरकृत्यस्यैव इयत्तया परिच्छेदं साधन प्रयोजनत्वं च मृगेन्द्रसूत्रेणाह—

जगज्जन्मस्थितिध्वंस तिरोभाव विमुक्तयः ।
कृत्यं सकारकफलं ज्ञेयमस्यैतदेव हि ॥ सू१८

जन्म च स्थिति श्च ध्वंसश्च तिरोभावश्च विमुक्तिश्चेति द्वन्द्वः । जगतो जन्मेत्यादि षष्ठीतत्पुरुषः । एते जगज्जन्मादयः पञ्च । एतत् पञ्चविधं अस्यैव—परमेश्वरस्यैव सम्बन्धि, कृत्यम् । सकारकफलं-कारकैः - शक्त्यादिभिः, फलेन- भुक्तिमुक्त्यात्मना च सहितं, ज्ञेयम्—अवबोद्धव्यम् ॥ 106

---

பௌஷ்கரம்

பக்ஷதர்மத்வம், ஸபக்ஷஸத்வம், விபக்ஷாஸத்வம் அபாதித விஷயத்வம் அஸத்ப்ரதிபக்ஷத்வம் என்ற ஐந்து அவயவங்களோடு கூடியது அந்வய வியதிரேகம் எனக் குறிக்கிறது. 105

இப்பொழுது இறைவனது செயலுக்குத் தன்மையையும் கரணத்தையும் பயனையும் மிருகேந்திர சூத்திரத்தால் விளக்குகிறார்.

* ஜகஜ்ஜன்ம ஸ்திதித்வம்ஸ திரோபாவ விமுக்தய: 1
க்ருத்யம் ஸகாரகபலம ஜ்ஞேயமஸ்யைததேவஹி 11 சூ-18

"ஜன்ம ஸ்திதித்வம்ஸ திரோபாவ விமுக்தய:" இங்கு உம்மைத் தொகை; ஜகத்ஜன்ம என்றவிடத்தில் ஆறும் வேற்றுமைத்தொகை

---

* படைப்பது முலக மெல்லாம் பாதுகாத் தளித்த லும்பின்
துடைப்பது மறைத்த ருனுந் தொல்லைய மலங்கள் யாப்பு
விடுப்பது மாகு மிவ்வைம் பயன்படு வினைக ளெல்லாம்
தடுப்பில னுமொ ருத்தன் றன்பெருந் தொழிலென் ருேர்வாய்
[சதமணிமாலை

* [படைத்த னிறுத்த லழித்தன் மறைத்தல்
விடுத்தல் கருவியின் வினைபய னேடு
மியற்றுவ துலகிற் கிறையது தொழிலே.]
(வெள்ளியம்பலவாண சுவாமிகள்)

अत्र जगच्छब्देन जन्मवत् जन्तुचक्रमुच्यते ! तस्य जन्म शिवस्यैकं कृत्यम् । साक्षाच्छिवसृष्टि[ः]शुद्धाध्वविषये बिन्द्वात्मकादुपादानात् शुद्धतत्व भुवनाद्युत्पादनपूर्वं तद्भुवन वासिनां विद्याविद्येश्वराणां च बैन्दवशरीरयोजनात् *नादादि क्रमेणशब्दोत्पादनम् । अनन्तादिद्वारक सृष्ट्य(ष्टि)रशुद्धाध्व विषये मायाख्यादुपादानात् अशुद्धतत्व भुवनाद्युत्पादनपूर्वं भोगा(गो)पयोगिपरिकरसहितस्य पौनःपुन्येन तत्तद्विविधयोनिषु उद्भावनं च जन्म शब्देन गृहीतम् । 107

---

படைத்தல் காத்தல் அழித்தல் மறைப்பு அனுக்கிரகம் என்ற இந்த ஐந்துவகைச் செயல்களும் ஸ்ரீ சிவபெருமானுடைய காரியங்களாம். இவ்வைந்தொழிலும் சக்தி முதலிய கரணங்களோடும் போகம் அனுக்கிரகம் என்ற பயனேடும் கூடியவை என்று அறியத்தக்கது. 106

இங்கு जगत् (ஜகத்) என்ற சொல்லால் பிறப்பை உடைய உயிர்த்தொகுதி குறிக்கப்படுகிறது. அந்த உலகதனைப் படைப்பது சிவபெருமானது முதல் காரியமாகும். சிவபெருமானுடைய ஸாக்ஷாத் சிருஷ்டி யாவது சுத்தாத்துவாவில் சுத்தமாயையை உபாதான மாகக் கொண்டு, சுத்தாத்துவ புவனங்களைத் தோற்று வித்து அங்குள்ள வித்யா வித்யேச்வரர்களுக்குப் பைந்தவ சரீரத்தைக் கொடுத்தலும், சூக்குமை * முதலிய சப்தப் பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தலுமே யாகும். அசுத்தாத்துவாவில் அனந்தேச்வரர் வாயிலாக அசுத்தமாயையை உபாதானமாகக் கொண்டு, அசுத்த தத்துவ புவனங்களைத் தோற்றுவித்துத் தனுகரண புவனங்களோடு மாறி மாறிப் பலப்பல யோனிகளில் உயிர்களைத் தோற்றுவித்தலும் "ஜன்ம" என்ற சொல்லால் சுட்டப்பட்டது. 107

---

* अत्र नादशब्देन सूक्ष्मा वागुच्यते

* மூலத்தில் நாதம் என்னும் சொல்லால் சூக்குமை வாக்குச் சொல்லப்படுகிறது.

तत्रैवोक्तम्—

तत्रादौ केवलाणूनां योग्यानां कुरुतेऽष्टकम् ।
वामादि शक्तिभिर्युक्तं सप्तकोटिपरिच्छदम् ॥
तेषामनन्त[:]सूक्ष्मश्च तथा चैव शिवोत्तमः ।
एकनेत्रैकरुद्रौ च त्रिमूर्तिश्चामितद्युतिः ॥
श्रीकण्ठश्च शिखण्डी च राजराजेश्वरेश्वराः ॥

अत्र राजानो लोकेश(शा)इन्द्रादयः तेषां राजानः शतरुद्राः, तदीश्वराणां मण्डल(लि)प्रभृतीमप्येते ईश्वराः प्रभवः, विद्यामहेश्वरा इति यावत् । एते च सर्वे शिवप्रेर्या न स्वतन्त्राः 108

---

மிருகேந்திரத்தில்:

சிவபெருமான் படைப்பு முதலிய பஞ்சகிருத்தியங்களையும் செய்யும்பொழுது, முதலில் கன்மமலம் மாயா மலமற்ற விஞ்ஞானகேவலர்களுள் ஏழுகோடி மந்திர மந்திரேச்வர பரிவாரங்களோடும் வாமாதி நவசக்தி களோடுங் கூடிய பக்குவமுற்ற அனந்தேசர் முதலிய எண்மர்களைப் படைக்கிறார் என்று சொல்லப் பட்டுள்ளது. அவர்களாவார் அனந்தேசர், சூக்ஷ்மர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திருமூர்த்தி, ஸ்ரீகண்டர், சிகண்டி என்போர். இவர்கள் ராஜ ராஜேச்வரேச்வரர்கள் என்று சொல்லப்படுகிறார்கள்.

இங்கு அரசர்கள் திக்பாலகர்களான இந்திரன் முதலியவர்கள், அவர்களுக்கும் அதிபர்களான சதருத்திரர்கள், அவர்களுக்கும் ஈசர்களான மண்டலேச்வரர்கள் என்னும் இவர்களுக்கும் அதிபதிகள் அவ்வெண்மர் ஆவர். இவர்கள் வித்யா மஹேச்வரர்கள் என்றும் கூறப்படுகிறார்கள். இவர்கள் யாவரும் சிவபெருமானின் ஏவலாலேயே ஐந்

तथा —

ईषदप्राप्तयोगित्वान्नियोज्याः परमेष्ठिनः ॥
सर्वज्ञत्वादियोगेऽपि नियोज्यत्वं मलांशतः ।
परस्परं विशिष्यन्ते मन्त्राश्चैवमधस्स्थताः ॥
ते च मन्त्रेश्वरा (र) व्यक्ताः शि(त शि) वशक्तिप्रचोदिताः ।
कुर्वन्त्यनुग्रहं पुंसां यदा येषां स युज्यते ॥

ते च मन्त्राः परापर‡ मन्त्रेश्वर व्यक्तया शिवशक्त्या व्यापारिताः योग्या(ग्य)तानुरूपेण कदाचित् केषाञ्चिदनुग्रहं कुर्वन्ति । न तु योग்யா(ग्य)तानपेक्षम् । 109

---

தொழில்களையும் செய்கின்றவர்கள். இதனால் இவர்கள் சுதந்திரர்கள் அல்லர் என்க. 108

மிருகேந்திரம்—

அனந்தேசர் முதலிய எண்மர்களும் "அதிகார மலமுடையவராதலால் பரமேச்வரனுக்குச் சமானமாக மாட்டார்கள்; அவரால் ஏவப்படுகின்றவர்களே ஆவர். இந்த எண்மர்களும் முற்றறிவு முற்றுத்தொழில் முதலிய குணங்களோடு கூடியிருப்பினும், ஒவ்வொருவரும் தத்தம் கீழுள்ளவர்களை ஏவுகின்றபடியால் மேல் நிலையிலுள்ளவர்களை நோக்கக் கீழ் நிலையில் உள்ளவர்கள் கருத்தாவாந்தன்மையில் சற்றுச்சற்றுக் குறைந்தவர்கள் ஆவர். இதுவே அவர்களுக்குள் உண்டான விசேடம். இவ்விதமே அனந்தேசர் முதலிய எண்மருக்கும் கீழுள்ள ஏழு கோடி மஹாமந்திரர்களும் மந்திரேச்வரர்ட த்தில் அபிவியக்தமான சிவசக்தியால் ஏவப்பட்டு எவர்களுக்குப் பரிபாகம் ஏற்பட்டிருக்கிறதோ, அவர்களுக்கு அனுக்கிரகம செய்கின்றனர் என்று மேலும் கூறுகின்றது.

---

‡ परमन्त्रेश्वराः - अनन्तादयः । अपरमन्त्रेश्वराः – क्रोधेशादयः ।

* பரமந்திரேச்வரர்–அனந்தேசர் முதலியவர் அபரமந்திரேச்வரர்–குரோதேசர் முதலியவர்.

"प्रयोक्तृदेहसापेक्षं तदमर्ध्वखिलेऽध्वनि ।
कृत्वाधिकारं स्थित्यन्ते शिवं विशति ई(से)श्वरम् ॥
विनाधिकरणे नान्यत्र प्रधानविकृतेरधः ।
कृत्वाधिकार[मी]श्रेष्ट(शेष्ट)मवै(पै)ति स्वध्वसंहतौ ॥
ततोऽन[न्ता]द्यभिव्यक्तः पतीनां ग्रन्थितत्वतः ।
कलाद्यारब्धदेहानां करोत्यष्टा*दशं शतम् ॥
तानप्याविश्य भगवान्....[सा]ज(ज्ञ)नान्भुवनाधिपान् ।
ऐ(ये)भ्यः सर्वमिदंए(ये)षां शक्ति[ः]कर्मनिबन्धनाः(ना) ॥
प्रणेतॄन पशुशास्त्रणां पशूंस्तदनुवर्तकान् ।
स्वसाध्यकारकोपेतान् कालधामावधिष्टि (स्थि)तान् ॥इति
110

அம்மந்திரர்களும், பரமந்திரேச்வரர்கள், அபர மந்திரேச்வரர்கள் இவர்களிம் அபிவியத்தமான சிவ சக்தியால் தூண்டப்பட்டு, பரிபாகத்திற்குத் தக்கவாறு சிலருக்கு அனுக்கிரகம் செய்கின்றுர்கள்; தகுதியை நோக்காமல் அனுக்கிரகம் செய்வதில்லை. 109

மேற்கூறிய ஏழுகோடி மஹாமந்திரர்களுள் பிற்பாதியான மூன்றரைக் கோடி மஹா மந்திரர்கள் அனுக்கிரகம் செய்கின்ற குருவடிவத்தை அதிட்டித்து நிறகின்ற சிவத்தை அபேக்ஷித்து நின்று எல்லா மாயாகாரியமான அத்வாக்களிலும் அனுக் கிரகிக்க வேண்டியவர்களை அனுக்கிரகிப்பது என்ற தம் அதிகாரத்தை முடித்துக்கொண்டு ஸ்திதி காலத்தின் முடிவில் அனந்தேசப் பெருமானின் உத்திரவு பெற்று மந்திரேச்வரர்களோடுகூட சிவஸாயுஜ்யத்தை அடை கின்றனர். மற்ற முற்பாதியான மூன்றரைக்கோடி பேர்

* कलामस्तकवासिनो गहनेशदयो मण्डलिनोऽष्टौ, गुणमस्तकस्थाः क्रोधादयोऽष्टौ, शतरुद्राधिष्ठाता वीरभद्रः, गुणतत्वनिलयोऽधस्तन भुवनादेश्च कर्ता श्रीकण्ठः,ब्रह्मण्डधारकाः शतरुद्राः ॥

स्थितिः-- तदिच्छानिरुद्धस्य स्वदृष्टस्य सर्वलोकस्य पुरुषार्थसिद्धये व्यापारप्रसिद्धये [स्वविषये] नियोजनं स्थापनं, द्वितीयं कृत्यम् ।
यथा तत्रैव

स्थितौ सकारकानेतान् समाक्रम्य स्वतेजसा ।
युनक्ति स्वार्थसिद्ध्यर्थं भूतैरनभिलक्षितः ॥ इति । 111

களும் சிவபெருமானின் இச்சையால் குருவடிவத்தை எதிர்பாராமலேயே சுத்த வித்யா தத்துவத்திற்குக் கீழுள்ள அசுத்த மாயாத்துவாவில் அதிகாரத்தைச் செய்து தம் அத்துவாவிற்குச் செய்யவேண்டிய அனுக்கிரகம் முடிந்தபொழுது மஹாபிரளய காலத்தில் மந்திரேவரர்களுடன் சிவபெருமானை அடைகின்றனர். மேலும், சிவபெருமான் அனந்தேசர் முதலியவர்களிடத்தில் அபிவியக்தராய் மாயாதத்துவத்திலிருந்து மாயாகர்ப்பாதிகாரிகளான நூற்றுப்பதினெட்டு* மந்திரேச்வரர்களை நியமித்து அவர்களுக்கு கலாதிகளின் சம்பந்தம் அனந்தேச்வரர் மூலமாகவே செய்கின்றார். அந்த மண்டலி முதலானவர்களையும் அதிஷ்டித்துக்கொண்டு சிவபெருமான், தாவர ஜங்கம ரூபமான உலகங்களைப் படைக்கின்றவர்களும், கன்ம பாசத்தை அனுசரித்த சக்தியுள்ளவர்களும் மலசம்பந்தமுடையவர்களுமான நான்முகன் முதலானவர்களை அந்தந்த உலகங்களுக்கு அதிபதிகளாகவும் வெளிப்படுத்தப்பட்ட ஞானக்கிரியா சக்தியுடையவர்களாகவும் செய்கின்றார்.

* கலாமத்தகத்தில் வாசஞ் செய்கின்ற கஹநேசர் முதலிய மண்டலிகள் எண்மர், குணதத்துவத்தின் மத்தகத்தில் வாசஞ் செய்கின்ற க்ரோதாதிகள் எண்மர், நூறுருத்திரர்களையும் நியமிக்கின்ற வீரபத்திரர், குணதத்துவத்தை இடமாகக் கொண்டு அதற்குக் கீழ்ப்பட்ட புவனங்களுக்குக் கருத்தாவாயுள்ள ஶ்ரீகண்டர், பிரமாண்டங்களுக்கு ஆதாரமாயுள்ள நூறு ருத்திரர்கள்-ஆக நூற்றுப் பதினெண்மர் ஆவர் என்றறிக.

ध्वंसः - शुद्धाशुद्धाध्व भोगसाधन तनुकरण भुवनादीनां बिन्दुमायात्मक कारणे श(स)शक्त्यात्मनां विलयन द्वारान्तर्नि- हितानां(णु)सङ्कल्पाधिष्ठानेन भवाध्वभ्रमण श्रान्तानां संसारिणां विश्रमायावस्थापनं, तृतीयकृत्यम् ।

यथा तत्रैव—

'भोगसाधनमाक्षिप्य कृत्वा कारणसंश्रयम् ।
तच्च सात्मकमाश्रित्य विश्रमायावतिष्ठते ॥
भविनां भवखिन्नानां सर्वभूतहितो यतः ॥ 112

---

மேலும் "ஆர்ஹத, ஸாங்கியம், முதலிய பசு சாஸ்திரங்களை இயற்றிய அர்ஹர், கபிலர் முதலியவர் களையும் அவர்களைப் பின்பற்றி நிற்கின்ற பசுக்களையும், அந்தந்த சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட பயனேடும் போக ஸாதனங்களான தத்துவ பாவபுவனங்களோடும் கூடியவராகச் செய்து, காலாக்னி புவன பரியந்தம் இருப்பவர்களாகவும் செய்கின்றார்" என்று ஸ்ரீ மிருகேந் திராகமம் சொல்லுகின்றது. 110

स्थिति: (ஸ்திதி:) காத்தல்; தனது இச்சா சக்தியால் வெளிப்படுத்தப்பட்ட எல்லா உலகங்களையும் போக மோக்ஷங்கள் சித்திப்பதற்காகத் தத்தம் விஷயங்களில் நிறுத்துதல். இது சிவபெருமானின் இரண்டாவது தொழில்.

அங்கேயே,

"அவித்யா வசத்தால் ஆன்மாக்கள் அறிய இயலாத அருட் செயலை உடைய சிவபெருமான் போக ஸாதனமான தத்துவ புவனங்களோடு கூடிய ஆன் மாக்களைத் தம் இச்சையால் அவர்களால் வேண்டப் படுகின்ற போகத்தை அனுபவிக்கச் செய்வதின் பொருட்டு நிலைநிறுத்துகிறார்" என்று அந்நூல் கூட்டுகின்றது. 111

अयमेव ध्वंसः प्रलय इत्युक्तः । स च त्रिविधः अधम मध्यमोत्तमभेदेन । ब्रह्मणो दिनान्तस्वापे, क्ष? कालाग्नि रुद्रोर्ध्वावलोकनवह्निना भूर्भुवस्स्वर्लोकानां त्रयाणां क्ष(ल)योऽधमप्रलयः। श्रीकण्ठस्य दिनान्तस्वापे भूततत्वादि गुणत त्वान्तलयो मध्यम प्रलयः । कालाग्निभुवनादि नादान्तलय उत्तम प्रलयः।

तत्सर्वं* मतङ्गे विस्तरेण प्रदार्शितम् । ग्रन्थविस्तरभयान्नेह प्रतन्यते । अस्मिन् महाप्रलये माया पुरुष शिश (शि) वव्यति रेकेण सर्वेषामुपसंहार एव ।

तथाऽचिन्त्यविश्वे—

"महार्थसंहारकाले मायात्म (त्मा) नश्च सर्वशः ।
शिवश्चशुद्धमायानि ति(मिस्ति)ष्ठत्यन्य(ये) च लीयन्ते
आशुनश्च पशुनाष्य द्धि? [आत्मनामुपभोगार्थ] मेते
तिष्ठन्ति सर्वदा ॥ इति ।

---

ध्वंसः (த்வம்ஸ:) அழித்தல்; ஸ்திதிக்குப் பின்னர்ச் சுத்தாசுத்தாத்துவாவின் போக ஸாதனமான தனு கரண புவனங்களைச் சுத்தாசுத்த மாயா காரணத்தில் ஒடுங்கச்செய்து அனந்தேசப் பெருமான் முதலியோரை அதிட்டித்துநின்று பிறவிக்கடலில் திளைத்துக் களைப் புற்ற ஆன்மாக்களை இளைப்பாறச் செய்தல். இது சிவபெருமானின் மூன்றுவது தொழிலாகும்.

மிருகேந்திரம்—

"பிறவி வழியில் களைப்புற்ற உயிர்களுக்கு இளைப் பாற்றற் பொருட்டுப் பரமகருணைநிதியான பரமேச்வரன் போக ஸாதனங்களான தனுகரண புவனங்களை முதற் காரணமான மாயையில் ஒடுக்கி அதையும்* ஆக்ரமித்துக்

---

* ख एतत्सर्वम्

* ஓய்வில்லாது கணக்கற்ற சரீரங்களை உண்டு பண்ணினமை யால் சக்தி குறைந்திருக்கின்ற மாயைகளுக்குச் சக்தியைத் தோற்றுவிப்பதற்காக மாயையை ஆக்கிர மித்து நின்று ஒடுக்குகின்றார் என்றறிக.

यदाहुः श्रीवार्तिककार(रा)ः—

स्वसंका(स्का)रोचिताद्भोगा दप्रच्य(या)त्रः शरीरिणाम्।
प्रोक्तं संरक्षणान्ना(णंना)म न्यायेन परिपालितम्॥ 114

सा(वि)*मुक्तिः - अनुध्यान?मनुग्रहः, पाशतिरोधा‡नान्ना (द)णूनां परापर मोक्षदानम्। तत्रापरमोक्षः षड्विधः। परस्त्वेकविधः।

---

காலத்தில் மாயா, புருடன், சிவன் இம்மூன்றும் நிலைத்து நிற்கும் என்றும், மீண்டும் அம்மூன்றும் முன்போலப் படைப்பு முதலிய செயல்களில் ஈடுபடுகின்றன என்றும் சொல்லப்பட்டுள்ளது. 113

तिरोभावः (திரோபாவ:) மறைத்தல்; திரோபாவ மானது உயிர்களின் பாசநீக்கங் காரணமாக உயிர்களை ஏற்ற போகங்களிலிருந்து விலகாமல் அழுந்தி அனுப விக்கச் செய்தல். இது சிவபெருமானின் நான்காவது தொழில்.

இதுவே ஸம்ரக்ஷணம் என்ற தொழிலாக மற்றோர் இடத்தில் கூறப்பட்டிருக்கிறது.

பிரமாணம்

தங்களுக்கேற்ற போகானுபவத்திலிருந்து உயிர்களை வழுவாமல் செய்வது ஸம்ரக்ஷணம் என்ற செயலாக ஸ்ரீ வார்த்திககாரர் கூறியிருப்பதே யாகும். 114

विमुक्तिः (விமுக்தி :) அனுக்கிரகம். பாசத்தை நீக்கி உயிர்களுக்குப் பராபரமோக்ஷங்களை அருளுதல். அந்த இருவிதமோக்ஷங்களுள் அபரமோக்ஷம் ஆறு விதமானது; பரமோக்ஷம் ஒரே விதமானது.

---

(ख) * विमुक्तिश्च ‡ पाशतिरोधानेनाणूनां

यदाहुः श्रीवार्तिककार(रा):—

स्वसंका(स्का)रोचिताद्भोगा दप्रच्य(या)त्रः शरीरिणाम्।
प्रोक्तं संरक्षणांन्ना(णंना)म न्यायेन परिपालितम्॥ 114

सा(वि)*मुक्तिः – अनुध्यान?मनुग्रहः, पाशतिरोधा‡नान्ना (द)णूनां परापर मोक्षदानम्। तत्रापरमोक्षः षड्विधः। परस्त्वेकविधः।

---

காலத்தில் மாயா, புருடன், சிவன் இம்மூன்றும் நிலைத்து நிற்கும் என்றும், மீண்டும் அம்மூன்றும் முன்போலப் படைப்பு முதலிய செயல்களில் ஈடுபடுகின்றன என்றும் சொல்லப்பட்டுள்ளது.
113

तिरोभावः (திரோபாவ:) மறைத்தல்; திரோபாவ மானது உயிர்களின் பாசநீக்கங் காரணமாக உயிர்களை ஏற்ற போகங்களிலிருந்து விலகாமல் அழுந்தி அனுப விக்கச் செய்தல். இது சிவபெருமானின் நான்காவது தொழில்.

இதுவே ஸம்ரக்ஷணம் என்ற தொழிலாக மற்றோர் இடத்தில் கூறப்பட்டிருக்கிறது.

பிரமாணம்

தங்களுக்கேற்ற போகானுபவத்திலிருந்து உயிர்களை வழுவாமல் செய்வது ஸம்ரக்ஷணம் என்ற செயலாக ஸ்ரீ வார்த்திககாரர் கூறியிருப்பதே யாகும்.
114

विमुक्तिः (விமுக்தி:) அனுக்கிரகம். பாசத்தை நீக்கி உயிர்களுக்குப் பராபரமோக்ஷங்களை அருளுதல். அந்த இருவிதமோக்ஷங்களுள் அபரமோக்ஷம் ஆறு விதமானது; பரமோக்ஷம் ஒரே விதமானது.

---

(ख) * विमुक्तिश्च ‡ पाशतिरोधानेनाणूनां

तथा मतङ्गे —

मोक्षस्सप्त प्रकारोऽयं विभागेनोपवर्णितः ।
एभ्यो ह्येकः परः सूक्ष्मः कार्यकारणगोचराः (रः)
अतीतः परिपूर्णश्च स्वतन्त्रः सर्वतोमुखः ।
एको निरीश्वरः स्वस्थः षडन्ये सेश्वरामताः ॥
संरुद्धशक्तयश्चान्ये स्थूलभेदाः प्रकीर्तिताः । इति ।

इदमनुग्रहरूपं कृत्यं शिवः सृष्टिकाले स्थितिकाले संहारकालेऽपि करोति ।

तदुक्तमत्रैव—

यान्विमोचयति स्वापे शिवाः सत्या(द्यो)भवन्ति ते ।
संहृतौ वा म(स)मुद्भूतावणवः पतयो घनाः(ऽथवा) ॥

---

மதங்கத்தில்—

"மோக்ஷம் ஏழு வகையானது. ஒன்று பரம்; அது ஸூக்ஷ்மம் என்று சொல்லப்படும். ஏனைய அபரமானது காரியகோசரம், காரண கோசரம், அதீதம், பரிபூரணம், ஸ்வதந்திரம் ஸர்வதோமுகம் என்று அறுவகைப்படும். தடைபடாத ஞானகிரியா சக்தியோடு தனக்குமேல் தலைவன் இல்லாது பரனுகவே பேதமற நிற்றல் பரமுக்தி. மற்ற ஆறும் தடைபட்ட ஞான கிரியா சக்தியோடு ஜீவனுகி நின்று சிவானுபவ மேலீட்டால் பாசத்தை விட்டுச் சிவனுக்குச் சமமாக இருத்தல். பின் சொல்லிய ஆறு பேதங்களும் ஸ்தூலங்கள் எனப்படும்" என்று விரிவாகக் கூறப் பட்டுள்ளது காண்க.

இந்த அனுக்கிரகம் என்ற காரியத்தைச் சிவ பெருமான் சிருஷ்டி காலத்திலும், காக்கின்ற காலத் திலும், அழிக்கின்ற காலத்திலும் கருணையால் அருளு கின்றார்.

स्थितौ याननुगृह्णाति गुरुमास्थाय *चित्वि(त्व)तः ।
रुद्रमन्त्रपतीशान पदभाजो भवन्ति ते ॥ 115

स्वायम्भुवे कृत्यस्य प्रयोजनमुक्तम्—

एवमाख्यमिदं कृत्यं किं कारणमुदाहृतम् ।
पशूनां देहसंयोगो भोगमोक्षाय कथ्यते ॥
तथापि सहचेत्याहुरनादिमलमोचकः । इति ।

இங்கேயே கூறப்பட்டுள்ளது.

"சிவபெருமான், சங்காரத்திற்குப்பின் யாவர்களுக்கு அனுக்கிரகம் செய்கின்றாரோ, அவர்கள் அப்பொழுதே சிவமாந்தன்மை எய்துகின்றார்கள். சங்கார காலத்திலும் சிருஷ்டி காலத்திலும் யாவர்களுக்கு அனுக்கிரகம் செய்கின்றாரோ, அவர்களும் சிவமாந்தன்மை எய்துகிறார்கள்; அல்லது சிருஷ்டி காலத்திலும் சங்கார காலத்திலும் அவர்கள் மலபரிபாகத்திற்குத் தக்கவாறு நிரதிகார முக்தியையாவது ஸாதிகாரபதித்தன்மையையாவது அடைகிறார்கள். அஃதாவது ஸங்கார காலத்தில் யாவர்களுக்கு ஸாதிகாரமான அனுக்கிரகம் எய்துகிறதோ, அவர்கள் ருத்ராணுக்கள் ஆவர். சிருஷ்டி காலத்தில் யாவர்களுக்கு ஸாதிகாரமான அனுக்கிரகம் எய்துகிறதோ, அவர்கள் பராபர வித்யேச்வரர் முதலிய பதிகள் ஆகின்றார்கள். ஸ்திதி காலத்தில் சிவபெருமான் குருவடிவம் தாங்கிப் பராபர மோக்ஷ ஸம்பந்தமான ஞானமுடைய எந்த அணுக்களை அனுக்கிரகிக்கின்றாரோ, அவர்கள் மந்தம தீவிரம் முதலிய சக்தி நிபாத வேறுபாட்டால் ருத்திரர், மந்திரர், மந்திரேச்வரர், ஈசானர் என்ற இவர்களுடைய பதங்களை அடைகின்றனர்; அஃதாவது ஸாலோக்யம் முதலிய பதங்களை அடைந்தவர்கள் ஆகின்றனர்" என்று விரிவாகக் கூறுகின்றது. 115

"இவ்வாறு சிவபெருமான் ஐந்தொழில் அருளுவதின் பயன்யாதோ வெனின், அநாதியாகவுள்ள

* तसौ मत्वर्थ इति भसंज्ञया पदत्ववाधान्न जश्त्वम्

अत्र एवकारेण शिवस्यैव एतत् पञ्चकृत्यं *विद्येश्वरादीनां तत्प्रेरणयेति दर्शयति ।

तथा रौरवे—

अधिकारं प्रकुर्वन्ति शिवेच्छाविधिचोदिताः ॥ इति । 116

एतच्च कृत्यं न मायादिभिः कर्मभिर्वा निवर्तयितुं शक्यम्, अचेतनत्वात् । नापि पुरुषेण तस्य मलनिरुद्धशक्तिकत्वात् । सकारकमित्यनेन साधनापेक्षा च शिवस्य दर्शिता । अन्यथा निर्हेतुको मोक्षः स्यात् । अन्यानपेक्षणात् सर्वस्यैव स्यात्, कस्यापि वा न स्यात् ।

यथाहुः—

नित्यं सत्वमसत्वं वा हेतोरन्यानपेक्षणात् ।
अपेक्ष(क्षा)तो हि भावानांकादाचित्कात्वसम्भवः ॥ इति ।
117

---

ஆணவமல ஆற்றலை விடுவிக்கின்ற சிவபெருமான் உயிர்களுக்குப் போகமோக்ஷங்களைக் கொடுத்தற் பொருட்டு உயிர்களைத் தேகத்தோடு கூட்டுவிக்கின்றார்" என்று ஸ்வாயம்புவாகமம் உரைக்கின்றது.

இச்சூத்திரத்தில் கூறப்பட்ட ஏகாரத்தால், இவ்வைந்தொழிலும் சிவபெருமானுக்கு உரியவாகும்; ஸ்ரீவித்யேச்வரர்களுக்கு இத்தொழில் அதிகாரம் இல்லையோ எனின், அவர்களும் சிவபெருமானல் அதிஷ்டிக்கப் பெற்று அவருடைய பிரேரணையால்தான் செய்கின்றார்கள் என்று மேற்கூறிய ஆசங்கையை நீக்கி விளக்குகின்றார்.

ரௌரவம்

"வித்யேச்வரர் முதலானோர் சிவபெருமானுடைய இச்சையாகிற கட்டளையால் தூண்டப்பட்டவர்களாய் ஐந்தொழிலையும் செய்கின்றார்கள்" என்று கூறுவது காண்க. 116

---

* (ख) चिद्गतः

परमेश्वरस्य स्वापेऽवि(पि)क्रियादिशक्तयस्तत्तत्कार्य निष्पादनोद्युक्ता भवन्तीति सूत्रान्तरेणाह—

स्वापेऽप्यास्ते बोधयन् बोधयोग्यान्
रोध्यान् रुन्धन् पाचयन् कर्मिकर्म ।
मायाशक्ति(क्ती)र्व्यक्तियोग्याः प्रकुर्वन्
पश्यन् सर्वं यद्यथा वस्तुजातम् ॥ सू १८

---

இவ்வைந்தொழிலேயும் மாயா, பாசம், கன்மம் இவை செய்ய இயலாவோ வெனின், இவை ஜடமாக விருப்பதால், செய்தல் இயலாது. உயிர்களோ வெனில், ஆணவமலத்தால் தடுக்கப்பட்ட ஞான கிரியாசக்திகளே உடையவாயிருப்பதால், அவைகளாலும் செய்தல் இயலாது. ஸகாரகம் என்பதால் சிவபெருமானுக்குச் சாதனுபேக்ஷையும் கூறப்பட்டது. இல்லாவிட்டால் காரணமின்றி மோக்ஷம் ஏற்படும் என்று ஆகும்; மேலும், வேறென்றையும் அபேக்ஷிக்காமல் நிகழ்வதானல் எல்லோருக்கும் மோக்ஷம் எய்தற்கு அமையும்; அன்றி எவர்க்கும் எய்தாமல் போதலும் கூடும்.

பிரமாணம்—

வேறென்றைக் கருதாமல் மோக்ஷம் ஏற்படுமே யானல் அஃது எப்பொழுதும் ஏற்படலாம்; எப் பொழுதும் ஏற்படாமலும் போகலாம். தொழில்களுக் குச் சில சமயங்களே சம்பவம் என்பது பதார்த்தங் களின் அபேக்ஷையால்தான் உண்டாகிறது என்று பெரியோர்கள் சொல்கிருர்கள். 117

மாயையில் ஆன்மா ஒடுங்கிக் கிடக்குமிடத்தும், சிவபெருமானின் ஞானகிரியா சக்திகள் அவ்வக் காரியத்தைத் தோற்றுவிப்பதில் ஈடுபட்டவைகளாக

स्वापे-जाग्रदवस्थायामिव स्वापस्थायामपि, बोधयोग्यान् मलपरिपाकतारतम्याद्यपेक्षया प्रबोधनार्हान्, बोधयन्-तेषां बोधनं कुर्वन्, रोध्यान्-रोधनार्हान्, रोधशक्त्या निरुन्धन्, कर्मिणां-कर्मवतां, कर्म-शरीरेन्द्रियजात्यायुभोग-कारणमिति सूक्ष्मरूपं कर्म, पाचयन्-फलदानोन्मुखमापादयन् ।
तथावक्ष्यति

"तथा बीजं शरिरादेःपाचयत्यानिवेशतात्" । इति

---

இருக்கின்றன என்பதை மேலும் மிருகேந்திர சூத்திரத் தால் விளக்குகின்ருர்.

* ஸ்வாபேப்யாஸ்தே போதயந் போதயோக்யாந்
ரோத்யாந் ருந்தந் பாசயந் கர்மிகர்ம ।
மாயா சக்தீர்வ்யக்தீ யோக்யா: ப்குர்வந்
பச்யந் ஸர்வம் யத்யதா வஸ்து ஜாதம் ॥ சூ-18

ஜாகராவஸ்தையில் போல ஆன்மா மாயையில் ஒடுங்கிக் கிடக்கின்ற அவஸ்தையிலும், மல பரிபாக தாரதம்மியத்திற்கு இயைந்தவாறு உணர்த்த வேண்டியவர்களுக்கு ஞானத்தை அருளிக் கொண்டும், தடுக்க வேண்டிய உயிர்களை தம் திரோபாவ சக்தியால் தடுத்துக் கொண்டும் உயிர்களின் சரீர இந்திரிய ஜாதி ஆயுள் போகங்களுக்குக் காரணமான கன்மங்களை தமக்குரிய பயனைக் கொடுக்குமாறு செய்து கொண்டும்

---

*ஒடுங்கிய பொழுதும் பாச மொழிப்பவர்க் கொழித்திட் டன்றி
விடுந்தகை யினரை விட்டு வினையினர் வினைபா கஞ்செய்
தடங்கிய மாயா சத்தி தோன்றுதற் கமைத்தி யாவும்
படும்படும் முறையி ருப்பப் பார்த்துளன் பரம னன்றே.
(சதமணிமாலை)

* [உணர்வன வுணர வொழிந்த மற்றுயிர்
மறைவின வாக வல்வினை பழுக்கப்
பகுதி நிலைமை பாற்படப் பொருளி
னியல்பறிந் திறைவ னிரவினும் செய்யும்.]
(வெள்ளியம்பலவாண சுவாமிகள்)

उक्तमत्रैव—

"न योग्यताङ्गमभजन्(त्) सद्यस्स्यादौषधादिवत्" । इति । पाकयोग्यमपि तत् स्वयमात्मनात्मानं न पाचयितुमीशम् । सर्वस्य हि परिणामिनो वस्तुनः क्षीरादेर(रि[वा]यं) साधाणो धर्मः यत्किमप्यपेक्ष्य परिणामित्वा(त्व)न्नान्यथेति । तस्मात् परिणामित्वात् कर्मणोऽप्यन्यापेक्षो *विपाक इति । 118

---

சிவபெருமான் விளங்குகிறார்.

அவ்விதமே, மிருகேந்திரம் மேலும் சொல்லுகின்றது: "சரீராதிகளுக்குக் காரணமாயுள்ள கன்மங்களை அணுக்களின் ஸ்வாபகாலத்தில் சிவபெருமான் தம் சக்திகளைக் கொண்டு சரீரம் உண்டாகிற வரையில் தமக்குரிய பயனைக் கொடுக்குமாறு பக்குவப்படுத்துகின்றார்" என்று விளக்குகின்றது.

இன்னும் இங்கேயே—

"பக்குவப்படுத்தாத மருந்து பயன் தாராதவாறு போல, பக்குவமுறாத கன்மமும் உடனே பயன் தாராது" என்று கூறப்பட்டுள்ளது காண்க.

பாகயோக்கியமான கன்மம் அசேதனமாக இருப்பதால் தன்னைத்தானே பக்குவப்படுத்திக் கொள்ள சக்தியுடையது ஆகாது. பரிணமம் அடைகின்ற பால் முதலியவைகளுக்குப் போல எல்லாப் பொருள்களுக்கும் இது பொதுவானது; அஃதாவது மாறுபாடு அடைகின்ற எந்தப் பொருளும், ஏதாவது ஒன்றை அவாவி நின்றே மாறுபாடு அடைய முடியும் என்பது. எனவே, கன்மமும் பரிணமத்தை அடைவதால் அதன் பாகமும் மற்றொன்றின் துணையை வேண்டிநிற்கும். 118

---

* (ख) पाकः

तथा —

पाकार्हमपि तद्वस्तु(त्पक्तुं) नेशमात्मानमात्मना ।

धर्म*स्सामान्य एवायं सर्वस्य परिणामिनः ।। इति

पाचयन्? मायाशक्तिः(तीः)-शुद्धाशुद्धमाययोः शक्ति(क्ती)ः तत्तत्कार्यजनकशक्तिः (क्ती)ः, व्यक्तियोग्याः- प्रसवाभिमुखीः प्रकुर्वन्-प्रकर्षेण कुर्वन् । अत्रापि परिणामिकर्मिकर्मवन्मायाशक्ती-नामपि स्वतएव प्रसवाभिमुख्योपादनं न घटत इति भावः । सर्वं-चिदचित्तत्वभावभूतभूवनात्मकं, वस्तुजातंवस्तुसमूहं, यत्-यथास्थितं तत् - तथा, पश्यन् - अवलोकयन् भूत्वा आस्ते ।

---

அவ்விதமே மிருகேந்திரம் "பாகயோக்கியமான கன்மமும் தன்னைத் தானே பக்குவப்படுத்திக்கொள்ளச் சக்தியுடையதாகமாட்டாது. பரிணமம் அடைகின்ற எல்லாப் பொருள்களுக்கும் இது பொதுவானது" என்று கூறுகிறது காண்க.

சுத்தாசுத்த மாயைகளின் ஆற்றலே அவ்வப் பலன்களைக் கொடுக்குமாறு செய்துகொண்டும், சிவபெருமான் விளங்குகிறார் என வருவித்துக்கொள்க. பரிணமத்தை அடைகின்ற உயிர்களின் கன்மத்தைப் போலவே சுத்தாசுத்தமாயையின் ஆற்றலும் தானே பயனைக் கொடுப்பதில் சக்தியுடையது ஆகாது என்பது கருத்து.

சிவபெருமான் சிதசித்தத்வபூத புவனங்களை உள்ளது உள்ளவாறே பார்த்துக் கொண்டிருக்கிறார். என்பதால், சிவபெருமானுக்குப் பசுக்களைப்போல் மாறுபட்ட பொருட்தன்மை இல்லை என்பது பெறப் பட்டது.

**बोधयन्** (போதயந்) ஞானத்தை அளித்துக் கொண்டு என்றதாலும், **रुन्धन्** (ருந்தந்) தடுத்துக்

---

* (ख) धर्म सामान्यः

शिवइति शेषः । यथावत् पश्यन् इत्यनेन शिवस्यास्मदादिवत् (द) यथावत् स्थितवस्तुभावो *निरस्तः । बोधयन्, रुन्धन्, पाचयन्, प्रकुर्वन्नित्यनेन शिवस्य सर्वकर्तृत्वं, पश्यन्नित्यनेन सर्वज्ञत्वंच दर्शितम् । सर्वविषयज्ञानं विना सर्वकर्तृत्वानुपपत्तेः ।

यो हि यत्त(द्य)त्क्रिया*सिद्धिं तदङ्गानि तत्फलानि च करो(जाना)ति तस्यैव विचित्रतत्तत्कारकोपयोगाभिसन्धानवतः तत्तत्कर्तृत्वं घटते, कुविन्दादेरिव पटादिकृतौ । अतः यस्तु तत्राज्ञः स तत्कार्यकरणाय नालम् । बालिश इव न्याय विद्याद्युपन्यासे इति ।

---

கொண்டு என்றதாலும், पाचयन् (பாசயந்) விணைபாகம் செய்துகொண்டு என்றதாலும், प्रकुर्वन् (ப்ரகுர்வந்) பயனைக் கொடுக்கும்படிச் செய்துகொண்டு என்றதாலும், சிவபெருமானுக்கு முற்றுத்தொழில் கூறப் பட்டது. पश्यन् (பச்யந்) பார்த்துக்கொண்டு என்றதால், முற்றறிவும் கூறப்பட்டது. முற்றறிவுத்தன்மை இல்லாமல் முற்றும் இயற்றுதல் ஏற்படாது.

செயல் முற்றுப் பெறுவதற்குரிய முதற் காரணத்தையும் அதற்கு வேண்டிய அங்கங்களையும் அவைகளின் பயன்களையும் எவர் அறிகிருரோ, அப்படிப்பட்ட பலவிதமான சாதனங்களின் உபயோகங்களில் ஈடுபாடு கொண்ட அவருக்குத்தான் அதை இயற்றும் கர்த்தாவாந்தன்மை ஏற்படுகிறது. ஆடை நெய்வதில் சேணியனுக்குப்போல என்பது. ஆகையால் எவர் அவ் விஷயங்களை அறியாதவரோ, அவர் அச்செயலைச் செய்வதிலும் ஆற்றல் அற்றவர் ஆவார். அஃது எவ் வாறெனில், மூடன் தர்க்க சாஸ்திரம் முதலியவற்றை எடுத்துச் சொல்வதில் ஆற்றல் அற்றவனுதல் போல என்று அறிக.

---

* (ख) वस्तुभासः   * क्रियासिद्धिहेतुमुपादानमित्यर्थः

तदुक्तमत्रैव—

सर्वज्ञः सर्वकर्तृत्वात्साधनाङ्गफलैस्सह ।
यो यज्जानाति कुरुते तत्तदेवेति सुस्थितम् ॥ इति 119

"आस्त" इत्यनेन महाप्रलये शिवश्च(स्य)सद्भावश्च बोधयोग्यानित्यादिना च पुरूषसद्भावश्च मायाशक्तीत्यनेन बिन्दुमायात्मनोः सद्भावश्च प्रदर्शितः । प्रलयकालेऽपि शिवस्य पञ्चकृत्यानि दर्शितानि ।

---

மிருகேந்திரம்

"ஈச்வரன் முற்றுத் தொழில் உடையவராக இருப்பதாலேயே முற்றறிவுடையவராகவும் ஆகின்கிறார் ; எவர், எக்காரியத்தைச் சாதனம், அங்கம், பயன் இவைகளோடு அறிகின்றாரோ, அவர் அக்காரியத்தைச் செய்கிறார்; இது மாறுபடாது" என்று முற்றுத்தொழிலை உடைய பரமேச்வரனுக்கு முற்றறிவையும் நிலைநாட்டிக் கூறுவதைக் காண்க. 119

आस्ते (ஆஸ்தே) "இருக்கின்றார்" என்று சொன்னமையால் மஹாபிரளய காலத்திலும் சிவபெருமானின் உண்மையும், बोधयोग्यान् (போதயோக்யாந்) அறிவிக்கத் தக்கவர்களை என்றதனால் ஆன்மாவின் உண்மையும், माया शक्ति (மாயாசக்தி) என்றதனால் சுத்தமாயை அசுத்த மாயையின் உண்மையும் கூறப்பட்டன. இதனால் மஹாபிரளய காலத்திலும் சிவபெருமானுக்கு ஐந்தொழில்கள் கூறப்பட்டுள்ளன என்று காண்க.

तद्यथा पौष्करे—

'प्रलयेऽप्यनुगृह्णाति सृजत्यवति हन्ति च ।
तिरोदधाति भगवान् न कालापेक्षया सदा ॥ इति । 120

एवमचेतन इत्यादित्र योदशश्लोकैः पतिलक्षणप्रमाणाधिष्ठान मूर्ति का (क)रणदेहाद्यनपेक्षकर्तृत्वौपाधिक सहकार्युपादानापेक्षण* सर्वज्ञत्वपञ्चकृत्यानि प्रतिपादितानि । एवंप्रकारेण प्र(प)ति-स्वरूपवेदनयैव संसारमुक्ता भवन्ति । न तु पाशरूपतया ईश्वरा†(र)वेदिनाम्(नः) ।

तदुक्त मृगेन्द्रे—

सत्तास्वरूप करणार्थविधेयदाभि
र्लेशोदिताभिरिति ये विदुरीशतत्त्वम् ।
ते मोचयन्ति भवो(वि)नोभवपङ्कमग्ना
नो (न्नो) विस्तरेण पुरुषाः पशुपाशरूपम् ॥ इति । 121

---

பௌஷ்கரம்

"காலத்தை விரும்பாமலேயே பரமேச்வரன் மஹாபிரளய காலத்திலும் சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் திரோபாவம் அனுக்கிரகம் ஆகிய பஞ்சகிருத்தியங் களைச் செய்கிறார்" என்று கூறுவதை அறிக. 120

இதுகாறும் अचेतनस्य मायादेः (அசேதநஸ்ய மாயா தே:) என்ற செய்யுள் முதல் பதின்மூன்று செய்யுட் களால் பதியின் உண்மை பதிஇலக்கணம், அதிட் டானமும் சரீரமும் காரணமான சரீரமின்றிக்கர்த்தா வாந்தன்மை, துணைக்காரணம் முதற்காரணம் முதலிய வற்றின் இன்றியமையாமை, ஸர்வஜ்ஞத்வம், பஞ்ச கிருத்யங்கள் முதலியவை கூறப்பட்டன. இவ்வாறு பதிஸ்வரூபத்தை அறிவதனாலேயே உயிர்கள் பிறவி யினின்றும் விடுபட்டவர்களாகின்றனர். பாசத்தை ஈச்வரனாக நினைப்பவர் பிறவியினின்று விடுபடார்.

---

* (ख) उपादानापेक्ष † (ख)ईश्वरवेदिनां

अत्र "अचेतनस्य मायादे"रित्यनेन ईश्वरस्य सत्ता साधिता । "अथ पत्युरधिष्ठान"मित्यनेन तत्स्वरूपं वर्णितम् । "करणं चेत्यनेन" करणं कथितम् । "स्वापेक्ष्यास्त" इत्यनेन तस्यार्थः प्रयोजनं भुक्तिमुक्तिरूपं वर्णितम् । "जगज्जन्म स्थितिध्वंसे"त्यनेन पञ्चकृत्यरूपविधेयमुक्तम् । "पश्यन् सर्वं

---

மிருகேந்திரம் —

"சுருக்கமாகச் சொல்லப்பட்ட சிவபெருமானின் உண்மைத்தன்மை, லக்ஷணம், சக்தியாகிய கரணம் போக மோக்ஷமாகிய பயன், படைப்பு முதலிய ஐந் தொழில், முற்றறிவு இவைகளால் சிவபெருமானின் தத்துவத்தை யாவர் அறிகிறார்களோ, அவர்கள் ஸம் ஸாரமாகிய சேற்றில் அழுந்திய உயிர்களை விடுவிக் கின்றார்கள். பசுவையோ பாசத்தையோ ஈச்வரனாக நினைக்கின்றவர்கள் விடுபடமாட்டார்கள்; பிறரையும் விடுவிக்கமாட்டார்கள்" என்று விரிவாகக் கூறுவதைக் காண்க. 121

இங்கு अचेतनस्य मायादेः (அசேதநஸ்ய மாயாதே:) என்ற சூத்திரத்தால் சிவபெருமானின் உண்மைத் தன்மை உறுதி செய்யப்பட்டது; "अथ पत्युरधिष्ठानं" (அதபத்யுரதிஷ்டாநம்) என்ற சூத்திரத்தால் எம்பெருமானுடைய ஸ்வரூபம் கூறப் பட்டது; "करणञ्च न शक्त्यन्यत्" (கரணஞ்ச நசக்த் யந்யத்) என்ற சூத்திரத்தால் பெருமானுக்குச் சாதனம் விளக்கப்பட்டது; "स्वापेक्ष्यास्ते" (ஸ்வாபேப்யாஸ்தே) என்ற சூத்திரத்தால் பயனாகவுள்ள போகமோக்ஷங்கள் கூறப்பட்டன; "जगज्जन्म स्थितिध्वंस"(ஜகஜ்ஜந்மஸ்திதி த்வம்ஸ) என்ற சூத்திரத்தால் பஞ்ச கிருத்தியங்கள் சொல்லப்பட்டன; "पश्यन् सर्वं यथथा वस्तु जातं"

यद्यथा वस्तुजात''मित्यनेन दृक्पदवाच्य *तज्ज्ञानस्वरूपमुक्तं वेदितव्यम् । ब्रह्मणो जीवैक्यं सार्वात्म्यं च वदन्तो वेदान्तिनः पशुपाशरूपेश्वरवादिनः । कालकर्मेश्वरवादिनः पाशरूपतामीश्वरस्य ब्रुवते । 122

इत्थं पतिलक्षणमुक्त्वा†तद्विलक्षणतया पशुस्वरूपं पराख्यसूत्रेण प्रतिपादयति—

देहान्योऽनश्वरो व्यापि (पी) विभिन्नः समलो‡ऽजडः ।
स्वकर्मफलभुक् कर्ता किञ्चिज्ज्ञः सेश्वरः पशुः ॥ सू १९

---

(பச்யந் ஸர்வம் யத்யதா வஸ்து ஜாதம்) என்றதனால் ஞானஸ்வரூபம் கூறப்பட்டது என்று அறிக. 'ஜீவபிரும்மங்கள் ஐக்கியமுடையன; எல்லாம் ஆத்மஸ்வரூபம் என்று எமபெருமானைப் பசுரூபமாகச் சொல்லுகின்றவர்களும், காலம் கன்மம் முதலிய பாசங்களை ஈச்வரனாகச் சொல்லுகின்றவர்களும் உளர் என்று அறிக.' 122

இவ்வாறு, பதி இலக்கணத்தை விளங்கக் கூறி, அதைக் காட்டிலும் விலக்ஷணமாக இருப்பதால் பசுவின் இலக்கணத்தை பராக்கிய சூத்திரத்தால் விளக்குகின்றார்.

தேஹாந்யோ z நச்வரோ வ்யாபீ
விபிந்நஸ் ஸமலோ z ஜட: I
ஸ்வகர்ம பலபுக் கர்த்தா
கிஞ்சிஜ்ஜ்ஞஸ் ஸேச்வர: பசு: II

---

* (ख) तत्त्व † (ख) अन्ते चिद्विलक्षणतया ‡(ख) अजड

* அன்னியனிவ் வுடம்புதனக் கழிவிலன் சிற்றறிவாளன்
பின்னமல மொடு புணர்வோன் பெரியவியா பகனசடன்
துன்னுறுதன் வினைநுகர்வோன் சொல்லியவவ் வினை முதல்வன்
றன்னைநிகர் வுறுமிறைவன் றனையுடையன் பசுவென்பான்.
[சதமணிமாலை]

आत्मा देहान्यः – शरीरव्यतिरिक्तः । अनेन चार्वाकस्य निरासः । इत्थं हि चात्मा [नं] चार्वाका वदन्ति-कृशोऽहं स्थूलोऽहमिति शरीर एवाहंप्रत्ययस्य दृष्टेर्न तद्व्यतिरिक्त आत्मा उपलक्ष्यते ! अथ परार्था(र्था) श्चक्षुरादयः संघातत्वाच्च(त्) *यानाद्यङ्गवदित्यादिना करणानां कर्तृप्रयोज्यत्वादि§[ति]वा अनुमानेनात्मा प्रसाध्यते । नैतद्युक्तम् तस्यात्मापलापिनश्चार्वाकान् प्रत्यसिद्धेः । न ह्येषां प्रत्यक्षादन्यत् किञ्चित् प्रमाणम् । सिद्धावपि अनुमेयस्यात्मनो देवदत्तादिवत् परत्वं ‡प्रसज्यते । यत्किल स्वयं प्रकाशते, स एवात्मा । तत्प्रकाश्यस्तु पर इति विविक्ततयात्मपरभावस्य प्रकाशमानस्यैव सङ्करोऽनवस्था च स्यात् ।

---

ஆன்மா உடலின் வேறு; இதனுல், சாருவாகமதம் மறுக்கப்பட்டது. 'நான் இளைத்தேன்; நான் பருத்தேன்' என உடம்பிலேயே நான் என்ற உணர்வு காணப் படுகின்றமையால், ஆன்மா உடலே அன்றி அதற்கு வேருய் இல்லை என்பது சாருவாகர்களின் கூற்று. கண் முதலிய இந்திரியங்கள் பிறருக்குப் பயன் படுகின்றன, கூட்டமாக இருப்பதால், ரதம் முதலிய அங்கங்கள்போல என்ற அனுமானத்திஞலாவது, ஸாதனங்கள் வினைமுதலால் ஏவப்படுகின்றன என்ற அனுமானத்திஞலாவது, ஆன்மா உண்டு எனச் சாதிக்கலாமெனின், இஃது ஏற்புடையதன்று; என்னையெனில், சரீரத்தினும் ஆன்மா வேறு இல்லை எனக் கூறும் சாருவாகர்களுக்கு அனுமானப்பிரமாணம் உடன்பாடன்று. அவர்கள் காண்டல் அளவையே யல்லாமல் மற்ற அளவைகளை ஒப்புக்கொள்வதில்லை. அனுமானப் பிரமாணத்தை ஏற்றுக்கொண்டாலும் அனுமானத்தால் சாதிக்கப்பட்ட ஆன்மாவிற்குத்

---

*(ख) शयनाद्यङ्गवत् §(ख) प्रयोज्यत्वादित्यनेन वा ‡(ख) प्रसज्येत

तदुक्तम्—

"आत्मा यदि भवेन्मेयस्तस्य माता भवेत्परः ।
पर आत्मा तदानीं स्यात् स परो यस्तु मीयते ॥
प्रकाशते संविदेका तदन्यत्तु प्रकाश्यते ।
प्रकाश्यं च भवेत् कर्म तच्च कर्तृ विना कथम् ॥ इति ।

तस्मान्नानुमानेन देहव्यतिरिक्त आत्मा उपलक्ष्यते 123

---

தேவதத்தனைப்போல வேறுபட்ட தன்மை ஏற்படுகிறது. எது இயல்பாகப் பிரகாசிக்கிறதோ, அதுவே ஆன்மா; அதனுல் விளக்கப்படுவது மற்ருென்று என்று, ஆன்மா என்பது வேறு, அதனுல் விளக்கப்படுவது வேறு என்றிருக்க, இங்கு விளக்க வைப்பதும் விளங்குவதும் ஒன்ருகவே ஆவது ஸங்கரம்* என்ற குற்றமும் வரம்பின்மை என்ற குற்றமும் ஆகும் என்க.

"ஆன்மா அனுமானத்தால் அறியத்தக்கது எனில், அனுமானம் செய்பவன் வேருருவனுக இருக்க வேண்டும். ஏனெனில், அப்பொழுது ஆன்மா அறியப்படுவதினும் வேறு, அறியப்படுகிறது ஆன்மாவினும் வேறு என ஆகும். மேலும், ஓர் அறிவுதோன்றுகிறது;அதனினும் வேருென்று தோற்றுவிக்கபடுகிறது. எது தோற்றுவிக்கப்படுகிறதோ அது செயப்படுபொருளாகும். அச்செயப்படுபொருளும் வினைமுதலன்றி எவ்வாறு ஏற்படக்கூடும்" என்று கூறப்பட்டுள்ளது காண்க.

எனவே, அனுமானத்தால் சரீரத்தினும் வேருக ஆன்மா அறியப்படமுடியாது. 123

உடலுக்கு அறிவின்மையால் ஆன்மாவாந் தன்மை எவ்வாறு உண்டாகும் எனின், கல் முதலிய

---

* ஒன்றில் மாறுபட்டவை சேருவது ஸங்கரம்.

न च देहस्य चैतन्य(या)भावेन कथमात्मत्वमिति वाच्यम् । किण्वादिद्रव्यविकारे मदशक्त्युत्पत्तिवत् चतुर्भूतविकारे देहेऽपि संविदुद्भवात् । अपि च यस्मिन्नुपचिते यस्योपचयः, यदपचये वा अपचयः, तत् तदात्मकम् यथा वह्न्युपचयापचयावनुगच्छ दौष्ण्यम् । तथा यौवन स्थाविर भोजन तदभावहेतुकौ च देह संबन्धिनावुपचयापचयावनुकुर्वत् विज्ञानं देहात्मकमेव । अतो देह एव चेतन आत्मेति । तदयुक्तम् । नथाहि देहश्चेतनः कदाचिन्न भवति । भोग्यत्वात् विकारित्वाच्च । ये ये केचन विकारिणः परिणामिनो भोग्याश्च, ते ते ह्यचेतना दृष्टाः । यथा पटादयः । स देहा(हो) प्येवंविधस्तस्मान्न चेत तन्न (चेतनः) । 124

---

வைகள் கலந்த ஒரு பொருளில் மத சக்தி உண்டாவது போல, நான்கு பூதங்களின் கூட்டுறவால் ஏற்பட்ட உடலிலும் அறிவு உண்டாகக் கூடும்; மேலும், எது பெருத்தால், எது பெருக்கிறதோ, எது இளைத்தால் எது இளைக்கிறதோ அதை உருவமாகக் கொண்டது. எவ்வாறெனில், நெருப்பின் மிகுதிப் பாட்டால் வெப்பத்தின் மிகுதியும், குறைவால் வெப்பத்தின் குறைவும் காணப்படுவது போல, தேக ஸம்பந்தமான உபசயாபசயமும் யௌவனம் முதுமைப் பருவத்தாலும் அல்லது உணவு உண்மை இன்மைகள் இவற்றாலும் ஏற்படுவதும் பிரசித்தம். அந்த உடம்பின் பெருத்தல் இளைத்தலைப்பற்றி அறிவும் பெருகுகிறது அறிவும் இளைக்கிறது. ஆகையால் உடலே அறிவுடைய ஆன்மா எனச் சாருவாகர்கள் கூறுவார்கள். அது பொருத்தமன்று. என்னையெனில், உடலானது

ननु अङ्गनादिभिर्भोग्यत्वमनैकान्तिकम् । भोग्यत्वेऽपि तत्राचैतन्याभावात् । नानैकान्तिकम् । तदीयस्य देहस्यैव भोग्यत्वात् । यद्येवं निज(र्जी)वस्य देहस्य कथं नोपभोगः ? भवत्येव तदवस्थोचित उपभोगः क्रव्यादादेः, न पुनः कान्तादेः । कामिन्याद्यवस्थाया अन्या? अवस्थान्तरापत्त(रप्राप्ते)ः विकारित्वेन बीभत्स*हेतुत्वात् ।

---

போக்கியப் பொருளாக இருப்பதாலும், விகாரத்தை அடைவதாலும் ஒருபொழுதும் அறிவுடைப் பொருள் ஆகமாட்டாது. எவை எவை விகாரத்தை அடைகின்றனவோ, போக்கியப் பொருளாக உள்ளனவோ அவையெல்லாம் அசேதனங்களேயாகும்; ஆடை முதலியவற்றைப் போல் தேகமும் மேற்கூறப்பட்ட தன்மை வாய்ந்தது ஆதலால், அஃது அறிவுடைப் பொருள் ஆகாது என்க. 124

போக்கியப் பொருள் எல்லாம் அசேதனமென்று கூறப்படுமேயானால், மடந்தையர்களிடத்தும் அநைகாந்திகம் என்ற குற்றம் வருகிறது. ஏன்னேயெனில், அவர்கள் போக்கியப் பொருளாக இருந்தும் அறிவுடைப் பொருளாக இருப்பதால் எனப் பூர்வ பக்கம் எழ, இங்கு அநைகாந்திகதோஷமன்று என்று மறுக்கப்படுகிறது. அஃதாவது மடந்தையர் களிடத்தும் அவாகளுடைய உடலே போக்கியப் பொரு ளாக இருப்பதால் மேற்கூறிய குற்றம் ஒருபொழுதும் ஏற்படாது. இனி, அசேதனமாகிய உடலே போக்கியப் பொருளாக உள்ளது எனக் கூறப்படுமேயானல், உயிரற்ற உடல் ஏன் போக்கியப் பொருளாக ஆவ தில்லே?' என மறுமுறையும சாருவாகர்களுடைய பூர்வபக்கம் தோன்ற, கீழ்க்கண்டவாறு மறுக்கப்படு கின்றது: அந்த உயிரற்ற உடலும் மாமிசம் உண்கின்ற

---

* (ख) बीभत्सरस

तदुक्तिरत्रैव—

"नैतत्तद्वक्त्र*मत्र क्वचि(त)दधरमधु क्वायताक्ष्या(क्ष्या): कटाक्षा:" । इत्यादि

एवं गजाश्वादावपि ज्ञेयम् । तस्मात् स्थितमेतद्विकारित्वात् भोग्यत्वाच्च देहस्याचैतन्यम्, †अचैतन्याच्च परार्थ‡(र्थं)मिति । न चात्मनो देहान्यत्वे 'कृशोऽहमि'त्यादि §प्रत्ययबाधः । 'तस्य देह' इति भेदग्राहिप्रत्ययेन बाधात् । न चात्मनोऽनुमेयत्वे परत्वं स्यादिति वाच्यम् । तस्य स्वसंवेदनसिद्धस्यात्मनः विप्रतिपन्नं प्रति प्रतिपादनार्थमेवानुमानप्रयोगात् । न चानुमान

---

வர்களுக்குப் போக்கியப்பொருளாகத் தானிருக்கின்றது; கணவன் முதலியவர்களுக்குப் போக்கியப்பொருளாகவில்லை. காமினீ முதலிய அவஸ்தைக்கு வேறு அவஸ்தை (மூப்பு) வருமேயானால் மாறுபாட்டை அடைவதால் அதுவே இளிவரற்கு முதலாம்.

மேற்கோள்:—அழகு பொருந்திய அந்த முகம் இது அன்று. அந்த அதரமது எங்கே? பார்வை எங்கே? என்ற இவை முதலானவையாகும். இவ்வாறே யானை குதிரை முதலியவற்றிற்கும் போக்கியத்வமும் விகாரத் தன்மையும்உண்டு என்பதுஅறியத்தக்கது. ஆகையால், தேகமானது விகாரத்தை அடைவதாலும், போக்கியப் பொருளாக இருத்தலாலும் அறிவுடைப்பொருளன்று என்று நிலைநிறுத்தப்பட்டது; அறிவுடைப்பொருள் அல்லாமையாலும் அது மற்றொன்றின் பொருட்டே என்பதும் நிச்சயிக்கப்பட்டது. ஆன்மா உடலின் வேறு எனின், 'நான் இளைத்தேன்' என்பது முதலிய அறிவிற்குப் பாதகம் இல்லை என்பதில்லை. என்னை யெனில், அவனுடைய உடல் என்ற பேதமுள்ள அறிவால், அது பாதிதமாக ஆனபடியால் என்க.

---

* (ख) क्वतत्तद्वक्त्रमत्र † (ख) अचेतनत्वाच्च

‡ (ख) परार्थ्यमिति § (ख) बाध:

प्रामाण्य निरासस्तेन **शक्यते कर्तुम् । अनुमानस्य*प्रामाण्य निरासक युक्तेरेवानुमानतया तदा- स्वव्याघातापत्तेः। न च चैतन्यस्य देहानुविधाय§कत्वं, शवशरीरे व्यभिचारात्। तस्मादनुभवस्मरणयोरेकाधिकरणम् (त्वात्) चेतनो देहान्य एवात्मेति । 125

अत्र च देहान्यत्ववचनेन संबान्धिनामिन्द्रियादीनामात्म व(त्वं) निरस्तम्। तथाहि बहिर्गृहीतार्थधारकमनःप्रेरित वागिन्द्रियजन्यशब्दप्रपञ्चस्य व्यवहर्तृपुरुषाशयप्रकटकतया दर्पण स्थानीयत्वेन अचेतनानामिन्द्रियाणां करणत्वमेव समुचितम् ।

---

ஆன்மாவானது அனுமானத்தால் அறியத்தக்கதாயின், பரத்வம் என்பது ஏற்படுமெனின், ஏற்படாது; மாறு பட்ட கருத்துடையோனுக்கு விளக்குவதற்காக இயல் பாக அறிவுடைய ஆன்மா அனுமானமுகத்தால் கூறப் பட்டது. அனுமானம் எங்களுக்கு(சாருவாகர்களுக்குப்) பிரமாணம் ஆகாது என்று அவர்களால் சொல்லவும் முடியாது எங்ஙனமெனின், 'அனுமானம் பிரமாணம் ஆகாது' என்ற யுக்தியே அனுமானமாக இருப்பதால் தனக்கே கெடுதலாக முடியும். மேலும், அறிவு உடலைப் பொருந்தியதன்று; சவ சரீரத்தில் அறிவு காணப் படாமையால் என்பது. எனவே, அனுபவமும் ஸ்மரணமும் ஒரே இடத்திலிருக்கவேண்டிய தன்மை யால், உடலின் வேருனது அறிவோடுகூடிய ஆன்மா என்பது பெறப்படுகிறது. 125

இங்கு உடலின் வேருனது என்றமையால், 'உடல் சம்பந்தமுடைய இந்திரியங்கள் ஆன்மா அல்ல' என்று மறுக்கப்பட்டது. புறத்தே உணரப்பட்ட பொருளை ஏற்கின்ற மனத்தினுலே தூண்டப்பட்டு வாக்கிலிருந்து உண்டான சப்த பிரபஞ்சமானது பேசுவோருடைய கருத்தை வெளிப்படுத்துவதால், கண்ணுடி நிலையி

---

**(ख) शक्यः *(ख) तदनुमानप्रामाण्य §(ख) देहानुविधायित्वं

[तथा]

वागिन्द्रियेण स्पष्टेन मनसान्तरितेन तु ।
यः प्रपञ्चोऽनुमानाख्यः सामान्यो व्यवहर्तृषु ॥
तेनानुमीयते ह्यात्मा दृङ्कुदर्पणनिदर्शनात् । इति ।

अपिच—यो यः संहतः स भोक्त्रर्थः, यथा शयनादि । संहतश्चायं चक्षुरादीन्द्रियवर्गः अतस्तस्यापि भोक्ता(त्रा) भवितव्यमिति इन्द्रियव्यतिरिक्त भोक्तृसिद्धिः । 126

अनश्वरः—नित्यः । तस्य हि सौगतादिवत् क्षणिकत्वे विनाशित्वे वाभ्युपगम्यमाने कर्मानुष्ठान फलभोगादिकं पूर्वानुभूतस्मरणादिकं च नोपपद्यते ।

---

யிருக்கின்ற அசேதனமான இந்திரியங்களுக்குக் கருவியாந்தன்மையே சாலப் பொருந்தும்.

மதங்கம்

"கண்ணால் கண்ணாடியில் அழகு அறியப்படுவது போல மனத்தால் தூண்டப்பட்ட வாக்கினால் உச்சரிக்கப்பட்டுப் பேசுவோருடைய கருத்தைத் தெரிவிக்கின்ற சொற்பிரபஞ்சத்தால் ஆன்மா அறியப்படுகிறான்" என்று கூறுகின்றது.

எது எது கூட்டமோ அஃது அனுபவிப்பவனுக்காகவே, சயனம் முதலியனபோல; கண் முதலிய இந்திரியங்களும் கூட்டமாகவுள்ளன. ஆதலால் அவற்றுக்கும் நுகர்வோன் நிச்சயமாக இருத்தல் வேண்டும் என்பதனால், இந்திரியங்களுக்கு வேறான நுகர்வோனாகிய ஆன்மா உண்டு என்பது பெறப்பட்டது. 126

अनश्वरः (அநச்வர:) அழிவற்றவன் ஆன்மாவிற்கு ஸௌகதர் முதலானோர்போல *க்ஷணிகத்வமோ அழியுந் தன்மையோ ஒப்புக்கொள்ளப்படுமேயாயின் முன் வினைப்பயனாகிய இன்பதுன்பங்களும் முன் அனுபவித்த நினைவுகளும் உண்டாகமாட்டா.

---

* க்ஷணிகத்வம்—ஒரு நொடி நேரமிருக்குந்தன்மை.

तथात्रैव—

"क्षणभङ्गे स्थिते ज्ञाने न च कर्मार्जनं भवेत् ।
न तत् कर्मफलं भोग्यं ज्ञाननाशे निरन्वये ॥
स्थिरत्वं तद्गतेर्गम्यं स्मृतिर्नानुभवा[द्]ते ।
स्मर्तानुभविता स्थैर्यात् तेन ज्ञाता स्थिरो भुवि ॥ इति । 127

व्यापी—व्यापकः । क्षपणकवत् तस्याव्यापकत्वे काश्मीर[क]स्यैव दक्षिणापथे परिदृश्यमानभोग इव देहा(शा)न्तरफलभोगो नोपपद्यते, तस्यामूर्त*स्याकाशस्येवाचेतनेन कर्मणा† देशान्तरनयनासम्भवात् । शरीरपरिमितत्वे संकोच विकासधर्मित्वे वा परिणामित्वाचेतनत्वादि दोषप्रसङ्गाच्च ।

---

அங்கேயே —

"அறிவுடைப் பொருளாகிய ஆன்மா ஒரு க்ஷணத்தில் அழியக்கூடியதாக இருக்குமேயாயின், நல்வினை ஈட்டல் தீவினைகளின் பயனாகிய இன்பதுன்பங்களின் அனுபவங்களும் ஏற்படாமல்போகும். ஆன்மாவின் அழிவில்லாத நிலைத்ததன்மையானது ஆன்மாவின் கமனபிரகாரத்தால் அனுமானம் செய்யப்படுகிறது. என்னையெனில், ஆன்மா முதலில் அனுபவித்து அனுபவித்ததைப்பிறகு நினைக்கிறது. அனுபவமில்லாமல் நினைக்கமுடியாது. ஆதலால் நினைக்கும் ஆன்மா முன்பு அனுபவித்தவனாக இருக்கவேண்டுமென்பதால், முன்பு அனுபவித்தவனும் இப்பொழுது நினைப்பவனும் ஒருவனாக இருக்கவேண்டு மென்பது பற்றி ஆன்மா நிலையானவன்" என்று கூறப்பட்டுள்ளது. 127

வ்யாபீ (வ்யாபி) வியாபித்தவன்; க்ஷபணகன் போல ஆன்மாவிற்கு அவ்யாபகத்தன்மையைக் கூறின், காச்மீர தேசத்தில் பிறந்தவனுக்குத் தென்னாட்டில் காணப் படும் போக நுகர்ச்சிபோலத் தேசாந்தரத்தில் போகப் பயனை நுகர்தல் இல்லாமல் போம். ஆகாசம்போல்

---

* (ख) अमूर्त † (ख) वा

तथा तत्रैव—

देशान्तरफला यत् स्यात् अविमुक्तोऽपि या* गतिः
(देशान्तरफलाय स्याद्विभुत्वे तु नो गतिः)
मूर्तत्वे न फलं भोग्यं यतो मूर्तिर्विनश्वरा ॥
अमूर्ति* र्नि(र्तो)नीयते व्या(ना)पि केनचे(चि)त कर्मणाथवा ।
अथैनं ‡मूर्तं यत् [अचेतनश्च यच्चान्यत्]तत(त्)कथं नयते(ने) पटु ।
तत् फलं भिन्नदेशस्थं विभुत्वात् तनुयोगजम्। इति । 128

---

வடிவமற்றவனுன உயிரை அசேதனமான கன்மம் தேசாந்தரத்திற்கு நடத்திச் செல்லுதல் முடியாது. ஆன்மா; சரீர பரிமிதமென்றே சுருங்குதல் பரவுதல் முதலிய தர்மங்கள் உடையவன் என்றே கூறின். பரிணுமித்வம் அசேதனத்வம் என்ற குற்றமும் ஏற்படும். ஆகையால் ஆன்மாவிற்கு வியாபகத்தன்மை இல்லை என்பது மறுக்கப்பட்டது.

அங்கேயே—

"ஆன்மா வியாபகமின்றி இருக்குமாயின் தேசாந்திரத்திலும் சுகதுக்கானுபவம் என்பது இராது. அது மூர்த்தமாக இருக்குமாயின் பயன் அனுபவிக்கத்தக்கதாக இராது என்னையெனில், மூர்த்தமான பொருள் அழியுந்தன்மை உடைமையால் என்க. அல்லது ஆன்மா அமூர்த்தமாயின் அவ்வான்மாவை அசேதனமான கன்மம் வேறு இடத்திற்கு நடத்திச்செல்லுதல் இயலாது. என்னையெனில் அசேதனமான கன்மம் அதை நடத்திச்செல்வதில் எவ்வாறு சக்தியுடையதாக முடியும்? ஆதலால், ஆன்மா வியாபகமாக இருந்தால்தான் எத்தேசத்திலும் பயன் அனுபவிக்கத்தக்கதாக இருக்கும். என்று விரிவாகக் கூறியுள்ளதுகாண்க. 128

---

*(ख) यो *(ख) अमूर्ता नियते व्यापे ‡ (ख) अतैन यत

विभिन्नः – अनेकः। नतु वेदान्तवादिनामिव एकः, तस्य परमार्थत एकत्वे बन्ध मोक्ष साधक विद्या[ऽविद्या]विभागेन द्वैतापत्तेः, एकमुक्तौ सर्वभवोच्छेदप्रसङ्गात्, भोगसाम्यादि दोषप्रसङ्गाच्च।

तथा तत्रैव

चिद्रूपत्वात् तदेकत्वं तद्भेदो भिन्नभोगतः।
न(स)च तस्य स्वकर्मोत्थः साविद्या बन्धलक्षणा॥
तच्चे(च्छे)दिका भवेद्विद्या द्वयमस्ति तदा तव
विद्याविद्याविभागे*न ग(कृ)तो द्वैतपरीग्रहः॥
स्थितायां सर्वतो मुक्तौ भवोच्छेदः प्रसज्यते।
नचास्ति सं(स)भवोच्छेदः तेन ते बहवो मताः॥

---

विभिन्न: (விபிந்ந:) அநேகம்; ஆன்மா வேதாந்திகள் கூறுவது போல ஒன்றன்று. உண்மையாக ஆன்மா ஒன்ருக இருக்குமேயாஞல், பிறப்பு மோக்ஷம் இவைகளுக்குக் காரணமான ஞானம் அஞ்ஞானம் என்ற பிரிவால் இரண்டு என்று முடியும். மேலும், ஆன்மா ஒன்ருயின், ஒருவருக்கு மோக்ஷம் கிட்டியவழி எல்லோருக்குமே மோக்ஷம் கிட்டியதாகும்; போகானுபவமும் எல்லோருக்கும் ஒப்ப நிகழும் தன்மைத்தாகும்; ஆதலின், இவைபோன்ற குற்றங்கள் ஏற்படுவதால், ஆன்மா பலவாதலன்றி, ஒன்ருதல் இல்லை என்க.

அங்கேயே —

"ஆன்மா அறிவு மயமாக இருக்குந்தன்மையால் ஒன்றெனக்கூறினும், பற்பலவிதமான போகத்தை உடையதாயிருப்பதால் பலவாந்தன்மைத்து ஆகிறது. அந்தப் பேதமும் உயிரின் கன்மத்திஞல் ஏற்பட்டது. மல கன்மம் மாயா என்ற அஞ்ஞானமானது பந்தத்

---

* (ख) विभागेनागतो

श्रीमत्पौष्करे—

यद्यभिन्नं तु सर्वेषां भोक्तुमिच्छैकदा भवेत् ।

भोक्तुमिच्छा यदैकस्य गन्तुमिच्छा परस्य च ॥

तथैव*मस्माच्चैतन्यं भिन्नरूपमिति स्मृतम् । 129

समलः - मलेन सहितः । मलशब्देन ज्ञानावारकं कर्मभिन्नं रागकारणमज्ञानमुच्यते ।

---

திற்குக் காரணமானது. ஞானம் அதைப் போக்குவதாக உள்ளது. ஞானம் அஞ்ஞானம் என்ற பிரிவால் இரண்டு என்ற தன்மை ஏற்பட்டது. ஒன்று என்று கூறினல், ஒருவருக்கு மோக்ஷம் எய்தும்பொழுது எல்லோருக்கும் அஃது எய்த நேரிடும். அவ்வாறு எய்துவதில்லே ஆதலால் உயிர் பலவாகும்'' என்று கூறப்பட்டுள்ளது காண்க.

பௌஷ்கரம்

"ஆன்மா ஒன்றெனில், எல்லா ஆன்மாக்களுக்கும் போகத்தில் இச்சை ஒரேகாலத்தில் உண்டாக வேண்டும்; அவ்வாறு உண்டாதல் இல்லே. எந்தக்காலத்தில்ஓர் ஆன்மாவிற்குச் சுகத்தை அனுபவிப்பதில் இச்சை ஏற்படுகிறதோ; அதேகாலத்தில் மற்றோர் ஆன்மாவிற்கு அதற்கு விரோதமான பிறப்பறுப்பதில் இச்சையும் உள்ளது. ஆதலால் ஆன்மா பலவகைப்பட்டவன்'' என்று கூறுகின்றது.

समलः (ஸமல:)— மலத்துடன் கூடியவன் 'மலம்' என்னும் சொல்லால் அறிவைத் தடைசெய்கின்றதும், தர்மாதர்ம ரூபமான கன்மத்தினும் வேறும் ராகத்திற்குக் காரணமாயுமுள்ளதுமான அஞ்ஞானம் சொல்லப்படுகிறது.

---

* तदैव तस्मात्

तथा तत्रैव —

"तेन तत्कर्मणोभिन्न[म] ज्ञानं रागकारणम् ।
प्रावृणोति *तदाज्ञान[म] §मूर्तं विषशक्तिवत् ॥
तेनाशुद्धः पशुरसावनुपाधि गुणाश्रयः । इति । 130

अजडः-जडो न भवतीत्यजडः, ज्ञानक्रियास्वभाव इत्यर्थः चैतन्द(न्या)भावे कर्तुः प्रवृत्त्ययोगात् ।

तथा पौष्करे—

प्रवर्तमानो देहादिश्चेतनाधिष्ठितः सदा ।
स्वतः प्रवृत्तिशून्यत्वाज्जडत्वेन पटादिवत् ॥
यस्तु प्रवर्तकस्सोऽयमात्मेति परिपठ्यते ।

---

அங்கேயே பிறிதோடரித்தில்.

" அந்த மலமானது, கன்மத்தினும் வேறுபட்டு, ராகத்திற்குக் காரணமான அஞ்ஞானமாகும். அந்த அஞ்ஞானமானது விஷசக்திபோல ஆன்மாவின் அறிவை மறைக்கிறது. அதனுல் மறைக்கப்பட்ட சிற்சக்தியை உடையவன் ஆன்மா." என்று கூறப் பட்டுள்ளது. 130

अजडः ( அஜட: ) அசேதனம் அல்லன். இயல்பிலே அறிவுத் தொழிலே உடையவன் என்பது பொருள். அறிவுடைப் பொருளாக இல்லாவிட்டால், கருத்தா விற்குத் தொழிற்படுந்தன்மை ஏற்படாது.

பௌஷ்கரம்

"இயங்குகின்ற சரீரம் இந்திரியம் முதலியவை எப்பொழுதும் அறிவுடைப்பொருளாலேயே அதிஷ்டிக் கப்பெற்று இயங்குகின்றன. சரீரம் ஆடையைப் போல அசேதனமாக இருப்பதால் தானே இயங்குந்தன்மை யற்றது. ஆதலால் எவன் இயககுகின்ருனே, அவனே

---

* (ख) तदज्ञानं

तथा तत्रैव —

सर्वकार्ये यतः कर्तुर्भावमालोच्य वस्तुगम् ।
प्रवृत्तिर्दृश्यते यस्मात् स भावः सत्क(त्व)वाचकः ॥

तेन तत्प्राकृचितेर्भावः कर्मवत् किन्न मन्यसे । इति । 131

स्वकर्मफलभुक् — स्वस्य कर्म स्वकर्म – धर्माधर्मात्मकं, तस्य फलं भुङ्क्ते इति स्वकर्मफलभुक् । युगपत्सेवाकृष्यादि प्रवृत्तयोर्द्वयोः पुरुषयोरेकस्य फलसिद्धेः इतरस्यादर्शनाच्च ।

तथा—

"सेवाप्रवृत्तयो[र्द्वयो]ः समानगुण शीलयोः ।
एकस्य फलसंपत्तिस्तेन तत्कारणं पदम् ॥
अदृष्टं सूक्ष्महेतुत्वाद्गम्यते कार्ययोगतः ।
कारणं कर्मसंज्ञं तद्धर्माधर्मात्मकं स्थितम् ॥"

---

ஆன்மா என்று சொல்லப்படுகிறுன்" எனக் கூறுவது காண்க.

அங்கேயே பிறிதோரிடத்தில்

"பொருளில் உள்ள உண்மைத் தன்மையை அறிந்து எதனுல் கருத்தாவிற்கு எல்லாக் காரியங் களிலும் ஈடுபாடு காணப்படுகின்றதோ, அக் காரணத் தால் அவனுக்கு அறிவு உண்டென்று அறியப்படு கிறது" என்று கூறப்பட்டுள்ளது அறிக. 131

स्वकर्मफलभुक् (ஸ்வகர்ம பல புக்) தன்னுடைய தர்மாதர்மரூபமான கன்மங்களின் பயனை அனுபவிக் கிறுன் என்பது பொருள். ஒரே காலத்தில் தொண்டு, உழவுத்தொழில் இவற்றில் ஈடுபட்ட இருவர்களுள், ஒருவருக்கு நல்ல பயனும் மற்றொருவருக்குப் பயனின் மையும் காணப்படுவதால் என்க.

पौष्करे—

उभयोः कृषिसाम्येऽपि कश्चिद्धान्यानि‡य(ऋ)च्छति
न किञ्चिदपरस्तस्य कर्म कारणकं द्विजाः ॥ इति। 132

कर्ता- पूर्वोक्तस्य कर्मणः संपादि (द) [यि] ता, अचेतनस्य शरीरादेः कर्तृत्वायोगात् कर्मणः करणसापेक्षत्वेऽपि कुठारादिवदप्रशस्यतया पुरुषस्यैव प्राधान्याच्च ।

---

அவ்வாறே மற்றுமோரிடத்தில்

தொண்டில் ஈடுபட்ட ஒப்பான குணம் ஒழுக்கம் இவற்றையுடைய இருவர்களுள் ஒருவருக்குப் பூர்ண மான பயன் வாய்க்கிறது; மற்றவருக்கு அஃது இல்லை. ஆதலால் பயனைக் கொண்டு நல்வினை தீவினை என்ற கன்மமே அவற்றுக்குக் காரணமென்று நிச்சயிக்கப் பட்டுள்ளது என்று கூறுவது காண்க.

பௌஷ்கரம்

"இருவர்கட்கு உழவு, தண்ணீர் முதலிய த்ருஷ்ட காரணங்கள் சமமாக இருந்தாலும், ஒருவர் அதிகத் தானியங்களை அடைகிறார்; மற்றொருவர் குறைந்த அளவு தானியத்தையும் அடைகிறதில்லை. ஆதலால் இந்த இருவிதமான பயன்களுக்கும் தருமாதரும ரூப மான கன்மமே காரணமாகும்" என்று கூறுகின்றது. 132

कर्ता (கருத்தா) முன் சொல்லப்பட்ட கன்மத்தை ஈட்டுபவன். அசேதனமான உடல், இந்திரியம் முதலிய வற்றிற்குக் கருத்தாவாந்தன்மை ஏற்படாமையாலும், தொழிலுக்குக் கருவி அபேக்ஷை இருந்த போதிலும், வினைக்குக் கருவியான கோடரிக்கு முக்கியத் தன்மை இல்லாது ஆன்மாவிற்கே முக்கியத்தன்மை இருத்தல் காண்பதாலும் ஆன்மாவே வினையை ஈட்டுகின்றான்.

---

‡ (ख) गच्छति

तथा तत्रैव—

तत्कर्ता पुरुषः प्रोक्तो न शरीरस्य कर्तृता ।
अचेतनं यतस्तस्मात् कर्तृत्वममृतं(ते) ततः ॥
कर्तृत्वं करणे सद्भिस्त(द्भित)थाप्यस्य प्रधानता ।
वृक्षच्छेदे यथा लोको न कुठारं प्रशंसति ॥

स कर्ता *करणैस्तेन प्राधान्यात् पुरुषः स्मृतः । इति । 133

किञ्चिज्ज्ञः- किञ्चिदल्पं जानातीति किञ्चिज्ज्ञः । एतत् किञ्चिज्ज्ञत्वं "विभुः सन्" इत्यादिना उत्तरत्र संङ्ग्रहकार एव वक्ष्यति । 134

सेश्वरः- के(ते)न ईश्वरेण प्रकारे(प्रेरके)ण सहितः ।
न साङ्ख्यानामिव स्वतन्त्र इत्यर्थः ।

---

அங்கேயே

"வினைக்குக் கருத்தா ஆன்மாவாகும் சரீரத்திற்குக் கர்த்தாவாந்தன்மை இல்லை. என்னையெனில், சரீரம் அசேதனமானது; ஆகவே, கருத்தாவாந்தன்மை சேதனமான ஆன்மாவினிடத்தேயே உள்ளது என்க. கருத்ருத்வம் கருவிகளில் இருந்தாலும் ஆன்மாவிற்கே முக்கியத்தன்மை எய்தும் எவ்வாறெனில், மரத்தை வெட்டுவது கோடரியாக இருந்தாலும், அதை உலகம் புகழாது; அதுபோல, உடல் இந்திரியம் முதலிய கருவிகள் வினை செய்தாலும், ஆன்மாதான் சிறந்த கருத்தாவாகச் சொல்லப்படுகிறுன்" என்று விரிவாகக் கூறுவது அறிக. 133

किञ्चिज्ज्ञः (கிஞ்சிஜ்ஞ:) சிற்றறிவு உடையவன் இந்நூலாசிரியர் பின்னர்க் கூறப்போகிறுர். 134

सेश्वरः (ஸேச்வர:) இயக்குகின்ற ஈச்வரனேடு. கூடியவன். ஸாங்கியர்களின் கொள்கை போல, ஆன்மா

---

* (ख) कारणैः

इदमपि "कर्मणा देहे"त्यादिना उत्तरत्र वक्ष्यति । 135

पशुः– पशुत्वमलयुक्तः, मुक्तस्य पशुत्वासंभवात् ।

तथा पौष्करे—

'पशुः पशुत्वसंयोगान्न मुक्तः पशुरुच्यते' ।

अयं च पशुः विज्ञानकल प्रलयाकल सकलभेदेन त्रिविधः । तेच क्रमेणैकद्वित्रिमला भवन्ति ।

"यस्मात् स्वदृक्क्रियाशालिकलाहीनोप्यनीश्वरः ।
व्यापकश्चिन्मयः सूक्ष्मः शिववत् संव्यवस्थितः" ॥ इति ।

किञ्चिज्ज्ञत्वं च उत्तर[त्र]सूत्रकारेण प्रदार्शितः (तम्) । 136

---

சுதந்திரன் அல்லன் என்பது பொருள். இதைப்பற்றியும் நூலாசிரியர் பின்னர்க் கூறப்போகிருர். 135

**पशुः (பசு) ஆணவ மலத்தோடு கூடியவன். முக்தான்மாவிற்கு ஆணவமலம் இல்லை.

பௌஷ்கரம்

"ஆணவ மலத்தோடு கூடியிருப்பதால் ஆன்மா பசு என்று சொல்லப்படுகிருன். பாசங்களால் விடுபட்ட முத்தான்மா பசுவென்று சொல்லப்படமாட்டான் என்று கூறுகின்றது.

மேலும், ஆன்மா விஞ்ஞாணகலர், பிரளயாகலர் ஸகலர் என மூவகையாகச் சொல்லப்படுகிருன் அவர்கள் முறையே ஒரு மலம் இருமலம் மும்மலம் உடையவர் ஆவர்.

"முக்தான்மா கலாதி ஸம்பந்தம் இல்லாமல் இருந்தாலும், ஞானகிரியைகளோடு கூடியவராயும் ஈச்வரனுக்கு *வேறுபட்ட வராயும் இருப்பர்; அறிவு

---

**பசுத்வம் ஆணவமலம்; இஃது இடுகுறிப்பெயர்.

*முக்தான்மாக்களுக்குப் படைப்பு முதலிய ஐந்தொழில்கள் இல்லாததால் ஈச்வரத்தன்மை இல்லை; ஆனுல் ஈச்வர ஸாம்யம் உண்டு என அறிக.

इत्थं पशुलक्षणमुक्त्वा तद्विलक्षणेषु पञ्चसु पाशेषु पृथग्भूतमाणवं मलं स्वायम्भुव सूत्रेण निरूपयति—

अथानादिमलः पुंसां पशुत्वं परिकीर्तितम् ।
तुषकम्बुकवत् ज्ञेयं मायावापाङ्कुरस्य तत् ॥ सू २०

अथ-पशुलक्षणानन्तरम् । मलादयो व्याक्रियन्त इति शेषः । अनादिश्चासौ मलश्चानादिमलः, मलिनीकरोति दृक्क्रियात्मकं तेजः प्रच्छादयतीति मलः । मलशब्द आच्छादकपर्यायः कृत्प्रत्ययान्तः । न विद्यते आदिः यस्य सः अनादिः। अत्र पाचकविशेषणीभूतशोभनपदवदाच्छादनज्ञम (काज्ञान) विशेषणम (णेना)नादिपदेन आच்छादनक्रियासम्बन्धस्याप्यनादित्व प्रतिपादनद्वारा तत्सम्बान्धिनो मलस्याप्यनादित्वमुक्तम् ।

---

மயமானவர்; சிவபெருமானைப்போலவே இருப்பர்" என்று சாத்திரம் கூறுகின்றது. 136

இவ்வாறு பசு இலக்கணம் கூறி அதற்கு மாறு பட்ட ஐந்து பாசங்களுள் தனிப்பட்டதான ஆணவ மலத்தை ஸ்வாயம்புவ சூத்திரத்தால் விளக்குகிறார்.

*அதாநாதி மல: பும்ஸாம் பசுத்வம் பரிகீர்த்திதம் 1
துஷகம்புகவத் ஜ்ஞேயம் மாயாவாபாங்குரஸ்ய தத் 11

பசு இலக்கணத்தைக் கூறிய பின்னர், ஆணவ மலம் முதலியவை விரித்துரைக்கப்படுகின்றன என்று சேர்த்துக் கொள்க. ஞானகிரியா ரூபமான ஒளியை மறைப்பதால் மலம் என்பது பெயர். அநாதியாக உள் ளது மலம்;மலம் என்பது மறைப்பு என்பதின் பரியாயச் சொல். எதற்குத் தொடக்கம், காணப்பட வில்லையோ,

---

*[புகலிலினி யனுதிமலம் புருடர்பசுத் துவமென்று
பகருறுவ ரறிவறிந்தோர் பாசமென வுரைத்ததுதான்
விகலமுறு மாயையெனும் விதைமுளைக்குத் தவிடுமிபோற்
றகவுணர்க வெனவிளம்புஞ் சைவமெனப் படுநூலே]
(சதமணிமாலை)

अयं मलः पुम्सां पुरुषाणां, पशुत्वमिति कीर्तितम् । तत्र मलस्वरूपेदृष्टान्तमाह तुषकम्बुकवदित्यादि । तत्र मलरूपं पक्व(ङ्कं), मायावापाङ्कुरस्य आवापश्चाङ्कुरश्च आवापाङ्कुरं द्वन्द्वैकवद्भावः । मायायाः आवापाङ्कुरं मायावापाङ्कुरं तस्य, तुषकम्बुकवत् तुषकम्बुकमिव, ज्ञेयम् । यथाहि तुषकम्बुकः शालि तण्डुलानामावापस्य उच्छूनतायाः प्रसवाभिमुखभावस्य अङ्कुरोत्पत्तेर्निमित्तम्, एवं मायायाः शिवेच्छा-वशादावापस्य प्रसवाभिमुख भावस्य कलादिकार्यादेश्च तन्निमित्तमिति । एतदुक्तं भवति यस्यैतदस्ति तं प्रति माया प्रसवाभिमुखी भवति कलादी(दीं) श्चोत्पादयतीति । 137

---

அஃது அநாதி. நல்லசமையற்காரன் என்ற சொல்லில் அடைமொழியாகவுள்ள நல்ல என்ற சொல் போல, அறிவை மறைக்கின்ற அஞ்ஞான ரூபமான மலத்திற்கு அடைமொழியாகவுள்ள 'அநாதி' என்ற சொல்லால் ஆச்சாதனகிரியா ஸம்பந்தமுடையஆன்மாவிற்கு அநாதித் தன்மை சொல்லும் வாயிலாக அதனையுடைய மலத்திற்கும் அநாதித்தன்மை கூறப் பட்டது. இம்மலம், ஆன்மாக்களுக்குப் பசுத்வம் என்று கூறப்படுகிறது. மல, இலக்கணத்தைக் கூறும் பொழுது திருஷ்டாந்தம் கூறுகின்றார், 'உமி தவிடு போல' என்று. மலரூபமான சேறு மாயேயமாகிய அங்குரத்திற்கு உமிபோல் அறியத் தக்கது. எவ்வாறெனில்; உமியானது நெல் விதையின் முளைத்தற்சக்திக்கு நிமித்தமானது போல, சிவனருளால் ப்ரஸவாபிமுகமான மாயையின் கலாதி காரியங்களுக்கு ஆணவமலம் நிமித்தமாகும். எந்த உயிர் ஆணவ மலத்தோடு கூடியதோ, அந்த உயிரின் பொருட்டு மாயை பிரஸவாபிமுகபாய் ஆகிக் கலாதி காரியங்களை உண்டுபண்ணுகிறது. 137

ननु आत्मनि तुषकम्बुकस्थानीयो मलो वर्तते। †मायायायाश्च कलाद्यगरु(ङ्कुर)जन्मेति भिन्नाधिकरणत्वात कथमेकाधिकरणो दृष्टान्त इति चेत्। सत्यम्। नायं सर्वथा दृष्टान्तः, किन्तु निमित्तनिमित्तीभावमात्र इत्यदोषः। अत्र तुषकम्बुकदृष्टान्तेन शास्त्रान्तरोक्त तात्रि(म्र)कालिका दृष्टान्तोऽप्युपलक्षण*मिति।

तदुक्तं श्रीमन्मतङ्गे—

'ताम्रकालिकवद् योगात् सहजः परिकीर्तितः।इति।

अत्रापि यथा ताम्रस्य कालिका रसशक्त्या § निवर्त्यते तथा मलः शिवशक्त्या ‡निवर्त्यत इत्येतावति दृष्टान्तत्वम्। ननु सर्वथां साधर्म्यतेति** बोध्यम्। 138

நெல்லில் உமிபோல், உயிரில் மலமானது இருக்கிறது; மாயையிலும் கலை முதலான அங்குரம் தோன்றுகிறது என்று வேற்றுமைப்பட்ட அதிகரணத்தை உடையதாயிருப்பதால், ஏகாதிகரண திருஷ்டாந்தமாக எவ்வாறு முடியும் எனில், உண்மை இது முழு திருஷ்டாந்தமாகாது. ஆயின், இது காரண காரியத்தை மாத்திரம் காட்டக் கொடுக்கப்பட்ட திருஷ்டாந்தமாகும். இங்கு உமி திருஷ்டாந்தத்தால் வேறு சாஸ்திரங்களில் கூறப்பட்ட 'செம்பிற் களிம்பு போல என்ற திருஷ்டாந்தமும் உபலக்ஷணமாகும்.

மதங்கத்தில்

"ஆன்மாவில் ஆணவமலமானது செம்பிற் களிம்பு போலச் சேர்ந்திருத்தலால், ஸஹஜமலம் எனப்பட்டது" என்று கூறப்பட்டுள்ளது அறிக.

அஃதாவது செம்மில் உள்ள களிம்பானது ரஸகுளிகையால் நீங்குவது போல, ஆணவமலத்தின் சக்தியும் சிவதீக்ஷையால் குன்றி விடும என்று இவ்வளவில் திருஷ்டாந்தத்தைப் பொருத்திக் கொள்க; எல்லா வகையாலும் ஒப்புமை கொள்ளற்க. 138

†(ख) मायायां *(ख) उपलक्षणीय §(ख) निवर्तते
‡निवर्तते **(ख)साधर्म्यात्

अस्य च पर्यायनामानि मृगेन्द्रे दर्शितानि ।
यथा—

'पशुत्व पशुनीहारमृत्युमूर्च्छामलाञ्जनैः ।
अविद्यावृतिरुग्ग्ला(ग्ला)नि पापमूलक्षयादिभिः ॥
सुप्रभेदे च—

मलोऽज्ञानं तमोऽज्ञात्वा(ज्ञत्वं) तिरस्कारकरस्तदा (था) ।
*पतिः पशुरविद्येति मलपर्यायवाचकः॥ इति । 139

अत्र पुंसामिति बहुवचननिर्देशान्मल इत्येकवचननिर्देशाच्च मलस्यैकस्यैव बहुपुरुषक्रियावारकशक्तिवैचित्र्यमस्तीति ध्वनितमर्थं मृगेन्द्रसूत्रेण मुखतो दर्शयति—

तदेकं सर्वभूतानामनादि निबिडं महत् ।
प्रत्यात्मा(त्म)स्थ स्वकालान्तापाय(यि) शक्तिसमूहवत् ॥
सू २१

---

மலத்திற்கு வேறு பெயர்கள் பசுத்வம், பசுநீஹாரம், மிருத்யு, மூர்ச்சை, மலம், அஞ்சனம், அவித்தை, ஆவ்ருதி, ருக், க்லானி, பாபமூலம், க்ஷயம் என்று ஸ்ரீ மிருகேந்திராகமத்தில் கூறப்பட்டிருக்கின்றன.

ஸுப்ரபேதம்

மலம், அஞ்ஞானம், தமஸ், அறியாமை பதி, பசு, அவித்தை என்று மலத்தின் வேறு பெயர்களைக் கூறுகின்றது. 139

இந்தச் சூத்திரத்தில் 'ஆன்மாக்களுக்கு' என்று பன்மையால் சொல்லப்பட்டமையால் மலம் என்று ஒருமையில் சொல்லப்பட்டிருந்தாலும், அஃது ஒன்றே

---

* प्रतिपत्तिरविद्येति

*பிரதிபத்தி என்று ஸுப்ரபேதம் அச்சுப்பதிப்பு

तत्-आवरणं, सर्वभूतानां- चतुर्दशविधानामपि प्राणिनामेकमेव । कस्मादित्यत्र विशेषणद्वारेण हेतुमाह- अनादीति अनादि-स(न)माधी(यी)य बन्धनवदागन्तुकम् । अतएवैकम् । अनेकत्वे हि तस्याचेतनत्वात् कारणान्तर पूर्वकत्वेनानादित्वानुपपत्तिः । न च कारणान्तरपूर्वकत्वेऽपि काला * दिवत्पारम्पर्येणबन्धकत्वादनादित्वं भवतीति वाच्यम् । तस्य प्रवाह (हा) नादित्वानङ्गीकारात् । तदङ्गीकारे तु पुम्सां [मलाभावावस्थावश्यकतया] तदानीं शिवस्यै(ये)व पुनब(र्ब)न्धा-
भावप्रसङ्गात् । तस्मात् न कर्मत्व(व)त् प्रवाह(हा) नादित्वं
मलस्य; किन्तु कारणाभावादेवानादित्वं मायावत् । 140
निबिडं [घनम्]पुंसामभेद्यमित्यर्थः ।

---

பல ஆன்மாக்களுடைய ஞானகிரியைகளைத் தடுக்கின்ற பலப்பல சக்தியுடையதாக இருக்கிறது என்னும்குறிப்புப் பொருளை மிருகேந்திர சூத்திரத்தால் விளக்குகிறார்.

*ததேகம் ஸர்வபூதாநாமநாதி நிபிடம் மஹத் I
ப்ரத்யாத்மஸ்த ஸ்வகாலாந்தாபாயி சக்தி ஸமூஹவத் II

அம்மறைப்பாகிய மலம் பதினான்கு வகைப்பட்ட பிராணிகளுக்கும் ஒன்றேயாகும். எவ்வாறு என்று காரணத்தை விளக்க வேண்டி, 'அநாதி' என்று அடை மொழிவாயிலாகக் காரணத்தை விளக்குகிறார். அஃது அநாதியாக உள்ளது. மாயீய பந்தம் போல் ஆகந்துகம்(வந்தேறியது)அன்று; அநாதியாயிருத்தலாலேயே அஃது ஒன்றேயாகும். அவ்வாறன்றி அநேகம் என்போமாகின், அஃது அசேதனமாயிருப்பதால் வேறு காரணம் வேண்டப்பட்டு அதற்கு அநாதித் தன்மை இல்லாமல் போகும்; வேறு காரணங்களை

---

*உரைத்தமல மெவ்வுயிர்க்கு மொன்றாகி யநாதியாய்ப்
பொருத்தமுறும் பெரிதாகிப் புகலருமான் மாக்கடொறு
மிருத்தலுறு வனவாகி யிருந்து தங்கா லாந்தத்திற்
றறித்தலற வகல்வனவாஞ் சத்திபல வுடைத்தம்மா.

(சதமணிமாலை)

* (ख) कलादिना

व्यापकानामात्मनामावरकत्वात् महत् ।

नन‍ु मलस्यैकत्वे एकमुक्तौ सर्वमुक्तिप्रसङ्ग इत्यत आह प्रत्यात्मस्थस्वकालान्तापाय(यि)शक्तिसमूहवदिति । प्रत्यात्मस्थाः प्रति पुरुषं वर्तमानाः, स्वकालान्तापायिन्यः स्वस्वपरिणाम कालापसारिण्यः, य(याः)शक्तयः तासां समूहः सोऽस्यास्तीति तद्वत् ।

तथोक्तं तत्व[त्रय]निर्णये—

"मलशक्तयो[वि]भिन्नाः प्रत्यात्मानं च तद्गुणोप(णाव) रिकाः इति"

---

முன்னிட்டிருந்தாலும், காலம் முதலிய தத்துவங்கள் போலப் பரம்பரையாகப் பந்திப்பதால் அநாதித்தன்மை உள்ளது என்று கூறமுடியாதோ வெனின், அன்று அம்மலத்திற்குப் பிரவாஹம் போல அநாதித்தன்மை அங்கீகரிக்கப்படவில்லை. அதை ஏற்றுக்கொள்ளின், ஆன்மாக்களுக்கு மலமில்லாத அவஸ்தையும் அவசிய மாக இருப்பதால் அப்பொழுது சிவபெருமான் போல மீண்டும் பிறப்பின்மை ஏற்படும். ஆதலின், மலத் திற்குக் கன்மத்தைப் போலப் பிரவாஹாநாதித்வம் இல்லை. ஆனால் அதற்கு மாயை போல் காரணமில்லா ததால் அநாதித்தன்மை செறிந்துள்ளது என்க 140

நிபிடம் (நிபிடம்) பேதிக்க முடியாதது, வியாபக மான ஆன்மாவை மறைப்பதால் பெரியது.

மலம் ஒன்றாக இருக்குமாயின், ஒருவர் முக்தியடை யும் பொழுது எல்லோரும் முக்தியடைதல் நேரிடும் என்றாலோ வெனின், அன்று; அஃது ஒவ்வோர் ஆன் மாவிடத்தும் இருக்கின்ற தனது பக்குவகாலத்தில் நீங்குவதாயுள்ள அநேக சக்திகளை உடையது.

एवं च सति मलस्यैकत्वेऽपि तदीयावारकशक्तीनामानन्त्यात् तदाचा(वा)र्यणामपि भेदान्नैकमुक्तौ सर्वमुक्तिप्रसङ्गः ।

अनेन सूत्रेण मलस्यैकत्वादि-प्रतिपादकेन तत्स्वरूप लक्षणमुक्तम् । तत्र प्रमाणं तु मोहादिलक्षणकार्यलिङ्गं शेषवदनुमानं द्रष्टव्यम् । तद्यथा मोहादिकं कार्यं सकारणकं कार्यत्वाद्धटवत् । अत्र च मायादीनां प्रकाशकतया मोहकारणत्वा-सिद्धेः परिशेषात् मोहकारणतया मलस्य सिद्धिः ।

तथा किरणे—

प्रकाशो व्यक्तिशब्देन मलशब्द(दे)न चावृतिः ।
व्यक्तिर्याणो म(र्म)लः प्रोक्तः स्फुटं दीपा[न्ध]कारवत् ।

---

தத்துவ(த்ரய) நிர்ணயத்தில்

"மல சக்திகள் பலவகைப் பட்டனவாயிருத்தலால் ஒரு சக்தியானது பரிபாகத்தால் நசிக்க அந்தச் சக்தியால் மறைக்கப்பட்ட ஆன்மாவுக்குத்தான் மோக்ஷம். அனைவருக்கும் இல்லை என்று கூறப்பட்டுள்ளது காண்க.

இவ்வாறிருக்க, 'மலம்' ஒன்ருக இருந்தாலும், அதனிடத்தில் உள்ள மறைத்தற்சக்தி பலவாதலால் மறைக்கப்பட்ட ஆன்மாக்களும் பலவாகும். ஆகவே, ஓர் ஆன்மா முக்தி எய்திய பொழுது அனைவருக்கும் முக்தி என்பது எய்தாது என்க.

மலம் ஒன்றேயாகும் என்று விளக்கிக் கூறிய இந்தச் சூத்திரத்தால் மலத்தின் ஸ்வரூப இலக்கணம் கூறப்பட்டது. அதற்குப் பிரமாணம் யாதோ வெனில், மோஹம் முதலிய காரியத்தைக் கொண்டு காரணமான மலத்தை அறிவது என்ற அனுமானமேயாகும். அஃதாவது மோஹம் முதலிய காரியம் காரணத்துடன் கூடியது. காரியமாக இருத்தலால் 'குடம் போல' என்பது அனுமானஸ்வரூபம். இங்கு மாயை முதலியவை கலாதிகளைப் பிரகாசிக்கச் செய்வதால் மோஹத்திற்குக் காரணமாகா. ஆதலால்

मतङ्गे च —

"तस्मादि(दृद्व)यं मलो माया सदा दीपान्धकारवत् ।
द्वयो[ः] स्वभावभेदश्च त्वयाख्यातमिदं मुने" ॥ इति ।
‡मोहादिमलकार्याणि सप्तविधानि भवन्ति ।

तद्यथा तत्रैव —

मोहो मदश्च रागश्च विषादः शोष एव च ।
वैचित्र्य(त्र्यं)[चैव] हर्षाख्यः सप्तैते सहजा मलाः ॥
एतेषां स्वरूपं मतङ्गादौ द्रष्टव्यः (म्) । 141

न §च ता[ः] मलस्य शक्तयः स्वातन्त्र्येण रुन्धन्ति अपसरन्ति वा, किन्तु परमेश्वररोधशक्त्यधीनाः । सापि रोध-शक्तिरुपचारात् पाश इति सूत्रद्वयेन प्रतिपादयति—

तासां माहेश्वरी शक्तिः सर्वानुग्राहिका शिवा ।
धर्मानुवर्तनादेव पाश इत्युपचर्यते ॥ सू २२

---

பாரிசேஷ அளவையால் மோஹத்திற்குக் காரணமா யிருப்பது ஆணவமலம் என்பது பெறப்பட்டது.

கிரணம்

மாயையால் பிரகாசமும் மலத்தால் மறைப்பும் கூறப்பட்டன. அதனுல் மாயையும் மலமும் விளக்கும் இருட்டும் போலவாம்" என்று கூறுகின்றது.

இவ்வாறே மதங்கமும் மாயா மலம் இவ்விரண்டும் விளக்கும் இருட்டும் போல என்று இரண்டிற்கும் உள்ள இயல்பான வேறுபாடு கூறியது காண்க.

மலத்தின் காரியமான மோஹம் முதலியவை ஏழு வகைப்படும். அவையாவன:

மோஹம், மதம், அராகம், விஷாதம், சோஷம், வைசித்ருயம், ஹர்ஷம் என்பன. இந்த ஏழும் ஸஹஜ மலங்கள் எனப்படும். இவற்றின் இலக்கணம் மதங்க பாரமேச்வரம் முதலியவற்றில் காண்க. 141

---

‡ (ख) मोहादीनि § (ख) नचैता:

माहेश्वरी [शक्तिः] शैवी शक्तिः, तासां-मलशक्तीनां धर्मानुवर्तनात् धर्मस्य- दृक्क्रियासन्निरोधकत्वलक्षणस्य, अनुवर्तनात् अनुसरणादेव । हेतुपञ्चमीयम् । पाशतया पाशत्वेन उपचर्यते न चात्रमुख्यं पाशत्वम् । तत्र हेतुतया रोधशक्ति विशिनष्टि-सर्वानुग्राहिका शिवेति ।

सा सर्वानुग्राहिका - सकलजगदनुग्रहस्वभावा, शिवा-तच्छ्रेयः प्रसाधिका, यतः ततो न मुख्यत्वमित्यर्थः । 142

---

மலத்தின் சக்திகள் சுதந்திரமாகத் தடுக்கவில்லை; நீங்கவும் இல்லை; ஆயின், அவை சிவதிரோதான சக்தி வசப்பட்டே செயல்படுகின்றன. அந்தத் திரோதான சக்தியும் பாசமென்று உபசாரத்தால் சொல் லப்படுகிறது என்பதை இரண்டு சூத்திரங்களால் விளக்குகிறார்.

தாஸாம் மாஹேச்வரீ சக்தி: ஸர்வாநுக்ராஹிகா சிவா I
தர்மாநு வர்த்தநாதேவ பாச இத்யுபசர்யதே II

சிவபெருமானின் திரோதான சக்தியானது, ஞானகிரியைகளைத் தடுப்பது என்ற மலசக்திகளின் தருமத்தை அனுஸரிப்பதாலேயே பாசம் என்று உபசாரமாகச் சொல்லப்படுகிறது. இதற்குப் பாசத் தன்மை வாச்சியமன்று. அதற்குக் காரணமாகத் திரோதான சக்தியை அடைமொழியுடன் விளக்குகிறார். அது எல்லா ஆன்மாக்களுக்கும் அருள் புரிவதையே இயல்பாகக் கொண்டது; மங்களத்தைக் கொடுக்கக் கூடியது; அதனாலேயே அதற்கு பாசத்தன்மை வாச்சியமன்று என்பது பொருள். **142**

---

[இறைவனுயர் சத்தியா யெவ்வுயிர்க்கு மருள் செய்யப்
பெறு சிவைதான் மலதருமம் பின்றொடரும் செயலதனை
யுறுதலினுற் பாசமென வுபசரிக்கப் படுமெனவே
யறைதருவ ரமலனரு ளாகமநூ னெறிகண்டார்.]

[சதமணிமாலை]

नन्वस्या रोधशक्तेः रोधनैकस्वभावायाः कथमनुग्रह कारित्वमित्यशङ्‌क्याह—

§परिणामयति(ती) ताश्च रोधान्तं कार्कचित्विषा ।
यदोन्मीलनमाधत्ते तदानुग्राहिकोच्यते ॥ सू २३

ताश्च -सर्वभूतगताः मलसम्बन्धिनी आ(रा)वरणशाक्तिः(क्तीः) रोधान्तं – तदधिकारकालं यावत् तावत् परिणामयित्री परिणामेन योजयान्ति (न्ती) परीणाम शब्दात् "प्रातिपदिकाद्धात्वर्थे" इति णिचि कृते परिणामयतीतिरूपम् । अत्र नुं‡(नु)-मभावश्छान्दसः* । सा पतिशक्तिः क?क एवार्कः कार्कः तस्य चित्विषा चिद्रूपया [त्विषा] कार्कचित्विषा ।

---

மறைப்பையே இயல்பாகக் கொண்ட திரோதான சக்திக்கு அருள் புரியும் தன்மை எவ்வாறுளது? என்று ஆசங்கை நிகழ், மேல் சூத்திரத்தில் விளக்கு கிறார்.

§பரிணமயதீ தாஸ்ச ரோதாந்தம் கார்க்க சித்விஷா l
யதோன் மீலனமாதத்தே ததானுக்ராஹிகோச்யதே ll

---

* परिणामेन योजयति परीणामयन्ती अत्र "प्रातिपदिकाद्धात्वर्थे" इत्यनेन णिचि अयादेशे शतरि च कृते उगिदन्तत्वात "उगितश्च"इत्यनेन ङीपि च कृते "शप्श्यनो र्नित्यमिति नुम्भावस्य नित्यतया विधानात् परिणामयन्तीत्येकमेवरूपं साधु । तोदादिकात अकारान्तादादादिकाच्च धातोः शतरि किल विकलपेन नुम्भावो विहितः, यथा याती यान्ती, तुदती तुदन्ती, इति । अतः अस्मिन् सूत्रे परिणामयतींति नुं रहितं रूपं छान्दसत्वादेव समाधातव्यम् । छन्दोवत्सूत्राणि भवन्तीतिन्यायात् सूत्रणां छन्दोरूपतातिदेशात श्रीसदाशिवभट्टारकेनाविष्कृतत्वाच्च तेषांछान्दसत्वकथनं युक्तमेव ।

‡(ख) णौ ह्रस्वाभावाश्छन्दसः § (ख) परिणामयत्येताश्च

*செப்புறுமிச் சிவசக்தி திரோதாந்த மாணவத்தின்
பற்பலவாஞ் சக்திகளைப் பரிணமிப் பித்துளதா
மெப்பொழுதுஞ் சிவமென்னு மிருங்கதிரால் விடுப்பிக்கு
மப்பொழுதிங் கருள்புரிவ தாகுமென வரைகுவரால்.

कश्श (कश)ब्देन मूध्नाे(र्धा) सदानुग्रहैकव्यापार ईशान उक्तः, "†ईशान मूर्धेति मन्त्रलिङ्गात् । [स]एवं(व) सकलजगदनुग्रहीतेत्याद्युक्तत्वात्अर्केनादित्येनोपमितः । ततः प्रवृत्तया परश्रेयः प्रक(का)शिकया चात्विषा ज्ञानभासा हेतुभूतया यदा-यस्मिन् काले उन्मीलनं-अनुन्मीलितस्वरूपाणामनुवर्गाणामाशय विकासनं, आधत्ते - करोति, तदा तस्मिन्काले, अनुग्राहिक अनुग्रहकरी, उच्यते-ग(भ)ण्यते । यद्यपि रोधशक्त (क्ते) मल-परिपाकान्तमेव तिरोधानैकस्वभावत्वं, तथापि तदनन्तर-मणुवर्गाणांमाशयविकासक -हेतुत्वानुग्राहकत्वमित्यर्थः । तथाच इयमेव पतिशक्तिः यावत्म(न्म) ल परिपाकमचिद्रूपाणिमल कर्ममाया तत्कार्याण्यनुगृह्णाति, चिद्रपाना (पतामा) त्मन-स्तिरोदधाति । ‡विकासा[न]न्तरमात्मनोऽनुगृह्णाति । पाशं तिरोदधातीति चिदचितां सर्वेषामनुग्रहकारित्वात् सर्वानुग्रह-कारिकेत्यपि सिद्धम् ।

ஈச்வரனுடைய சக்தியானது, எல்லாப் பிராணிகளிடத்திலுமுள்ள மலசக்திகளைத் திரோதானம் செய்யும் வரை பரிணமிக்கச் செய்து கொண்டிருக்கிறது. மேலே परिणामयती (பரிணமயதீ)என்ற சொல்லுக்கு இலக்கண விளக்கம் தருகின்றார் நூலாசிரியர். 'க' சப்தத்தால் திருவருள் பாலிக்கும் ஈசானமந்திரம் கூறப்பட்டது. 'ஈசானமூர்த்தா' என்று மந்திரம் காணப்படுவதால், அம்மந்திரமும் திருவருள் பாலிப்பதில் என்றும் ஈடுபட்டிருத்தலால் கதிரவனாக உவமை கூறப்பட்டிருக்கிறது. அதனின்று தோன்றிய ஞான ஒளியின் காரணமாக மறைப்புண்டு கிடக்கும் உயிர்களுக்கு எப்பொழுது அறிவை விளக்கம் செய்கிறதோ, அப்பொழுது அனுக்

† (ख) ईशानो ‡ (ख) पाकानन्तरं

तद्यथा—

शिवस्य शक्तिः सर्वेषां सदानुग्रहकारिणी ।
पाशधर्मनिरोधेन पाशानां *पाकहेतुना ॥
निवृत्तियोग्यतां तेषां करोतीति यतस्ततः ।
पाशधर्मानु (र्मनि) रोधाच्च विधत्ते पश्वनुग्रहम् ॥
तादात्मिकेन रोधेन रोधिकेत्युपचर्यते । इति । 143

---

கிரக சக்தி என்று சொல்லப்படுகிறது. திரோதான சக்திக்கு மலபரிபாகம் ஏற்படும் வரைதான் திரோ தானம் செய்யுந்தன்மை இருப்பினும் மலபரிபாகத் திற்குப் பிறகு உயிர்களுக்கு அறிவை விளக்கம் செய் வதற்குக் காரணமாயிருத்தலால் அனுக்கிரகிக்குந் தன்மை என்பது பொருள். ஈச்வரனுடைய சக்தி மல பக்குவம் அடையும் வரையில் அசித்தாகவுள்ள மும்மலங்களின் காரியங்களை அனுக்கிரகம் செய்து ஆன்மாக்களின் சித்தன்மையையும் மறைக்கிறது; பக்குவமடைந்தபிறகு உயிர்களுக்கு அனுக்கிரகம் செய்கிறது. ஆதலால் அசேதனமான மலகன்மமாயா காரியங்களுக்கும் சேதனமான ஆன்மாக்களுக்கும் அனுக்கிரகம் செய்வதால் பதிசக்தி எல்லோருக்கும் அனுக்கிரகம் செய்வது என்பது முடிந்த முடிவு ஆகும்.

மேற்கோள்

''ஈச்வரனுடைய சக்தி சேதனசேதனங்களுக்கும் அனுக்கிரகம் செய்யக் கூடியது. பரிபக்குவத்திற்குக் காரணமான பாசதருமங்களைத் தடுப்பதால் பாசங் களுக்கு நிவிருத்தி ஏற்படுகிறது. பாசதருமங்களைத் தடுத்துச் சேதனமான ஆன்மாக்களுக்கும் ஈச்வரசக்தி அனுக்கிரகம் செய்கிறது. பாசதருமத்தைத் தடுத்து நிறுத்துவதாலேயே ஈச்வரசக்திக்கு 'ரோதிகா' என்பது உபசார வழக்கு'' என்று சாஸ்திரம் கூறு கின்றது. 143

---

* (ख) पाशहेतुना

एवं मल तिरोधानशक्तिरूप पाशद्वयमभिधाय अवशिष्ट पाशेषु "मायोपरि महामाये"त्युक्तत्वात् मायाद्रप्यभि(भ्यर्हि) तं महामायारूपं विश्वसारसूत्रेण दर्शयति —

* वागीश्वरी च शुद्धाध्वमूलोपादान कारणम् ।
सो (नो) पादानं विना कार्यं कदाचिदुपलभ्यते ॥ सू २४

शुद्धस्याध्वनो मूलभूतमुपादानकारणम् । यच्छ(च श)ब्दोऽव-धारणार्थः । सैव वागीश्वरी महामाया ।

तदुक्तं श्रीमत्पौष्करे—

"परा वागीश्वरी विद्या माय(या)ऽविद्यापरा स्मृता । इति महामायाया नादादीनि बहूनि पर्यायनामानि ।

---

இவ்வாறு சக்திமல, திரோதானசக்தி என்ற இருபாசங்களையும் கூறி, எஞ்சியுள்ள பாசங்களுள் "மாயோபரி மஹாமாயா" என்று சொன்னமையால், மாயையினும் சிறந்த சுத்தமாயையின் இலக்கணத்தை விச்வஸார சூத்திரத்தால் விளக்குகிறார்.

வாகீச்வரீ ச சுத்தாத்வ மூலோபாதான காரணம் ।
நோபாதானம் விநா கார்யம் கதாசிது பலப்யதே ॥

சுத்தாத்துவாவிற்கு உபாதான காரணம் 'வாகீச்வரி' என்னும் சுத்தமாயையே யாகும்.
சூத்திரத்தில் உள்ள 'ச' என்னும் சொல் உறுதியைக் கூறுகிறது.
பௌஷ்கரம்

"வாகீச்வரி (சுத்தமாயை) வித்தை என்றும் பரம் என்றும் சொல்லப்படும். அசுத்தமாயை அவித்தை என்றும் அபரம் என்றும் சொல்லப்படும்" என்று கூறுகின்றது.

சுத்தமாயைக்கு நாதம் முதலிய பல பர்யாய நாமங்கள் இருக்கின்றன.

---

सूत्र *दं इ "क" मातृकायात्रोपलभ्यते

तथ ।*नादकारिकायाम्—

सिद्धो नादः परसुमङ्गला मालिनी महामाया ।
समनानाहतबिन्दुरघोषा वाग् ब्रह्मकुण्डलिनीतत्वम् ॥
विद्याख्यं चेत्युक्तस्तैस्तै[ः] शब्दैस्तदागमेष्वित्थम् । इति ।
144

अनेन महामाया[या]ः शुद्धाध्वोपादानत्वरूपं लक्षणं प्रदर्शितम् । तेन च कार्यलिङ्गकमनुमानं तत्सद्भावसाधकं प्रमाणमाक्षिप्तम् । तथाहि शुद्धाध्वो(वा) यं सोपादान[ः] कार्यत्वात् घटवत् । न चात्र समवेतशक्तेरेवोपादानत्वे (त्व) सिद्धिरस्त्विति वाच्यम् ; तस्या उपादानकारणत्वेऽचेतनत्वापत्त्या चे तनशिवसमवायायोगात् ।

---

நாதகாரிகையில்

"நாதம், பரஸுமங்கலா மாலினீ மஹாமாயா, ஸமனு, அநாஹதபிந்து, அகோஷா வாக்குபிரும்ஹம், குண்டலினீதத்துவம் வித்யாதத்துவம் என்று பல பெயர்களோடு ஆகமங்களில் இவ்வாறு கூறப்பட்டிருக்கிறது" என்று விளக்கப்பட்டிருக்கின்றது. 144

இதனால், சுத்தப்பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாயுள்ளது சுத்தமாயை என்று சுட்டப்பட்டது. இதனால் முதற் காரணத்தின் உண்மையைச் சாதிப்பதற்காகக் காரியலிங்கரூபமான அனுமானம் பிரமாணமாகச் சொல்லப்பட்டுள்ளது.

அனுமானஸ்வரூபமாவது.

இந்தச் சுத்தப் பிரபஞ்சம் முதற்காரணத்தோடு கூடியது; காரியமாயிருத்தலால் 'குடம் போல' என்பதேயாகும். இங்குச் சிவபெருமானின் ஸமவேத சக்திக்கே உபாதான காரணத்தன்மை இருக்கட்டும் என்று சொல்லலாமோவெனின், ஆகாது; சிவபெருமானின்

---

* नादकारिकाव्याख्याम्

यथा श्रूयते पौष्करे —

शिवे कर्तरि तादात्म्यात् के (म्यान्ने)यं कुण्डलिनी स्थिता ।
उपादानत्वतो हेतोः कुलाल [ले मृत्तिका] यथा ॥ इति ।

अत्र मायाकृत्य (प्रकृ)त्योः मोहकत्वेन प्रबुद्धपुरुष कार्यकरणरूप शुद्धाध्वकारणत्वायोगेन परिशेषान्त(त्त)दनुकारि कारणतया महामायासिद्धिः ।

तथा पौष्करे

†मायापि नात्रो पादान(नं) ‡मोहकत्वात्स्वतेजसा ।

---

ஸமவேத சக்திக்கு உபாதான காரணத்தன்மை கூறின். அதற்கு அசேதனத் தன்மை, நேரிடுமாதலின், ஞானமயமான சிவபெருமானோடு ஸமவாயத் தன்மை பொருந்தாமற்போம் என்பது.

பௌஷ்கரத்தில் :-

"இந்தக் குண்டலினி என்ற சுத்தமாயையானது உலகத்திற்குக் கருத்தாவாகிய சிவபெருமானிடத்தில் தாதான்மிய சம்பந்தமுடையது இல்லை உபதானமாக இருப்பதால்; குலாலனிடத்தில் மண் போல" என்று பக்ஷ ஏது *ஸாத்ய திருஷ்டாந்தங்களால் விரித்துரைக்கப்பட்டுள்ளது காண்க.

சுத்தாத்துவாவிற்கு ஸமவேதசக்தி உபாதான காரணமாகாதிருப்பினும், குண்டலினியை ஏற்றுக் கொள்ள வேண்டா; அசுத்தமாயையே உபாதான காரணமாக ஏற்க இயலாதோ எனின், இயலாது.

---

† अशुद्धमाया ‡ अशुद्धमाया शुद्धाध्वोपादानं न भवतिमोहकत्वात् काचकामलादिवत् इत्यानुमानस्वरूपम्

(पौष्करभाष्ये)

*குண்டலினி பக்ஷம் தாதான்மிய சம்பந்தம் இல்லை என்பது ஸாத்தியம் உபாதானமாக இருப்பதால் என்பது ஏது. குலாலனிடத்தில் மண்போல என்பது திருஷ்டாந்தம்.

यतः प्रबुद्ध पुङ्गाय करणा [ना]न्न कारणम् ॥
शुद्धाध्ववर्तिनस्सर्वे प्रबुद्धाः शिवतेजसः (सा) ।
तस्माच्छुद्धाध्वनश्चास्य ‡स्वानुकार्येव कारणम् ॥
इष्यतां कुण्डलिन्याख्यं शुद्धमेतद्द्विजोत्तमाः ॥ इति । 145

ननु कार्यस्य सोपादानत्वमसिद्धम्, प्रध्वंसे व्यभिचारादित्याशङ्क्याह-उपादानमित्यादि । उपादानं – उपादान कारणं, विना - अन्तरेण, कार्यं कदाचिदपि नोपलभ्यते-नदृश्यते । कार्यत्व हेतोर्भावत्व* विशेषणदानेन व्यभिचारः परिहरणीय इति भावः । अस्मादपि शुद्धाध्ववासिनां परमोक्षं प्रति बन्धकत्वात् पाशत्वमेव ।

---

என்னேயெனின், இங்கு அசுத்தமாயையும் பிரகிருதிமாயையும் மோஹத்தைச் செய்வதாக இருத்தலால், அனந்தேசப்பெருமான் முதலியவர்களுடைய தனுகரண புவன ரூபமான சுத்தாத்துவாவிற்குக் காரணமாகாமையால் (அசுத்தத்தில் சுத்தம் தோன்றுமையால்) பாரிசேட அளவையால் தனக்குச் சமமான சுபாவமுடைய குண்டலினியே உபாதான காரணமானது என்று துணியப்படும்.

பௌஷ்கரம்,

"அசுத்த மாயையும் பிரகிருதிமாயையும் சுத்தாத்துவாவில் உபாதான* காரணம் ஆகமாட்டா; அவை தம் சக்தியால் மயக்கத்தைச் செய்வதால். எவ்வாறு எனில், சுத்தாத்துவாவில் இருக்கின்ற ஞான ஒளியை உடைய ஸ்ரீ அனந்தேசப் பெருமான் முதலியவர்களின் சரீரேந்திரியாதிகளுக்கு மோஹத்தை உண்டுபண்ணக் கூடிய அசுத்தமாயை உபதானம் ஆகும் என்பது

---

‡ अत्रानुमानयोगश्चेत्थम् — शुद्धाध्वा, स्वसमान स्वभाववदुपादानकः उपादेयत्ववात् घटवत् इति (पौ. भा.)

* सर्वं भावात्मकं कार्यम् सोपादानम् इति

*இங்கு அனுமானஸ்வரூபம் இவ்வாறு காண்க.

அசுத்தமாயை சுத்தாத்துவாவிற்கு உபாதானம் அன்று; மோஹத்தை உண்டு பண்ணுவதால் காசகாமலம் போல என்பது.

श्रीमत्पौष्करे—

किञ्च रुद्राणवो येन बध्यन्ते यत्र वा स्थिताः ।
विमुच्यन्ते यतो वायं सबिन्दुरिति गम्यताम् । इति । 146

अथ सूत्रान्तरेण तस्य सकल जगदुत्पत्तिहेतुभूतं शुद्धाध्व कार्यं दर्शयति—

*याऽधः कुण्डलिनी शक्तिर्मायाकर्मानुसारिणी ।
नादबिन्द्वादिकं कार्यं तस्या इति जगत्स्थितिः ॥ सू २५

---

ஏற்கத்தக்கது அன்று; அவை ஒன்றுக்கொன்று விரோதமாக இருப்பதால். ஆதலால் சுத்தாத்துவாவில் காரியத்திற்குத் தகுந்த சுபாவமுடைய குண்டலினீ என்ற சுத்த மாயையையே *உபாதானமாகச் சொல்ல வேண்டும் என்கிறது.

'காரியம் யாவும் முதற்காரணத்தோடு கூடியன என்பது ஏற்புடையதன்று; அழிவில் முதற்காரணம் காணுமையால்' என்று ஆசங்கை நிகழ, அந்த ஆசங்கையை நீக்குகின்றார்; 'உபாதானம்' என்ற தொடக்கத்தால். உபாதான காரணமில்லாமல் காரியம் ஒரு பொழுதும் ஏற்படுவதில்லை. மேலும், காரியத்வம்‡ என்ற ஏதுவுக்கு "உண்மைத்தன்மையுடைய" என்ற அடைமொழி கொடுத்து முன்கூறிய வியபிசார தோஷம் நீக்கத்தக்கது என்பது கருத்து. இதுவும் சுத்தாத்துவ வாஸிகளுக்குப் பரமோக்ஷத்தைக் குறித்துப் பந்தகமாக இருப்பதால் பாசமாகும்.

---

* इदं श्रीमत्स्वतन्त्रागमस्थं सूत्रमिति नारायणकण्ठः

*அனுமான பிரயோகம் இவ்வாறு; சுத்தாத்துவா, தனக்குச் ஸமான சுபாவமுள்ள வஸ்துவை உபாதானமாகக் கொண்டது, உபாதேயமாக இருப்பதால், 'குடம்போல' என்று அறிக.

‡இருக்கின்ற எல்லாக் காரியமும் உபதானக் காரணத்தோடு கூடியன என்பது.

अत्राधः शब्दः शिवसमवायिशक्त्यपेक्षः,समवायिशक्तेः शिवस्य च मायोर्ध्वत्वप्रतिपादनात् ।
तथा सर्वज्ञानोत्तरे श्रूयते—

निष्कला परमा शक्तिरचिन्त्या सर्वतोमुखी ।
स *सूक्ष्मा निर्मला नित्यानन्दा निर्वाणदायिनी ॥
या विजृम्भति तत्वेषु सर्वतत्वेषु चैव हि ।
तथा धृतं जगत्सर्वमेकया नैकरूपया ॥
अस्या ऊर्ध्वं निरालम्बं निराधारं निरामयम् ।
अचिन्त्यं व्यापकं शान्तं सृष्टिसंहारवर्जितम् ॥ इति । 147

---

பௌஷ்கரத்தில்,

"எதனுல் ஸ்ரீகண்டர் முதலிய உருத்திரர்களும் ஸ்ரீ அனந்தேசப் பெருமான் முதலிய அணுக்களும் தனு கரண புவன போகத்தால் கட்டப்படுகின்ருர்களோ, எதனுல் தத்துவ புவனங்களில் இருக்கின்ருர்களோ, எதிலிருந்து விடுபடுகின்ருர்களோ, அதுவே பிந்து என்று அறியப்படும்" என விரிவாகக் கூறியுள்ளதை அறிக. 146

மேலும், வேருெரு சூத்திரத்தால் பிந்துவினுடைய உலகம் தோன்றுவதற்குக் காரணமான சுத்தாத்து வாவின் காரியத்தை விளக்குகிருர்.

*யாத: குண்டலினீ சக்தீர் மாயா கர்மாநுஸாரிணீ ।
நாத பிந்த்வாதிகம் கார்யம் தஸ்யாஇதி ஜகத்ஸ்திதி: ॥

இந்தச் சூத்திரத்தில் 'அத:' (அத:) என்னும் சொல் சிவபெருமானின் ஸமவேத சக்தியை நோக்கக்

---

* (ख)संसूक्ष्मा

*குண்டலியாஞ் சத்திதான் கொடுமாயை வினைகடமைப்
பண்டுதொடர்ந் துளதென்பர் பகருமதன் காரியங்கள்
விண்டகல விருநாத விந்துமுத லனவென்னக்
கண்டுரைசெய் தனர்ஞானக் கலைமுழுதுங் கற்றுணர்ந்தார்.
(சதமணிமாலை)

एवं समवायिशक्तेरधोवर्तमाना मायाकर्मानुसारिणी- माया च कर्म च मायाकर्मणी, मायाकर्मणोऽनुसारः माया- कर्मानुसारः सः अस्यास्तीति मायाकर्मानुसारिणी । निवृत्यादि कलारूपेण मायाकार्यपृथिव्यादितत्वाधारभूता तद्वर्तिनां कर्मा- नुगुण वाक्शक्तिरूपा चेत्यर्थः । यद्वा मायाक्षोभाकानन्तदेव- शरीरोत्पात (द) कत्वेन तस्य (स्या) मायानुकूलत्वम् । कर्म- जन्य भावप्रत्ययानुवेधशब्दोत्पादकत्वात् कर्मानुकूलत्वम् । कुण्डलिनी- कुण्डलिन्याख्या, या शक्तिः, शिवस्य परिग्रहशक्तिः,

---

'கீழே' என்னும் பொருளைக் கொண்டது; ஏனெனில், சுத்தமாயைக்குமேல் சிவபெருமானின் ஸமவேத சக்தியையும் சிவபெருமானையும் குறிப்பிடுவதால் என்க.

ஸர்வஞானோத்தரத்தில்

''கலையற்றதும், மேலானதும், மனங்கடந்ததும், எல்லா ஆற்றலும் உடையதும், சூக்குமை என்ற அவத்தையோடு *கூடியதும் மலமற்றதும், ஆனந்த வடிவமானதும், †மோக்ஷத்தைக் கொடுப்பதும், தான் ஒன்றாக இருந்தபோதிலும் காரியவேறுபாட்டால் பல வடிவத்தோடு எல்லா உலகையும் தாங்குகிறதுமான மாயைக்குமேல் பற்றுக்கோடில்லாதவரும், தமக்கோர் ஆதாரமில்லாதவரும், பிறப்பிறப்பு என்னும் நோய் இல்லாதவரும், சிந்தனைக்கு அதீதமானவரும், எங்கும் நிறைந்தவரும், விருப்பு வெறுப்பு என்னும் விகாரம் இல்லாதவரும், தோற்றமும் முடிவும இலலாத வருமாகிய சிவபெருமான் விளங்கிறார்'' என்று குறிக்கப் பட்டுள்ளதுகாண்க. 147

---

*இது பிந்துவின் அவத்தையாகும் சூக்குமையே மாயை என்றும் சொல்லப்படுகிறது.

†இங்கு உபலட்சணமாகப் போகத்தையும் கொளல் வேண்டும். அஃதாவது பரம்பரையாகப் போகமோக்ஷங் களுக்கு உபகாரம் செய்கின்றது என்று பொருள் கொள்க.

तदुक्तं रत्नत्रये—

"मन्त्रयोनिर्महामाया या परिग्रहवार्तिनी" इति ।

यथा सर्वज्ञानोत्तरवृत्तौ— अत्र कुण्डलिनी शब्दवाच्या तु भुजङ्गकुटिलाकारेण नादात्मना स्वकार्येण प्रतिपुरुषं भेदेनावस्थिता, नतु स्वरूपेण प्रतिपुरुषं न (पम) [व]स्थितेत्यर्थइति । त्रयोदशशक्तिकायाम् – "भुजङ्गकुटिलाकारे"ति । तस्याः-महामयायाः, [कार्यं]- कार्यभूतं नादबिन्द्वादिकं, नादश्च बिन्दुश्च

---

இவ்வாறு குண்டலினிசக்தி ஸமவாயசக்திக்குக் கீழே இருந்து கொண்டு மாயைக்கும் கன்மத்துக்கும் அனுகூலமானது. அஃதாவது நிவிருத்தி முதலிய கலைரூபமாக மாயா காரியமாகிய பிருதிவி முதலிய தத்துவங்களுக்கு ஆதாரமாக இருப்பது. அந்தப் பிருதிவி முதலிய தத்துவங்களில் வசிக்கின்றவர்களின் கன்மாவிற்கேற்ப வாக்குக் சக்தி ரூபமாக இருப்பது என்பது பொருள்; அல்லது அசுத்தமாயையைக் கலக்கும் அனந்தேசப் பெருமானின் தனுகரணங்களுக்கு முதற்காரணமாயிருத்தலால் அந்தக் குண்டலினி மாயைக்கு அனுகூலமாயிற்று என்பதும் அறியத்தக்கது. கன்மத்தை முதற்காரணமாகக் கொண்டு உண்டான நான் சுகமுடையவன் துக்கமுடையவன் என்ற ஞானத்தோடு கூடிய சப்தத்தை உண்டு பண்ணுவதால் கர்மானுகூலத்வமும் அதற்கு உண்டு என்று அறிக. குண்டலினி என்னும் பெயருடைய சக்தி சிவபெருமானுக்குப் பரிக்கிரஹ சக்தியாகும்.

இரத்தினத்திரயம்

" வாசக மந்திரங்களுக்கு முதற் காரணமான எந்த மஹாமாயை உண்டோ, அம்மாயை சிவபெருமானுக்குப் பரிக்கிரஹ சக்தியாகும்" என்று கூறுகின்றது காண்க.

---

नादबिन्दू, तौ आदिर्यस्य तन्नादबिन्द्वादिकं जगत्-प्रपञ्च[ः] शुद्धाध्वा, इति -इत्थं, स्थितिः- सिद्धान्तः । अत्र चादिशब्देन †ना(सा)दाख्येश्वरविद्यान्ततत्वानां नादादिपञ्च तत्ववर्तिभुवन-तनु करणादीनां कामिकादीनां तन्त्रणां च ग्रहणम् । अथवादि-शब्देन शुद्धेतराण्यपि तत्वानि गृह्यन्ते, कुण्डलिन्याः साक्षात् परम्परया च सकलप्रपञ्चकारणत्वात् ।

यथा चाहुः कालोत्तरे—

पञ्चत्रिंशतितत्वानि शिवतत्वाद्विनिर्गता‡ ।
तत्रैवा (व) *स्थिति§बुद्धिश्च(वृद्धीच)तत्रैवच लयं(यो)भवेत् ॥
148

---

ஸர்வஞானோத்தர விருத்தி

"குண்டலினி என்ற சொல்லால் குறிப்பிட்ட பாம்பைப் போல் வளைந்துள்ள சுத்தமாயை தன் காரியமான நாதத்தால் ஒவ்வோர் உயிரினிடத்தும் வேறு பட்டிருக்கிறது; தானே ஒவ்வோர் உயிரினிடத்தும் இருப்பது என்பது பொருளன்று" என்கின்றது. திரயோதச சக்திகா என்ற நூலில் அது "பாம்பைப் போல்வளைவான ரூபமுடையது" என்றும் கூறப் பட்டுள்ளது.

அந்தச் சுத்தமாயையின் காரியம் நாதம் பிந்து இவைகளை முதலாக உடைய சுத்தப் பிரபஞ்சம் என்பது முடிந்த முடிவு. இங்கு ஆதி சப்தத்தால் சதாசிவ தத்துவம் ஈச்வரதத்துவம் வித்தியா தத்துவங்களும் கிரஹிக்கப்படுகின்றன. அந்த நாதம்முதலியஐந்துதத்து வங்களில் உள்ளவர்களின் தனுகரண புவன போகங் களும், காமிகம் முதலிய தந்திரங்களும் சுத்தமாயையின் காரியமாக ஏற்கத்தக்கன; அல்லது ஆதி சப்தத்தால் சுத்த தத்துவமன்றி ஏனைய தத்துவங்களும் கொள்ளப் படுகின்றன. குண்டலினி நேராகவும் பரம்பரையாகவும்

---

† (ख) नादा ‡ अत्र सुपः छान्दसमात्वम्, द्वासुपर्णेत्यादिवत्
* (ख) स्थितिश्च § (ख) वृद्धिश्च

अत्र शिवेन समवायिशक्त्या क्षुब्धायां(या) महामायाया सकाशान्नादाभिधानं तत्वं प्रथममुत्पद्यते। इदमेव शिवाधारकतया शिवतत्वमित्यपि च वदन्ति । ततः सकाशाद्बिन्दुसंज्ञकं तत्वमुत्पद्यते । इदं च तत्वं शक्त्याधारकतया शक्तितत्वम्। ततः शक्तितत्वात् सादाख्यं तत्वम् । ततः सादाख्यादीशाख्यं तत्वम् । ईशाख्याद् विद्याख्यं तत्वमिति क्रमेण शुद्धानि पञ्च तत्वानि जायन्ते । तत्रविद्यातत्वे विद्यातत्वाधिपतिश्च, भृगुण्यादयः सप्त विद्यागाङ्ग्यश्च,तदधीनाः सप्त कोटिमहामन्त्राश्च वाचक शब्दाः व्योमव्याप्यादयश्च वैखरिरजपा (र्यादयश्च) कामिकाद्यष्टाविंशतितन्त्राणि च वर्तन्ते ।

---

எல்லா உலகிற்கும் காரணமாக உள்ளது அன்றோ?
காலோத்தரம்

"சிவதத்துவத்தினின்று முப்பத்தைந்து தத்துவங்களும் தோன்றின. அவற்றின் இருப்பும் விருத்தியும் ஒடுக்கமும் இதிலேயே ஏற்படும்" என்று கூறுகின்றது.

148

இங்குச் சிவனோடு பிரிவறப் பொருந்தி நிற்கின்ற திருவருட் சக்தியினால் கலக்கப்பட்ட மஹாமாயையிலிருந்து நாதம் என்னும் தத்துவம் முதலில் தோன்றுகிறது. இந்தத் தத்துவம் சிவபெருமானால் அதிட்டிக்கப் பட்டிருத்தலால், இதைச் சிவதத்துவமென்றும் கூறுகின்றார்கள். சிவதத்துவத்தினின்று பிந்துதத்துவம் தோன்றும். இத்தத்துவம் சக்தியால் அதிட்டிக்கப்படுவதால் சக்திதத்துவம் எனவும் கூறப்படும். அந்தச்சக்தி தத்துவத்திலிருந்து ஸாதாக்யம் என்னும் தத்துவமும், அதனினின்று ஈச்வர தத்துவமும், அதனினின்று சுத்த வித்யா தத்துவமும் என முறையாக இச்சுத்த தத்துவங்கள் ஐந்தும் தோன்றுகின்றன.

அந்த ஐந்து தத்துவங்களுள் வித்யாதத்துவத்தில் வித்யா தத்துவாதிபதியும், ப்ருகுணீ முதலிய ஏழு வித்யேச்வரிகளும், அவர்களுக்கு அதீனமான

यथा मृगेन्द्रे —

भृगुणी ब्रह्मवेताल(ली) स्थाणुमत्याम्बिकापु(प)रा
रूपिणी नन्दिनी ज्वाला सप्त सप्ताप(बु) देश्वरा [:] इति

श्रीमतङ्गे—

प्रायोन्यो त (धान्येन) स्थिताद्ये (द्ये) ता विद्यामन्त्राश्चानु
वृता (श्च सुव्रत) ।
एकाशीतिपदा देवि(वी) या सा शक्ति[:] शिवात्मिका ॥
शान्ताद्रिनिर्गता पूर्वं स्थानं तस्यात(स्त) दात्मकम् ।
लये च शिवतत्त्वाख्यं व्यक्तौ बिन्द्वाह्वयं परम् ॥
भोगे सदाशिवस्थानमीश्वराख्यं च शासने ।

---

ஸப்தகோடி மஹா மந்திரர்களும், வாசகசப்தங்களான வ்யோமவியாபி மந்திரங்களும், வைகரி முதலிய ஒலிகளும், காமிகம் முதலிய சாஸ்திரங்களும் உள்ளன.

மிருகேந்திரம்

"ப்ருகுணீ, ப்ரம்மவேதாளி, ஸ்தாணுமதி, அம்பிகா, ருபிணி, நந்தினி, ஜ்வாலா இவர்கள் ஏழு கோடி மந்திரங்களுக்கு ஈச்வரி ஆவார்கள்" என்று கூறுகின்றது காண்க.

மதங்கம்

"சுத்தவித்யா தத்துவத்தில் சிவாகமங்களும் ப்ருகுணி முதலிய மந்திரேச்வரிகளும், சிவஸ்வரூபமான 81 பதமுடைய வியோமவ்யாபி பத லக்ஷணமான சக்தியும் இருக்கின்றனர். சக்திலய நிலையில் சிவதத்துவம் என்பது பெயர். இறைவனது கிரியாசக்திவெளிப்பட்டுச் சங்கல்பித்தவழிச்சுத்தமாயை காரியப்படும் நிலை பிந்துதத்துவம் என்றும் பெயர்

विद्यातत्त्वेऽधिकारं (रः) स्याद् योनिर्ज्ञेयास्स(स)दैवहि ॥
तस्यामेव स्थिता मन्त्रा विद्याश्च विविधा मुने ॥
इयं तावन्महाशक्तिः शिवस्य परमात्मनः ॥ इति । 149

अत्र लयभोगाधिकारप्रदस्य शिवस्य आत्मनां भौवनशरीरप(प्र)दस्यापि व्योमव्याप्यक्षरसमूहस्याभिव्यक्तिस्थान--शरीरतया लयभोगाधिकारसम्बन्ध उक्तः । न तु स्वाभाविकः, *माधिकारणनाशाकारकोशावशानायानामक्षराणामिवाचेतनत्वेन तद्योगात् ? तस्मादस्या विद्यातत्त्व एवाक्षरयोनौ मुख्य सम्बन्ध इति । ईश्वरतत्त्वेऽनन्तादयोऽष्टौ विद्येशा तदधिष्ठात्र्यस्त्वष्टौ वामादिशक्तयः, तद्विलासिन्यः शक्तयोऽष्टौ भानुमत्यादयः, उ[च्छुष्मा]दयश्च पञ्चरुद्रादयः, सिद्धान्त-

---

பெறும். போகநிலையில் சதாசிவ தத்துவமென்றும், சூக்கும அதிகாரநிலையில் ஈச்வர தத்துவமென்றும், ஸ்தூல அதிகாரநிலையில் சுத்த வித்தியாதத்துவம் என்றும் பெயர் பெறும். இவைகளுக்கெல்லாம் சுத்த மாயை காரணமாகும். அதில்தான் எல்லாச் சாத்திரங்களும் மந்திரங்களும் இருக்கின்றன. இந்தச் சுத்த மாயை சிவபெருமானுக்குப் பரிக்கிரஹசக்தியாகும்'' என்று கூறுகின்றது. 149

இங்குச் சுத்தான்மாக்களுக்கு லயபோகாதிகாரங்களை அருளுகின்றவரும் தனுகரணங்களை அளிக்கின்ற வருமான சிவபெருமானுக்கு வியோமவியாபி அக்ஷர சமூகங்கள் வெளிப்படுவதற்குத் தகுந்த சரீரம் இயிருப்பதால் அவருக்கும் லயபோக அதிகாரம் என்னும் அவத்தைகளோடு சம்பந்தம் கூறப்பட்டது. இஃது உபசாரமே.

---

* இதற்குப்பொருள் விளங்கவில்லை.

शास्त्रे प्रपूजिताः नन्द्याद्यष्टौ गणेश्वराः, इन्द्रादयो लोकपालास्तेषामायुधानिच शिवासनभूता धर्मादयोऽष्टौ च स्थिताः ।

तथा मृगेन्द्रे—

उच्छिष्टा (च्छुष्मा)*श्शावराश्चण्डमहावीर्याः पदद्रुहः ।
रुद्र(द्रा) गणाः सदिक्पालाः शास्त्राणि पतयस्ततः ।। इति

श्रीमतङ्गे—

विद्या भानुमतीनां (नाम) भानुरप्रतिमातु सा ।
ततोऽन्यापि महाभागा रौद्री रौद्रेण कर्मणा ।।
विश्वा च काली कापाली विद्यान्यापि महोदया ।
सुखोदयान्या विख्याता तथा वज्रीति कीर्तिदा ।।
अष्टावेता यशस्विन्यो विद्येशानां महात्मनाम् ।
क्रीडनार्थं विलासिन्य[ः]पशूनां पाशमोचिकाः ।। इति । 150

---

அக்ஷரங்களுக்குக் காரணமான வித்தியா தத்துவத்தில்தான் இச்சுத்தமாயைக்கு முக்கிய சம்பந்தமுள்ளது. ஈச்வர தத்துவத்தில் அனந்தேசப்பெருமான் முதலிய எட்டு வித்தியேச்வரர்களும், அவர்களை அதிட்டித்து நிற்கின்ற வாமை முதலான எட்டுச் சக்திகளும், அவர்களின் விலாஸிநிகளாகிய பானுமதி முதலிய எட்டுச் சக்திகளும், உச்சுஷ்மர் முதலிய ஐந்து உருத்திரர்களும், நந்தி முதலிய எட்டுக் கணேச்வரர்களும், இந்திரன் முதலிய உலோகபாலகர்களும் அவர்களின் ஆயுதங்களும், சிவபெருமானுக்கு ஆஸனமாகிய தர்ம ஞானம் முதலிய எண்மர்களும் உள்ளனர்.

மிருகேந்திரம்

"ஈசுவர தத்துவத்தில் உச்சுஷ்மர், சாபரர், சண்டர், மஹாவீர்யர், பதத்ருக் முதலிய உருத்திரர்

---

* (ख) शाम्बरा

सदाशिवतत्वे तु तदधिकारावस्थः सदाशिवः, प्रणवाद्या ‡दशाणु †सदाशिवाश्च, पञ्चब्रह्म षडङ्गानिच, अक्षर बिन्दुस्थूल-ध्वनिरूपनादश्च वर्तते (न्ते) ।

तदुक्तं स्वच्छन्दे—

ओङ्कारेशः शिवो दीप्तः कारणेशोदशेशकाः ।
सुशिवश्चैव कालश्च सूक्ष्मरूपें ऽशुतेजसः ॥ इति ।

श्रीमतङ्गे—

ब्रह्माण्यङ्गानि यानि स्युस्तानि ना (सा)दाख्यगोचरे ।
नादो बिन्दुः सकलं ना(सा)दाख्यं तत्वमाश्रु(श्रि)तौ कथितौ ॥

एतत्सदाशिवतत्वं प्राप्ताः सर्वेऽपि तत्समा भवन्ति ।

களும் கணதேவதைகளும் சாஸ்திரங்களும் அனந் தேசப்பெருமான் முதலிய அஷ்ட வித்யேச்வரர்களும் இருக்கின்றார்கள்" என்று எடுத்துரைக்கின்றது.

மதங்கத்தில்

"பானுமதி, ரௌத்திரி, விச்வா, காளி கபாலி முதலிய எட்டு விலாஸினிகள் இவர்கள் உயிர்களின் பாசத்தைப் போக்குகின்றவர்கள். இவர்கள் விளை யாட்டுக்காக உள்ள தோழிகள்," என்று கூறப்படுவது காண்க. 150

சதாசிவ தத்துவத்தில் அதிகாரர்வஸ்தையில் உள்ள ஸ்ரீ சதாசிவப்பெருமானும், பிரணவர் முதலிய அணுசதாசிவர் பதின்மரும், பஞ்ச பிரம்ம மந்திரங் களும், ஷடங்க மந்திரங்களும், அக்ஷரரூபமான பிந்து வும் ஸ்தூல நாதமும் இருக்கின்றனர்.

ஸ்வச்சந்தம்

ஓங்காரேசர் (பிரணவர்), சிவன், தீப்தர், காரணர், ஈசர் தசேசர், ஸுசிவர், காலர், சூக்ஷமர், அம்சு என்று மேற்கூறிய பதின்மரைக் குறிக்கின்றது.

‡ (ख) आवणः † (ख) सदाशिवश्च

तथा मतङ्गे—

मेरुपृष्ठं यदा(था) प्राप्तास्तृणलोष्टादयो भृशम् ।
प्राप्नुवन्ति सुवर्णत्वं तत्वे (द्व)ना(त्सा)दाशिवे पदे ॥ इति
151

बिन्दुतत्वे तु भुवनरूपान्नि (पो नि) वृत्तिमदादि संज्ञ[:] सद्योजातादि संज्ञः सकलनिष्कलाख्यः शिवश्चाक्षरबिन्दुहेतु-स्वरूप सूक्ष्मनादश्च वर्तते ।

मृगेन्द्रे —

बिन्दो (न्दौ) निवृत्यादिकलेश्वराः । इति ।

---

மதங்கத்தில்

பிரம்ம மந்திரங்களும் அங்க மந்திரங்களும் சதா சிவ தத்துவத்தில் இடம் பெறுகின்றன. அவ்விதமே *ஸ்தூலநாதமும் கலைகளோடு கூடிய அக்ஷரரூபமான பிந்துவும் சதாசிவ தத்துவத்தில் இடம் பெறுகின்றன.

இந்தச் சதாசிவ தத்துவத்தில் உள்ளவர் யாவரும் சதாசிவப் பெருமானுக்கு ஒப்பானவர்கள் ஆவர்.

மதங்கத்தில்

"மேருவில் இருக்கின்ற புல் கல் முதலியவை எவ் விதம் சுவர்ணத்தன்மையை அடைகின்றனவோ, அவ் விதமே சதாசிவ தத்துவத்தில் உள்ளவர்களும் சதா சிவ ஸாம்யத்தை அடைகின்றார்கள்" என்று மேலே கூறியதற்குப் பிரமாணம் காண்க. 151

பிந்து தத்துவத்தில் புவனரூபமான நிவிருத்தி முதலிய பெயர்களைக்கொண்ட கலைகளும் அக் கலை களுக்கு அதிபதியான நிவிருத்திமான் முதலிய நால்வர் களும் இருக்கின்றார்கள். ஸத்யோஜாதம் முதலிய

---

* பரபிந்து சிவதத்துவரூபமானதால் அதன் காரியமான சூக்ஷ்ம நாதம் சக்தி தததுவத்தில் அடங்குவதால், இங்குக் கூறிய பிந்துவும் நாதமும் அக்ஷரரூபமான பிந்துவையும் ஸ்தூல நாதத் தையும் குறிக்கின்றன என்றறிக.

तत्वप्रकाश वृत्तौ—

"सूक्ष्मनादस्य शक्तितत्वान्तर्भवत्वेन चोक्तत्वादि"ति वाक्येन सूक्ष्मनादस्य बिन्दुतत्वावस्थानं प्रकटितम् । सर्वा[त्म] शम्भुकृतसिद्धान्तदीपिकायामयमर्थः[प्रपञ्चितः] 152

नादतत्वे तु ध्वनिपतिरिन्धिकावान् दीपिका[वा]न् रोचिकावानित्यादि भुवनपतिसंज्ञः शिवो वर्तते । चिच्छक्तौ शक्तिमद्वरिष्ठः परमेश्वरः सकलजगत्परमकारणं कुण्डलिनि(नी)च वागीशां (शाः) पतयश्च । तदूर्ध्वं केवलः परः शिव इति ।

---

பெயர்களைக்கொண்ட ஸகள நிஷ்களஸ்வரூபமான சிவபெருமானும் அக்ஷரரூபமான பிந்துவிற்குக் காரணமான ஸூக்ஷ்ம நாதமும் இருக்கின்றனர்.

மிருகேந்திரத்தில்

"பிந்து தத்துவத்தில் நிவிருத்தி முதலான நான்கு கலைகளுக்கும் அதிபதிகளிருக்கின்றார்கள்" என்று கூறப்படுவது காண்க.

தத்துவப் பிரகாச விருத்தியில், சூக்ஷ்மநாதம் சக்தி தத்துவத்தில் அடங்கியிருப்பதாகக் கூறப்பட்ட வாக்கியமே பிந்து தத்துவத்தில் சூக்ஷ்மநாதம் அடங்கியுள்ளது என்ற மேற்கூறிய வாக்கியத்திற்குப் பிரமாணமாகும். ஸர்வாத்மசம்பு இயற்றிய சித்தாந்த தீபிகையிலும் இவ்வாறே கூறப்பட்டுள்ளது. 152.

நாதபுவனத்தில் சிவபெருமான் த்வனிபதி (நாதேச்வரர்) ஆவார். அவர் இந்திகா தீபிகா ரோசிகா என்னும் சக்திகளோடு கூடியிருப்பதால் இந்திகாதிபதி, தீபிகாதிபதி, ரோசிகாதிபதி என்னும்

तदुक्तं मृगेन्द्रे—

नादे ध्वनिपतिः शक्तौ सर्वशक्तिमतां वरः ।
योनिर्विश्वस्य वागीशाः पतयः परतः शिवः ॥ इति ।

श्रीमत्स्वतन्त्रे—

तत्र कुण्डलिनी शक्तिर्मायाकर्मानुसारिणी ।
भुवनाधिपतीनां च हेतुस्तद्वासिनां प्रिये ॥
तदितितु (दतीतं) वरारोहे परं तत्वं निरामयम् इति ।

---

பெயருடையவராகவும் விளங்குகிருர். சக்தி தத்துவத்தில் எல்லாச் சக்திகளோடும் கூடியவர்களுக்குத் தலைவரான ஸ்ரீபரமேச்வரன் விளங்குகின்ருர்; எல்லா உலகங்களுக்கும் மூலகாரணமாகவுள்ள குண்டலினி சக்தியும் புவனேச்வரர்களாயிருக்கின்ற வாகீசர்களும் இருக்கின்ருர்கள்; அதற்குமேல் நிஷ்களமான பரமசிவம் பிரகாசித்துக்கொண்டிருக்கிறது என்பது அறியத்தக்கது.

மிருகேந்திரம்

"நாத தத்துவத்தில் த்வனிபதி இருக்கின்ருர்; சக்தி தத்துவத்தில் பரமேச்வர் இருக்கின்ருர்; அங்கேயே நாத, பிந்துக்கிரமமாக எல்லா உலக உற்பத்திக்கும் காரணமான குண்டலினீ சக்தியும் புவனேச்வரர்களான *வாகீசர்களும் இருக்கின்றனர்" என்று கூறுவது காண்க.

ஸ்ரீமத் ஸ்வதந்திரம்

"அச்சக்தி தத்துவத்தில் மாயைக்கும், கன்மத்திற்கும் அனுகூலமான குண்டலினி சக்தி புவனேச்வரர்களுக்கும் புவனங்களில் உள்ள உயிர்களுக்கும் மூலகாரணமாக உள்ளது. அதற்குமேல் அழிவற்றதான பரம்தத்துவம் (சிவதத்துவம்) உள்ளது" என்று சொல்லுகின்றது.

---

* நாதம் பிந்து முதலாகச் சப்தங்களை உண்டுபண்ணிய சிவ பெருமானே காரியபேதத்தால் இங்கு வாகீசர்கள் என்று உபசாரமாகக் குறிப்பிடப்படுகிருர் என்று அறிக.

सुप्रभेदे च—

"तदूर्ध्वे बिन्दुतत्त्वं तु तदूर्ध्वे नादमेव तु ।
तदूर्ध्वे शक्तितत्त्वं हि तत्त्वं तत्त्वे तदूर्ध्वतः ॥
अतो(थो)र्ध्वे शिवतत्त्वं स्यात् सर्वतत्त्वोपरिस्थितम् ।
शिवाद्यवनिपर्यन्तं व्यापकं तेन तेजसा ॥" इति ।

इदं नादतत्त्वमेव परमकारण (णं) नित्यम् । तदेव महा[मा]येति केचिदाचार्या वदन्ति । तेषां पक्षे चत्वार्येव कार्याणि शुद्धतत्त्वानि ।

यथा

शुद्धानि पञ्चतत्त्वान्याद्यन्तेषु स्मरन्ति शिवतत्त्वम् ।
शक्तिसदाशिवतत्त्वे ईश्वरविद्याख्यतत्त्वे च ॥

अस्य व्याख्या—तेषु मध्याच्छिवतत्त्वं बिन्द्वात्मकमाद्यं

---

சுப்ரபேதம்

''அதற்குமேல் (சாதாக்ய தத்துவத்திற்கு மேல்) பிந்து தத்துவமும், அதற்குமேல் நாத தத்துவமும், அதற்குமேல் சக்தி தத்துவமும், அதற்குமேல் சிவ தத்துவமும் இருக்கின்றன; சிவதத்துவமானது தன் ஆற்றலால் மண்ணுலகம் வரை வியாபித்து உள்ளது'' என்றும் விளக்குகின்றது.

நாத தத்துவமே எல்லாவற்றிற்கும் பரமகாரண மாக உள்ளது; நித்தியமானது. இத் தத்துவத்தையே மஹாமாயை என்று சில ஆச்சாரிய புருஷர்கள் சொல் லுகின்றார்கள். அவர்களின் மதப்படிமற்ற நான்கு சுத்த தத்துவங்களும் அதன்காரியங்கள் ஆகும்.

எவ்வாறெனில், "சிவதத்துவம் சக்தி தத்துவம் சதாசிவ தத்துவம் ஈச்வர தத்துவம் வித்தியா தத்துவம்

प्रधानमुपादानं स्मरन्ति पूर्वाचार्याः । परमोपादानत्वेनैव चास्या मायावन्नित्यत्वं सिद्धम् । अतश्चान्यानि चत्वारि तत्वानि तत्कार्याणीतिभावः । इति

श्रीमत्पौष्करे—

नाद (दा) भिधानं शिवतत्वमपि कार्यमेव, किन्तु तत्र शक्तितत्वान्तर्भावेन चत्वार्येव कार्याणि शुद्धानीत्युक्तम् ।

तद्यथा—

वृत्तिस्तत्वात्मिका चास्य चतुर्धा संव्यवस्थिता ।
शिवतत्वं सदेशाख्यमैशं विद्याह्वयं तथा ॥
शुद्धान्येतानि तत्वानि रुद्राणूनां महात्मनाम् । इति ।

---

என்று சுத்த *தத்துவங்கள் ஐந்தாகும். அவற்றுள் சிவதத்துவம் முதற்காரணமானது; மற்ற நான்கு தத்துவங்களையும் சிவதத்துவமாகச் சொல்லுகிறார்கள்'' என்று சாத்திரம் கூறுகின்றது.

இதன் விரிவுரையாவது:

ஐந்து சுத்ததத்துவங்களுள் சிவதத்துவத்தையே ஆகமவல்லுநர்களாகிய பூர்வாச்சாரிய புருஷர்கள் உபாதான காரணமாகச் சொல்லுகின்றார்கள். மேலான உபாதான காரணமாக இருப்பதாலேயே இதற்குச் சுத்தமாயை போலவே நித்தியமென்பது முடிந்த முடிவு என்பதாகும். ஆதலால் மற்ற தத்துவங்கள் நான்கும் அதன் காரியங்களாகும் என்பது.

பௌஷ்கரத்தில்

''நாத மென்று கூறப்படும் சிவதத்துவமும் பிந்துவின் காரியமே ஆயின், அது சக்தி தத்துவத்தில் அடக்கப்படுவதால் சுத்தமாயையின் காரியங்கள் நான்கே'' எனச் சொல்லப்பட்டுள்ளது.

---

* இவை சிவஸ்வரூபமாக இருத்தலால் சுத்த தத்துவங்கள் ஆகும்.

सर्वज्ञानोत्तरे तु —

शक्त्यभिधानं बिन्दुतत्वमेव परमकारणमित्युक्तम् ।

तद्यथा —

अतो (थो) र्ध्वं बैन्दवं तत्वं विमलं सर्वतोमुखम् ॥ इति ।

परमं सर्वतत्वानामनन्तज्योति रूपकम् ॥ इति । 153

अथ सूत्रान्तरेण चतस्रोऽपि वाग्वृत्तयो महामाया कार्याणीति शब्दसृष्टिमुद्दिशति

तस्याश्चतस्रो वाग्रूपा वृत्तयो वैखर्यादयः ।

वैखरी मध्यमा चान्या पश्यन्ती सूक्ष्मसंज्ञिता ॥ सू २६

---

அஃதாவது

பிந்துவிற்குத் தத்துவஸ்வரூபமான வியாபாரமும் *நான்கு என நன்கு பிரித்துக் கூறப்பட்டுள்ளது, சிவதத்துவமும் சதாசிவதத்துவமும் ஈச்வரதத்துவமும் வித்யா தத்துவமும் என இந்தச் சுத்த தத்துவங்கள் ஞானகிரியா சக்திகளை உடைய உருத்திரர்களுக்குப் புவனங்களாகும் என்று சேர்த்துக்கொள்க.

ஸர்வஞானோத்தரம் என்ற நூலிலோ சக்தி தத்துவ மெனப்படும பிந்து தத்துவமே எல்லா வற்றிற்கும் மேலான உபாதான காரணமெனச் சொல்லப்பட்டிருக்கிறது.

"மேலும் அது தூய்மை வாய்ந்தது; எல்லா ஆற்றலும் உடையது; எல்லை இல்லாத ஒளிமயமாக உள்ளது" என்று கூறுகின்றது. 153

---

* சிவதத்துவம் சக்திதத்துவம் இரண்டும் சிவபெருமான் ஒருவராலே அதிட்டிக்கப்பட்டிருத்தல் என்பதைவைத்து நான்கு விதம் எனக் கூறப்பட்டுள்ளமை அறிக

(பௌஷ்கர பாஷ்யம்)

वाग्रूपा वैखर्यादयश्चतस्रः तस्या महामाया[याः] वृत्तयः कार्याणि । चतसृणामपि क्रमेण नामान्याह – वैखरीत्यादि । एक (का) वृत्ति ना (ना) म्ना वैखरीत्युच्यते । अन्या वृत्ति ना(ना)म्ना मध्यमा । अपरा नाम्ना पश्यन्ति (न्ती) अपरा सूक्ष्म संज्ञिता । एतासां स्वरूपमुत्तरत्र सङ्ग्रहकारः स्वयमेव वक्ष्यति । अनेन शब्दसृष्टिरपि बिन्दूपादानेत्युक्ता भवति ।

अत्रायं सृष्टिक्रमः- शिवेच्छया प्रथमं क्षुब्धाया महामायायाः सकाशान्नाद उत्पद्यते नादाद्बिन्दुः । बिन्दोरक्षरम् । अक्षरान्मातृकेति ।

---

மேலும் வேறு சூத்திரத்தால் நான்குவிதமான வாக்குகளும் மஹாமாயையின் காரியமென்று சொற்பிர பஞ்சத்தின் தோற்றத்தைப் பெயருடன் கூறத் தொடங்கு கின்றார்;

தஸ்யாஸ் சதஸ்ரோ வாக்ருபா விருத்தயோ வைகர்யாதய: ।
வைகரீ மத்யமா சாந்யா பச்யந்தீ ஸூக்ஷ்ம ஸம்ஜ்ஞிதா ॥

வைகரி முதலிய வாக்குகள் அம்மஹாமாயையின் காரியங்களாகும். அந்தநான்குவிதமான வாக்கு களுக்கும் பெயர்களை வரிசையாகக் கூறுகின்றார், வைகரி முதலியவை என்று.

ஒன்று பெயரினால் வைகரி என்றும், மற்றொன்று மத்திமை என்றும், வேறொன்று பச்யந்தி என்றும், பிறிதொன்று சூக்குமை என்றும் சொல்லப்படுகின்றன. இவற்றின் இலக்கணத்தை இந்நூலாசிரியர் பின்னர்க் கூறுவர். இதனால் சொற்பிரபஞ்சத்தின் தோற்றமும் மஹாமாயையை முதற்காரணமாகக் கொண்டது என்று சொல்லப்பட்டதாகிறது.

---

கு [வந்தி வைகரி மத்திமை யோடுபை
சந்தி சூக்குமை தானெனப் பட்டிடு
நந்து வாக்கொரு நான்கு நவிலிலவ்
விந்து மாயை விருத்தியென் றோதுவார்]
(சதமணிமாலை)

तथा पराख्ये —

बिन्दुः क्षुब्धस्तदिच्छातः शब्दराशिरभूत्तदा । इति ।

मृगेन्द्रे—

शक्तेर्नादो भवे(व) द्बिन्दुरक्षरं मात(तृ)का [ततः] इति ।
आकाशवायुप्रभवः शरीरात् समुच्चरन् वक्त्रमुपैति नादः ।
स्थानान्तरेषु प्रविभज्यमानो वर्णत्वमागच्छति यः स
शब्दः ॥ इति ।

स्वायंभुवे —

नवपर्वशताधात्मा† योनि बी (बीं) जात्मकः परः ।
अकारादि विसर्गान्तं बीजं तत् षोडशाक्षरम् ॥
शेषा योनिश्चतुस्त्रिंशदन्यया ह्यक्षरात्मिका ।
सा शक्तिर्देवदेवस्य तया व्याप्तमिदं जगत् ॥ इति । 154

---

தோற்றமுறை இவ்வாறு

சிவபெருமானுடைய சங்கற்பத்தால் கலக்கப் பெற்ற மஹாமாயையினின்று நாதம் தோன்றிற்று; அதனினின்று *பிந்துவும், பிந்துவினின்று பிரணவமான அக்கரமும், அதனினின்று ‡மாத்ருகையும் தோன்றின என்பதாம்.

பராக்கியத்தில்

சிவபெருமானின் சங்கற்பத்தால் கலக்கப்பட்ட பிந்துவிலிருந்து சொற்கூட்டம் தோன்றின என்று கூறப்பட்டுள்ளது.

மிருகேந்திரம்

"மஹாமாயையினின்று நாதமும், அதனினின்று பிந்துவும், அதனினின்று அழிவு முதலிய குற்றமில்லாத ஓங்காரமும், அதனினின்று மாதா போல் உள்ள காயத்ரியும் உண்டாயின" என்று கூறுகின்றது காண்க.

---

† (ख) शतार्धात्मा

* இஃது அபரபிந்துவாகும்.  ‡ உயிரும் மெய்யுமாகிய எழுத்துக்கள்.

आसां चतसृणामपि वृत्तीनामाश्रयभूता निवृत्त्यादयः, कलाः पञ्च च बिन्दोरेव कार्याणि ।

तथोक्तं रत्नत्रये—

‡सैषा चतुर्विधा वृत्ति नि (र्नि) वृत्त्यादि कलाश्रयात् ।
पञ्चधा भिद्यते भूयः कलास्ता बिन्दुवृत्तयः ॥ इति ।

मूल तन्त्रेऽपि —

पूर्वोक्त बिन्दुमध्यस्था [:] कलाः पञ्च समुद्भवाः । इति

इयं महामाया शब्दवस्तूभयात्मिका भवति; सूक्ष्मादीनां, शब्दानां, वर्णपदमन्त्रात्मकानां च वस्तूनां चोत्पादनात् ।

---

"ஆகாசம், காற்று இவற்ருல் தோற்றத்தை அடைந்து சரீரத்தினின்று வெளிவரும் நாதமானது முகத்தை அடைகிறது. அக்காற்று வெவ்வேறு இடத்தைச் சென்று பொருந்துவதால் எழுத்தாம் தன்மை யெய்திச் சொல்லாகிறது" என்று சாத்திரம் சொல்லுகின்றது கண்டுகொள்க.

ஸ்வாயம்புவம்

"உலக பீஜமாகிய பரபிந்து ஒன்பது பருவாக்களை உடையதும் ஐம்பது எண்ணிக்கையுள்ளதுமான எழுத்துக்களுக்குக் காரணமாயுடையது; அஃதாவது அகரம் முதல் விஸர்க்கம் முடிய உள்ள பதினறு பீஜாக்ஷரங்களுக்கும் மெய்யெழுத்துக்கள் முப்பத்து நான்கிற்கும் முக்கிய காரணமாக உள்ளது. பரமேச்வரனுடைய அச்சக்தியானது அக்ஷரஸ்வரூபமாகவும் அழிவற்றதாகவும் இருக்கிறது. அச்சக்தியால் உலகம் வியாபிக்கப்பட்டுள்ளது" என்று கூறுகின்றது. 154

---

‡ (ख) "शब्दात्मिका बिन्दुवृत्तिर्निवृत्त्यादिकलश्रयाणां आत्मनां तारतम्येन पञ्चधा ज्ञानाद्युपकारिकेत्यर्थः ।" (रत्नत्रयोल्लेखिनी)

तथा पौष्करे—

"‡शब्दवस्तूभयात्मासौ बिन्दुर्नान्यतरात्मकः । इति" ।

"मन्त्राध्वा च पदाध्वा च वर्णाध्वा चेति शब्दतः ॥
भुवनाध्वा च तत्वाध्वा कलाध्वा चार्थतः क्रमात् ॥ इति ।"
155

---

இந்த வைகரி முதலிய நான்கு விருத்திகளுக்கும் ஆதாரமாக உள்ளவை நிவிருத்தி முதலிய கலைகளாகும். அவ்வைந்து கலைகளும் சுத்தமாயையின் காரியங்களே ஆகும்.

அவ்வாறே இரத்தினத்ரயத்தில்

"வைகரி முதலிய நான்கு விதமான வாக்குகளும் நிவிருத்தி முதலிய ஐந்துகலைகளையும் ஆச்ரயித்திருப்பதால் மறுபடியும்* ஐந்துவிதமாகப் பிரிக்கப்படுகின்றன; அந்தக் கலைகள் பிந்துவின் காரியங்களாகின்றன" எனக் கூறப்பட்டுள்ளது.

மூலதந்திரம்

"சுத்தமாயையினின்றே ஐந்துகலைகளும் தோன்றுகின்றன" என்று சொல்லுகின்றது.

இம் மஹாமாயை, சூக்குமை முதலிய சப்தங்களையும் வர்ணபத மந்திராத்மகமான பொருள்களையும் தோற்றுவிப்பதால் சப்தரூபமாகவும் அர்த்தரூபமாகவும் ஆகிறது.

பௌஷ்கரம்

இச்சுத்தமாயை சப்தம், அர்த்தம் என இரண்டு

---

‡ (ख) उभयात्मानौ

* நான்கு வாக்குகள் என்னும் பிந்துவின் காரியங்களும் நிவிருத்தி முதலிய கலைகளிலிருக்கும் ஆன்மாக்களுடைய தாரதம்மியத்திற்குத் தகுந்தபடி ஐந்துவிதமாக ஞானத்தை விளக்குகின்றன என்பது பொருள்.

अत्र शब्द ब्रह्मवादिनः आत्मन एव नादादिक्रमेणावस्थान-
मिति वदन्ति । तदयुक्तम् । अविकारिणस्तस्य नादाद्याकारेण
परिणामानुपपत्तेः । नापि तच्छक्तेः, तस्या अपि परिणामा-
योगात् । द्वयोरपि *विकाराभ्युपगमे अचेतनत्वप्रसङ्गात् ।
अस्मात् शब्दोपादानत्वं बिन्दु (न्दो)रेवाभ्युपगन्तव्यम् इति-
तथा नादकारिकासु—

अविकार्यत्रात्मोक्तस्तच्छक्तिश्चाप्यतो न योग्यौ तौ ।
बहुधा स्थातुं यद्वा चैतन्यविनाकृतौ विकारित्वात् ॥ इति 156

---

ரூபமாகவும் இருக்கிறது; இரண்டில் *ஒன்றுதான் என்று சொல்லத்தக்கதன்று என்றும் கூறுகின்றது.

மந்திராத்துவா, பதாத்துவா, வர்ணாத்வா இவையெல்லாம் சப்தப்பிரபஞ்சமாகும்; புவனாத்துவா, தத்துவாத்துவா, கலாத்துவா இவையெல்லாம் அர்த்தப் பிரபஞ்சமாகும்'' என்றும் சாத்திரம் கூறுகின்றது காண்க. 155

இங்குச் சப்தபிரம்மவாதிகள் ஆன்மாவே நாதம் பிந்து முதலியவைகளாக இருக்கின்றது என்று சொல்லுவது நன்றன்று; விகாரமற்ற ஆன்மாவுக்கு

---

* (ख) विकारित्व

* ஒன்றான சுத்தமாயை இரண்டுக்கு உபாதானமாக இருக்க மாயின் ஒன்றுக்கு இரண்டு தன்மை என்ற விரோதம் ஏற்படும். ஆதலால் அர்த்தத்திற்கு உபாதானமாக மற்றொரு பிந்துவை ஏற்றுக்கொள்வதே நன்று எனக் கடாவியவழி, இஃது அதனை மறுத்துரைக்கின்றது என்று காண்க. வேறொரு தருமி கற்பனை செய்வதைக் காட்டிலும் இருக்கின்ற தருமியினிடத்தில் தருமம் கற்பிப்பதே எளிதாகும் மேலும் ஆகமங்களில் கூறப்படுகின்ற சுத்தமாயைக்கு விசித்திரமான காரியத்தைச் சாதிக்குந் தன்மையுண்மையால், அஃது இரண்டிற்கு உபாதானமாகி இருவிதத்தன்மையையும் எய்துகிறது என்று சொல்லுவதில் விரோதமேதுமில்லை என்று உணர்க இன்னும், சொல்லும் பொருளும பிரிந்திராததால் இருவிதத்தன்மை கூறுவதாலும் குற்றம் ஒன்றுமில்லை என்று உணர்த்தியவாறு அறிக. (பௌஷ்கரபாஷ்யம்)

एवं शुद्धमाया लक्षणं पाश्चं निरूप्य स्वायम्भुव सूत्रेण शुद्धमायालक्षणं निरूपयति—

मायातत्वं जगद्बीजमपि(वि)नाश्य शिवात्मकम्।

विह्वे(श्वे)कमकलं सूक्ष्ममनाद्यव्ययमीश्वरम्॥ सू २७

मात्यस्यां प्रलये सर्वजगत्, मयत्यस्मात्§ जगदितिवा माया। तथा पौष्करे—

"मयत्यस्माज्जगत्सर्वं तेन माया समीरिता"। इति।

मायारूपं तत्वं मायातत्वम्। इदमेव तत्वं ग्रन्थ्यादि-नामभिर्बहुभिर्गीयते। जगद्बीजम् - जगतः सर्वस्य *कालादे-र्बीजमुपादानकारणम्। अनेन विशेषणेन जगदिदं सोपादानं उत्पत्तिधर्मकत्वात्, यथा पटादिरिति मायासिद्धिरुक्ता।

---

நாதம் முதலியவைகளாகப் பரிணமம் ஏற்படுவது பொருத்தமற்றதாக முடியும் என்பது. அதன் சக்திக்குச் சொல்லுவதும் பொருந்தாது; அதனிடத்தும் பரிணமம் ஏற்படமுடியாமையால் என்க. இரண்டிற்கும் பரிணமத்தை ஒப்புக்கொள்வோமாயின், அசேதனத்தன்மை ஏற்படும்; ஆதலால் சொற்களுக்கு உபாதானமாக விருப்பது சுத்தமாயையே என்பது மறுக்கமுடியாது ஒப்புக்கொள்ளத்தக்கது.

அவ்வாறே நாதகாரிகை

"ஆன்மா விகாரமில்லாதவன் என்று சொல்லப் பட்டிருக்கிறது. அவனுடைய சக்தியும் விகார மில்லாதது. ஆதலால் அவ்விரண்டும் நாதம் முதலாகப் பரிணமம் அடைகின்றன என்பது பொருந்தாது. பொருந்துமெனின், அவைகளுக்கு விகாரத்தன்மை ஏற்பட்டு, அப்பொழுது ஆன்மாவினிடத்தில் சைதன்ய மென்பது இல்லாமற்போய்: சடத்தன்மை ஏற்பட்டு

---

§ (ख) अस्मात     * (ख) कलादेः

यथा मृगेन्द्रे—

कर्तानुमीयते येन जगद्धर्मेण हेतुना ।
कार्योपादानमप्यस्ति न पटस्तन्तुभिर्विना ॥ इति ।   157

---

விடும்'' என்று கூறுகிறது காண்க.   156

இவ்வாறு சுத்த மாயையாகிற பாசத்தை விளக்கிக் கூறிப் பின்னர், அசுத்தமாயையின் இலக்கணத்தை ஸ்வாயம்புவ சூத்திரத்தின் வாயிலாகக் கூறத்தொடங்குகின்றார்.

மாயாதத்துவம் ஜகத்பீஜம் அவிநாச்யசிவாத்மகம் ।
விப்வேகமகலம் ஸூக்ஷ்ம மநாத்யவ்யய மீச்வரம் ॥ சூ 27

பிரளயத்தில் சுத்தாத்துவாவில் உள்ள அணுக்களைத் தவிர, எல்லா உலகமும் எதனுள் ஒடுங்குகின்றனவோ, அது மாயை; அல்லது எல்லா உலகமும் எதனிடத்திருந்து மயங்குகின்றனவோ, அது மாயை என்று கூறப்படுகிறது.

பௌஷ்கரம்

சுத்தாத்துவாவில் உள்ள அணுக்களைத்தவிர, ஏனைய உலகம் எதனிடத்திருந்து மயங்குகிறதோ, அதுவே மாயை என்று சொல்லுகிறது காண்க.

மாயா ரூபமான தத்துவம் மாயாதத்துவம் என்க. இத்தத்துவமே பாசம் முதலிய பல பெயர்களால் அழைக்கப்படுகிறது.

जगद्बीजम् (ஜகத்பீஜம்) காலம் முதலிய தத்துவங்கள் யாவற்றிற்கும் முதற்காரணமாயுள்ளது.

"ஜகத்பீஜம்'' என்னும் இவ்வடைமொழியால் இவ்வுலகம் முதற்காரணத்தோடு கூடியது என்பது

---

* உலக வித்தவி நாசியொன் றுயுள
திலக லுற்ற விபுநுண் ணியதுதான்
கலைக டப்ப தநாதி கருதுறிற்
றெலைவ தற்ற சுதந்தரி குண்டலி. (சதமணிமாலை)

अविनाशि - ‡नित्यम् ॥ जगत्संहारे यद्युपादान-कारणस्य मायाख्यस्यापि विनाशः स्यात्, तत् पुनः सर्गादौ कस्मादुपादानाज्जगदुत्पद्यते§ । अतो नास्या अनित्यत्वम् ।

अथोच्येत — सर्गादौ उपादानमपि देव [ः] सृ (स्र)क्ष्यतीति । नैतद्युक्तम् । एवं सति तत्कार्यस्यै (स्येव) तस्याप्युपादानं विनानुत्पत्तेरुपादानान्तरं कल्प्यम् ।

---

பெறப்படும்; தோற்றத்தன்மை உடைமையால், ஆடை போல என்க. இதனுல் மாயையின் உண்மை கூறப் பட்டது.

மிருகேந்திரம்

உலகம், அவன், அவள், அது என்னும் அவயவப் பகுப்பு உள்ளதாய் காணப்படுவதால் காரியத்தன்மை உள்ளது என்னும் ஏதுவைக் கொண்டு உலகிற்குக் கருத்தா அனுமானத்தால் எவ்வாறு நிச்சயிக்கப் படுகிருரோ, அவ்வாறே அக்காரியத்தன்மை என்னும் ஏதுவைக் கொண்டே உலகிற்கு முதற்காரணமாக மாயையும் உண்டு என்று அனுமானம் செய்கிருேம்; எதுபோல எனில், நூல் ஆகிய முதற்காரணமின்றி ஆடையாகிய காரியம் தோன்ருதவாறு போல" எனக் கூறுவது காண்க. 157

*அவிநாசி (அவிநாசி) அம்மாயா தத்துவம் நித்திய *மானது.

உலகம் ஒடுங்குங்காலத்தில் முதற்காரணமான மாயைக்கும் ஒடுக்கம் ஏற்படுமாயின், ஒடுங்கிய அவ்வுலகம் மறுபடியும் படைப்புக் காலத்தில் எந்த முதற்காரணத்தினின்று தோன்ற இயலும் என்னும் ஆசங்கை நிகழுமாதலால், அதனை விலக்குவான்

---

‡ उत्पत्तिविनाशरहितमित्यर्थः । § (ख) उत्पद्येत

* உற்பத்தி நாசம் இல்லாதது என்பது பொருள். மஹாபிரளயத்திலும் ஆன்மாவைப் போலவும் ஈச்வரனைப் போலவும் இருக்கும் தன்மையால் என்க.

तस्याप्यन्यदित्यनवस्था स्यात् । व्युत्पत्ति (व्यक्त्युप) संहारेण शक्तिरूपतयावस्थाने न कश्चिद्दोषः ।

तदिदमुक्तम्--

"यद्यनित्यमिदं कार्यं कस्मादुत्पद्यते पुनः । इति । 158

अशिवात्मकम् — अशुद्धं, शिवात्मकं चेतनं

---

வேண்டி, மாயை அநித்தியமன்று; நித்திய மென்றார். மேலும், படைப்புக் காலத்தில் சிவபெருமானே முதற் காரணத்தையும் தோற்றுவிக்கின்றார்; என்றாலோ, அதுவும் ஏற்புடையதன்று; என்னையெனில், உலக மாகிய காரியத்தைப் போல முதற்காரணமும் மற்றோர் உபாதானமின்றி உண்டாகாமையால், வேறொரு முதற் காரணம் கூறும்படி நேரிடும்; அதற்கும் மற்றொன்று நேரிடும் என்ற முறையில் வரம்பின்றி ஓடல் என்னும் குற்றம் ஏற்படும் என்க. மேலும், தன் வியாபாரமான கலைகளை ஒடுக்கிக் கொண்டு முதற்காரணம் சக்தி ரூபமாக இருக்குமென்றாலோ, எவ்விதக் குற்றமும் இன்று என அறிக.

மிருகேந்திரம்

"பிரளயகாலத்தில் மாயை அழியும் என்றாலோ, காரியமாகிய உலகம் மீண்டும் எதனினின்று தோன்றக் கூடும்? அதனால் மாயை அநித்தியம அன்று; நித்திய மேயாம்" என்று கூறுகின்றது 158

अशिवात्मकम्* (அசிவாத்மகம்) சுத்தஸ்வரூபமில்லாதது; அஃதாவது சிவாத்மகம் சேதனமானது, அஃது அல்லாதது அசிவாத்மகமாகும். அசேதனமென்பது இதற்குப் பொருளாம். மாயையினின்று தோன்றும் கலாதிகளும் அசேதனமாகக் காணப்படுகின்றமையால் மாயையும் அசேதனம் ஆம். அசேதனமான காரியம் காணப்படும்பொழுது காரணத்திற்குச்

---

*மயக்கத்தை உண்டுபண்ணுவதால் அஃது அசிவாத்மகம் என்று கூறினார் நாராயணகண்டர்.

न भवतीत्याशिवात्मकम् । अचेतनमिति यावत् । अचेतनस्यैव तत्कार्यस्य कलादेरुपलम्भात् । [अ] चेतनकार्योपलम्भो (भे) ऽपि तत्कारणस्य चेतनत्वाभ्युपगमे कारणानियमलक्षणः सकलानुमानोच्छेदः सर्वव्यवहारलो [पो] पि दोष[ः] स्यात् तदुक्तम्—

तदचेतनमेव स्यात् कार्यस्याचित्वदर्शनात् ।
प्राप्तः सर्वहरो दोषः कारणानियमोऽन्यथा ॥ इति । 159

विभु- व्यापि । पुरुषस्यग भोगाय ‡तिर्यगूर्ध्वाधोमध्य स्थितसर्व(स्रो) तोभिः सर्वतोमुखतटा सर्वकार्योत्पादकत्वात् ;

---

சேதனத்தன்மை ஒப்புக்கொண்டால், காரிய காரண லக்ஷணங்களுக்குக் கட்டுப்பாடின்மை நிகழும்; நிகழவே, எல்லா அனுமானங்களுக்கும் அழிவு ஆகிய கொடிய குற்றம் ஏற்படும்; எல்லா வழக்குகளும் பழுதடையும் என்பது.

மிருகேந்திரம்

"மாயாதத்துவத்தின் காரியங்களெல்லாம் அசேதனமாகக் காணப்படுவதால் காரணமாகிய மாயாதத்துவமும் அசேதனமாகவே இருக்கவேண்டும்; அவ்வாறில்லாவிடில், †காரியகாரண நியமபங்கம் என்ற குற்றம் ஏற்படும்" என்று கூறுகின்றமை கண்டு கொள்க. 159

விபு (விபு) எங்கும் *வியாபித்தது. ஆன்மாக்களுக்குப் போகத்தின் பொருட்டுக் கீழ்மேல் குறுக்கு நடுவாக

---

‡ (ख) यस्थितस्रोतोभिः

† இத்தகைய காரணத்தினின்று இன்னதன்மையாகிய காரியம் தவருது தோன்றும் என்பது காரியகாரண நியமம்.

* கலை முதற்கொண்டு ப்ருதிவி வரை தன் காரியத்தால் வியாதிருப்பது என்பது பொருள்.

तदुक्तम्—

"अव्यापिचेत अने ! कतस्तस्यास् (कुतस्तत्स्यात्) सर्वेषां सर्वतोमुखम्" । इति । 160

एवम् (कम्) - पक्षे (क्ष) - तुण्डादि भेदानामपि भोगाधिष्ठानवत् कलादिकार्य भेदानामपि भोगाधिष्ठानतया भेदरहितम् । हीनत्वे (भिन्नत्वे) अनेकत्वे सत्यचेतनस्य घटपटादिवदुत्पत्तिमत्वप्रसङ्गात् । इदं तु नोत्पत्तिमत् नकारण जन्यम्, परमकारणत्वात् । न हि परमकारणानि बहूनि भवन्ति ।

यथा मृगेन्द्रे—

यदनेकमश्वि(चि)त् तत्तु दृष्टमुत्पत्तिधर्मकम् ।
न तदुत्पत्तिमत्तस्मादेकमभ्युपगम्यताम् ॥ इति । 161

ननु जगदुत्पत्तौ परपरिकल्पितपरमाण्वादिवदुपादान-

---

இருக்கும் சக்திரூபமான பிரவாஹங்களால் ஸர்வதோமுகமாக எல்லாக் காரியங்களையும் தோற்றுவிப்பதால் அஃது எங்கும் வியாபித்தது.

மிருகேந்திரம்

"மாயாதத்துவம் அவ்யாபகமாக இருக்குமாயின், காரியமாகிய எல்லா உலகங்களையும் ஸர்வதோமுகமாகத் தோற்றுவிக்குந்தன்மை உடையதாக எவ்வாறு இருக்கமுடியும்?" என்று கூறுவதைப் பிரமாணமாகக் கண்டுகொள்க. 160

एकम (ஏகம்) ஒன்று. இறக்கை அலகு முதலியவை வெவ்வேருக இருந்தாலும் அவை போகத்திற்கு இடமாக இருப்பது போல, கலை முதலிய காரியபேதங்களும் போகத்திற்கு இடமாக இருப்பதால் அதற்குக் காரணமான மாயாதததுவம் ஒன்றேயாகும்.

कारणबहुलत्वमस्तु; बहुभ्योऽपि तन्तुभ्यः पटस्यें(स्यै)कस्योत्पत्तिर्दृष्टि(ष्टे): । तद्वद् जगत्सर्वमनेकस्मात् कारणादुत्पा(त्प)द्यताम् किं ग्रन्थ्यात्मक परमकारणकल्पनयेति चेत् । न । यदनेकात्मकं कारणं पटस्योक्तं, तदनेकमप्येकस्माद्दुकूलकार्पासादिद्रव्यादुत्पन्नत्वादेकम् । यथा च एकस्माद्दुकूलकार्पासादिद्रव्यादनेकाकारपटाद्युत्पत्तिः, एवं परमकारणात् सर्गस्थितिलयाधारात् सर्गादौ मायातत्त्वाज्जगदुत्पत्तिरिति न कश्चिद्दोषः ।

तदुक्तम्—

पटस्तन्तुगुणाद्दृष्टः सर्वमेकमन्ने(ने)कतः ।
तदप्यनेकमेकस्मादेव बीजात्प्रजायते ॥ इति ।

---

அறிக. அது பலவாறாக இருக்குமாயின், அசேதனமாகிய மாயாதத்துவத்திற்குக் குடம் ஆடைபோலத் தோற்றத்தன்மை உடையதாக ஆகிவிடும். இம் மாயாதத்துவமோவென்றால் தோற்றமுடையதன்று; காரணத்தினின்று தோன்றியதன்று; அது பரமகாரணமாக இருப்பதால் என்க. பரம காரணம் பல ஆகமாட்டாது என்க.

மிருகேந்திரம்

“எது பலவாகவும் அசேதனமாகவும் உள்ளதோ, அது தோற்றத்தன்மையை உடையது. மாயைக்குத் தோற்றத்தன்மை இல்லாததால், மாயை ஒன்றெனவே ஒப்புக் கொள்ளத்தக்கது” என்று கூறுவது காண்க. [61

உலகம் தோன்றுங்கால் பிறரால் கூறப்படுகிற பரமாணு முதலியவைகளைப்போல முதற்காரணம் பல ஆகட்டும்; பல நூல்களாகிய முதற்காரணங்களினின்று ஓர் ஆடையாகிய காரியம் தோன்றுவதைக் காண்பது போல, உலகமனைத்தும் பல முதற்காரணத்தினின்று தோன்றட்டும்; மாயையைப் பரமகாரணமாகக் கூற வேண்டுவது என்னையெனில், அற்றன்று; ஆடைக்கு முதற்காரணமாகிய நூல்கள் பலவாகவிருந்தாலும், பட்டு பஞ்சு முதலிய மூலப்பொருளென்னும் வகையில்

एवमनेकत्वे सत्यचेतनानाम (नमाया) नित्यत्व प्रसङ्गेन परमकारणत्वभङ्गमजानानां परमाणुगणकारणत्ववादिनां वैशेषिकादीनां द्रव्यादिषट्पदार्थ षोडशपदार्थान्यतरज्ञानस्य निश्रेयस हेतुतावर्णनेन प्रकटित प्रबोधतैक्ष्ण्यानामप्युपेक्षणीय[त्व]म् ।

तदुक्तम्—

भूतावधि जगद्येषां कारणं परमाणवः ।
तेषां पूर्वोदिताद्धेतोः ज्ञाते(तै)व ज्ञानसूक्ष्मता ।। इति । 162

---

ஒரே இனத்தில் தோன்றினமையால் முதற்காரணம் ஒன்றேயாகுமென்க. எவ்வாறு ஒன்ருகிய பட்டு பஞ்சு முதலிய பொருளினின்று பலவகையான ஆடை தோன்றுகின்றதோ, அவ்வாறே படைப்புக் காலத்தில் பரம காரணமாகவுள்ளதும், தோற்றம் இருப்பு ஒடுக்கம் முதலியவற்றிற்கு ஆதாரமாகவுள்ளது மாகிய மாயா தத்துவத்திலிருந்து உலகம் தோன்றுகிறது என்பதில் குற்றம் ஒன்றுமில்லை.

மிருகேந்திரம்

"உபாதான காரணமான அநேக நூல்களால் ஓர் ஆடைதோன்றுதல் காணப்படுகிறது; அதுபோல, எல்லாக்காரியமும் பல உபாதானங்களினின்று உண்டாகின்றன ஆதலால் மாயை அநேகமேயாகும் என ஆசங்கை நிகழ, பலவான நூல்கள் ஒன்ருகிய பஞ்சு என்னும் முதற்காரணத்தினின்றே தோன்று கின்றன; அதுபோல, பலவகையான உலகத்திற்கும் முதற்காரணமாகிய மாயையும் ஒன்றேயாம்" என விடையளித்திருப்பதைக் கண்டு கொள்க

மாயைக்குப் பலவாந்தன்மை ஒப்புக்கொள்ளப் படுமேயானுல், அசேதனமான அதற்கு அநித்தியத்தன்மை ஏற்படுகிறது. பரமகாரணத் தன்மைக்குப் பங்கம் வருகின்ற உண்மையறியாதவர்களும், பரமாணுக்

अकलम्-कलारहितम्, *कलानां महावृतवा(वरणा) द्युक्ताः पुरादिसन्निवे 'वे(ने)क [रुद्र] भोग्यत्वादधो (यो) [ये] विशेष तद्रहितम् । नात्र क्वचित् † पुराणानीत्या (पुरावरणा) दीनि दृश्यन्ते । नापि तत्सन्निवेशाः । नापि भोग्यत्वम् । 163

ननु तत्र विशेषाभावे मण्डलेशानां [अवस्थान] प्रति पादिकायाः "मायायां मण्डलेशानाः क्रमतोऽष्टौ व्यवस्थिताः" इति श्रुतेरनु पपत्तिरिति चेत् । न । माय(या)याः शक्तिरूपत्वेन भुवना सम्भवेन तत्र स्थित्यनुपपत्तेः तत्समानदेशकलामस्त कास्थितानामुपचारेण तत्रावस्थान श्रुत्युपपत्तेः ।

---

கூட்டங்களேயே உலகத்திற்குக் காரணமாகச் சொல்லு கின்ற வைசேஷிகர்களும், ஆறு பதார்த்தங்களின் ஞானமோ பதினாறு பதார்த்தங்களின் ஞானமோ தாம் மோக்ஷத்திற்குக் காரணமென்று சொல்லுவதால் வெளிப்படுத்தப்பட்ட கூர்மையான ஞானத்தையுடைய வர்களும் நிராகரிக்கத்தக்கவர் ஆவர்.

மேற்கோள்:

"சில நையாயிகர்கள் பிருதிவ்யந்தம் பிரபஞ்ச மென்றும், பரமாணுக்களே அதற்குப் பரமகாரண மென்றும் சொல்லுகின்றனர். முன்னர்ச் சொல்லிய காரணங்களாலேயே அவர்களுடைய ஞானத்தின் ஸௌக்ஷ்மம் அறியப்படுகிறது. பரமாணுக்கள் அசேதன மாய் அநேகங்களாகையால் அநித்தியமாகும். அவை பரமகாரணமாக மாட்டா மாயையே காரணமென்பது அறியத்தக்கது" என்று பிறிதோரிடத்தில் கூறுவது கண்டுகொள்க. 162

अकलम् (அகலா்) கலைகளற்றது; ஆவரணம், புவனம் முதலிய ஸந்நிவேசம், அநேக உருத்திரர்களுக்குப் போக்கியமாய் இருப்பது முதலிய கலைகளின் யாதொரு

---

* (ख) कला नाम हावृताद्युक्ताः † पुराणि नित्यानि

तदुक्तं श्रीमन्मृगेन्द्रे —

मायायामपि सन्त्यन्ते गहनेशादयोऽधिपाः ।

तत्त्वशुद्धिश्च दीक्षायां सर्वं तत्कलमस्तके ॥ इति ।

§मायागर्भाधिकारे तदीश्वरत्वं ननु पञ्चाष्टकादिवन्नियत भुवनेश्वरत्वमित्येतद्ज्ञापयितुमत्रोपचाराभिधानमितिभावः । 164

---

விசேஷமுண்டோ, அஃது* இல்லாதது மாயை. மாயையில் ஓரிடத்திலும் புரங்கள் காணப்படவில்லை; அவயவுப்பகுப்புக்களும் காணப்படவில்லை; அவ்வாறு போக்கியத்தன்மையுமில்லை. 163

மாயையில் புரந்தி ஸந்நிவேசவிசேஷங்கள் இல்லாதிருப்பின் மண்டலேச்வரர்கள் எண்மர் மாயையில் இருப்பதாகச் சொல்லப்படுகின்ற சுருதிக்குப் பொருத்தமின்மை ஏற்படும் எனின், ஏற்படாது. மாயை சக்திரூபமாக இருத்தலால் அதில் புவனங்கள் இல்லை. அதனால் அது மண்டலேச்வரர்களுக்கு இருப்பிடமாகவும் இருக்கமுடியாது. ஆனால் அதற்குச் சமமான இடமான கலாமஸ்தகத்திலிருக்கின்ற மண்டலேசவரர் முதலான உருத்திரர்கள் உபசாரமாக மாயையிலிருப்பதாக் கூறப்பட்டுள்ளார்கள். அதனால் சுருதி விரோதமன்று.

மிருகேந்திரம்

'மாயா தத்துவத்தில் மண்டலேச்வரர், கஹனேச்வரர் முதலான உருத்திரர்கள் புவனவாஸிகளாகச் சொல்லப்படுகிறார்கள். தீக்ஷையிலும் தத்துவசுத்தி மாயாதத்துவத்திலிருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இருப்பினும், அந்தத் தத்துவபுவனங்கள் எல்லாம், அங்கு வசிக்கின்ற மண்டலேச்வரர்களும் மாயா காரியமான கலாமஸ்தகத்தில் இருப்பவர்களாக அறிய வேண்டும். கலாமஸ்தகத்தில் இருப்பவர்களே

---

§ कलादि क्षित्यन्तम्

* மாயை, போக்கியமாயிருப்பின், குடம் முதலியவைகளைப் போல் அநித்தியமாகும்.

सूक्ष्मम्-नस्थूलम् । ‡अव्यक्तम् । बुद्धितत्त्ववत् स्थूलं नभवतीत्यर्थः । सूक्ष्मतारतम्यविश्रान्त(न्ति)भूमित्वादपि इदमेव सूक्ष्मम् ।

तथा पौष्करे —

"तंमा(तन्मा)त्राणि पृथिव्यादेः सूक्ष्माण्येभ्यस्त्वहंकृतिः ।
तस्याः सूक्ष्मतरा बुद्धिस्तस्या[ः]प्रकृतिरेव च ॥
तस्याः कलादिवर्गश्च माया सूक्ष्मतरा ततः ।
यत्र सौक्ष्म्ये पराकाष्ठा सा मायेत्यभिधीयते ॥ इति ।

अस्याः सूक्ष्मत्वमन्तर्गूढपटस्य कटादेरिवाभिप्रेतम् । न तु सर्वथा विकाररहित्यम् ।

---

மாயையில் இருப்பதாக உபசாரமாகச் சொல்லப் பட்டது" என்று கூறுகின்றது காண்க.

மாயா* கர்ப்பாதிகாரத்தில் அவர்களுக்கு ஈச்வரத் தன்மையே த்விர, குஹ்ய, அதிகுஹ்ய, குஹ்யதர, பவித்ர, ஸ்தாணு என்ற ஐந்து கண்ங்களிலும் எண்மர் எண்மராக இருக்கின்ற நூற்றெட்டுப் புவனாதிபதி உருத்திரர்களைப் போல அவர்களுக்கு நியதமான புவனபதித்தன்மை இல்லை என்பதைத் தெரிவிப்பதற்காகவே, கலாமத் தகத்தில் இருப்பவர்களே மாயையில் இருப்பவர்களாக உபசரிக்கப்படுள்ளது என்பது கருத்தாகும். 164

सूक्ष्मम् (ஸூக்ஷ்மம்) தூலமற்றது; வியக்த மில்லாதது; புத்திதத்துவம் போலத் தூலம் இல்லை என்பது பொருள். சூக்குமத்தின் தரதம்யாவத்திற்கு இதுவே எல்லையாக இருப்பதால், இதுவே சூக்கும மானது.

---

‡ (ख) अव्यक्त बुद्ध्यादिवत्

* மாயாகர்ப்பம் என்பது கலைமுதல் பூமிவரை.

यथा मृगेन्द्रे —

यथा कटादिगूटस्य पटादेस्तद्व्युदासतः ।
नासतः क्रियते व्यक्तिः कलादेर्ग्रन्थितत्त्वतः ॥ इति । 165

अनादि परमकारणत्वात् । यच्चानादि न तत्सर्वात्मना परिणमते । किन्तु शक्त्यात्मनाऽवस्थिताह्यवस्था †एकदेशतो मायात्मकादुत्पद्यते व्यक्तिमासादयन्ति(ति) । येषां सर्वात्मना जगद्बीजं परिणमते, तेषां तदनित्यमिति नित्यानाद्यादि पदेन एकदेशपरिणामसिद्धिः । एवं सति अस्मिन्मते कार्यत्वं न पट [कुटीवत्] वृत्तितया, पटदशायां कुटीवृत्त्यस्यानुपपत्तेः ।

---

பௌஷ்கரம்

"பிருதிவி முதலிய பூதங்களைக் காட்டிலும் தன்மாத்திரைகள் சூக்குமங்கள்; அவற்றினும் அஹங்காரம் சூக்குமமானது; அதனினும் புத்திதத்துவம் சூக்குமமானது. அதனைக் காட்டிலும், பிரகிருதி தத்துவமும், அதனினும் கலை முதலான தத்துவங்களும் சூக்குமங்கள். அவைகளைக்காட்டிலும் சூக்குமதரமானது அசுத்த மாயா தத்துவம். எதனிடத்தில் சூக்குமத்தின் முடிவு அடங்கியிருக்கிறதோ, அது மாயை என்று சொல்லப்படுகிறது" என்று சொல்லுவது கண்டு கொள்க.

இந்த மாயையின் சூக்குமத்தன்மையானது பாய் முதலியவற்றால் மறைக்கப்பட்ட ஆடையின் தன்மை போன்று புலப்படாமையையே குறிக்கும்; ஆயின் முழுமையும் விகாரமற்றது என்பதில்லை.

---

† (ख) अवास्थितायास्तस्याः

नापि सांख्यवत् दधिक्षीरन्यायेन परीणामतया, तथात्वे क्षीरनाशवत् सर्वात्मना उपादाननाशप्रसङ्गात् । अतएव न बौद्धवद्बीजङ्कुरन्यायः, तत्रापि सर्वात्मना बीजनाशात् । नापि मायावादिवत् शुक्तिरजतन्यायेन विवर्ततया, कार्यस्यामा [त्य]त्व प्रसङ्गात् । तस्मादस्मि (स्म)न्मते घृतकीटन्यायेन एकदेश परिणामतयैव कार्यत्वं सिद्धम् ।

तदुक्तम्—

वि दुमायाप्रधानानां प्रकृ तेघृ(र्घृ)तकीटवत । इति

सिद्धान्तदीपिकायाम्—

शिवेच्छा प्रे[रि] तानद(न्त) नाथविक्षोभिता पुनः ।
घृतकीटनयादेकदेशेन परिणामता ॥
शक्त्यात्मकलादीनि *नयन्ति (न्ती) [स्थूल] रूपताम् ।
†नासतो विद्यते भावो नाभावो विद्यते सतः ॥ इति ।

अत्र तनुकरणादीनि कार्याणि संहृतौ बिन्द्वाद्युपादानेषु शक्त्यात्मनावस्थाय सृष्टौ ‡बन्धात्मनां प्रयोजना पुनर्व्यक्तात्मना भवन्ति ।

---

மிருகேந்திரம்

"பாய் முதலியவற்றால் மறைக்கப்பட்ட ஆடையானது மறைப்பு நீங்கிய மாத்திரத்தில் எவ்வாறு விளங்குகிறதோ, அவ்வாறே ஸம்ஹாரகாலத்தில் மாயையின்கண் சக்திரூபமாய் மறைந்துநின்ற கலாதி தத்துவமானது படைப்புக் காலத்தில் ஸ்ரீஅனேந்தேசப் பெருமானின் வியாபாரத்தால் மறைப்பு நீங்கி வெளிப்பட்டு விளங்கச் செய்யப்படுகிறது. இல்லாதது ஒரு போதும் தோன்றாது ஆதலால் மாயை பரமகாரணம்" என்று கூறுவது காண்க.



---

* (ख) प्रयान्ति † (ख) सत्कार्यवादः– विद्यमानमेव कार्यं कारणदाभिव्यक्तिंगच्छति । इति । ‡ (ख) बन्धात्मक

तथा मृगेन्द्रे—

तदाधाराणि कार्याणि शक्तिरूपाणि संहृतौ ।

विसृ(सृ)तौ व्यक्तिरूपाणि व्याप्रियन्तेऽर्थसिद्धये ॥ इति । 166

अन्वयम् - न तस्याः विकारशक्तयो व्ययं विनाशं गच्छती(न्ती)ति अव्ययम्, शक्तिव्ययरहितमित्यर्थः । अव्यय पदेन *असत्कार्यवादिभ्योऽत्र(ऽस्या) त्र विशेषः सूचितः । तेषां हि विशिष्टकार्योत्पादानसम्भवादित्युक्तं मोक्षकारिकासु । 167

†ईश्वरम् । सर्वविकाराणामुपादानतयापूर्व(र)कत्वेन ईश्वरवत् पुरुषार्थसाधकत्वा$दीश्वरमिति । 168

அசுத்தாத்துவாவிற்கு மாயை பரம காரண மாக இருப்பதால் அநாதியாகும். எது அநாதியோ அது முழுதும் பரிணாமத்தை அடைவதில்லை. ஆயின், சக்திரூபமாய் இருக்கின்ற கலாதி உலகம் மாயை யின் ஏகதேசத்தினின்று தோன்றுகிறது. எக்கலாதி களை முன்னிட்டு உலகிற்கு முதற்காரணமான மாயை முழுதும் பரிணாமத்தை அடைகிறதோ, அவற்றை முன் னிட்டு அம்மாயை நித்தியத்தன்மை இல்லாமற்போய் விடும் என்பதற்காக 'அநாதி' என்பது கூறப்பட்டுள் ளது. இதனால் ஏகதேசப்பரிணாமம் என்பது முடி வாயிற்று. ஏகதேசப்பரிணாமம் என்ற முடிவில் காரியத் தன்மையானது துணி கூடாரமாதற்போல்வதன்று ஏனெனில், துணி கூடாரமாயினும் ஆடை நிலையில் கூடாரச்செயல் அதற்கு இல்லையாதல் காண்க. சாங்கியன் கூறுவது போல, தயிரைப் போல்ப் பரிணாமத் *தன்மையும் இல்லை; ஏனெனில் முதற்காரண மாகிய மாயைக்குப் பாலைப்போல் முழுவதும் அழிவு

* முழுதும் வேறுபடல்.

* कारणेष्वसत्कार्यमुत्पद्यते इत्यसत्कार्यवादः

† (ख) इत्थम् । $ (ख) ईश्वरत्वं

अस्य माया त [त्व]स्यैकत्वेऽपि अनेकाकारकार्योत्पादकत्वं सहकारिसापेक्षत्वं च मृगेन्द्रसूत्रेण प्रतिपादयति—

तदेकमशिवं बीजं जगतश्चित्रशक्तिमत् ।
सहकार्या(र्य) (धि) कारान्तसंरोधि व्याप्यनश्वरम् ॥ सू२८

---

ஏற்படும். பௌத்தர்களது மதம்போல முளையினின்று விதை தோன்றுதல் போலத் தோன்றிற்றென்றாலோ, அதில் விதைக்கு முழுதும் அழிவு ஏற்படுவதால் அவ்வாறு கூறஇயலாது என்பது. மாயாவாதிகள் கூறுவது போல, சிப்பியில் வெள்ளியைக் காண்பது போல விவர்த்தவாதமாகக் கொண்டால், காரியத்திற்குப் பொய்த்தன்மை ஏற்பட்டு விடும். ஆகையால் இம்மதத்தில் நெய்யின் ஒருபாகத்தில் புழு உண்டாதற் போல மாயையின் ஏகதேசத்தில் பரிணமத்தால் காரியத் தன்மை ஏற்படுகிறது என்பது சொல்லப்பட்டிருக்கிறது.

"சுத்தமாயை அசுத்தமாயை இவற்றின் பரிணமமானது நெய், ஒருபாகத்தில் புழுவாகப் பரிணமிப்பது போல உள்ளது" என்பது ஆன்றோர்கள் வாக்கு.
ஸித்தாந்ததீபிகா

"சிவபெருமானின் இச்சையால் ஏவப்பட்டு ஸ்ரீ அனந்தேசப் பெருமானால் கலக்கப்பட்ட அசுத்த மாயை கிருதகீட நியாயப்படி ஏகதேசப் பரிணமத்தை அடைகிறது. சக்தி ரூபமாக இருந்த கலாதிகள் ஸ்தூல ரூபத்தை அடைகின்றன. * இல்லது தோன்றாது; உள்ளது அழியாது" என்று கூறுவது கண்டுகொள்க.

---

* ஸத்காரிய வாதம் இது. அஃதாவது ஒரு காலத்திலுள்ள பொருள் மற்றொரு காலத்து இல்பொருளாவதில்லை; இல் பொருள் உள்பொருள் ஆவதில்லை என்பதாகும்.

तत्र - मायातत्त्वम् एकम् । अशिवम् – अशुद्धं मोहकत्वात् । जगतो बीजम् । चित्रशक्तिमत् चित्रा विविधाः शक्तयो यस्य तथोक्तम् तथा चास्यैकत्वेऽपि तच्छक्तीनामनेकत्वाद्विचित्रकार्यजा(ज) [न] कत्वमविरुद्धमित्यर्थः । किञ्च महकार्याधिकारान्त संरोधि ताच्छील्ये णिनिप्रत्ययः । अनेन कर्म सहकारीत्युक्तम्, कर्माभावे ग्रन्थित[त्व]स्याप्रवृत्तेः ।

---

இங்குத் தனுகரணம் முதலிய காரியங்கள் சம்ஹார காலத்தில சுதத மாயை முதலிய முதற்காரணங்களில் சக்தி ரூபமாக இருந்து படைப்புக் காலத்தில் பாசத் தால் கட்டுண்ட உயிர்களுக்குப் போகத்தின் பொருட்டு மீண்டும் தூலமாக வெளிவருகின்றன.

மிருகேந்திரம்.

"இவ்வாறு நித்தியம் வியாபகம் முதலிய குணங் களோடு கூடிய உபாதானகாரணமான மாயையை ஆதாரமாகக் கொண்ட தனுகரணபுவனங்களும் ஸம் ஹார காலத்தில் சக்திரூபமாக அதில் இருக்கின்றன. படைப்புக்காலத்தில் அவை தம் பிரயோஜனம் சித்திக்கும் பொருட்டு மாயையினின்று தூலமாக வெளி வருகின்றன" என்று கூறுவது காண்க 166

अव्ययम् (அவ்யயம்) அழிவற்றது; மாயையின் காரிய சக்திகள் அழிவற்றன என்பது பொருள். இங்கு 'அழிவற்றது' என்று சொன்னதால், அஸத்காரிய வாதங்களினின்று வேற்றுமை கூறப்பட்டது. கலாதி களுக்கு விசேஷமான காரியங்களை உண்டு பண்ணுவது ஏற்படுவதால் என மோக்ஷகாரிகையில் கூறப்பட்டிருக் கிறது. 167

ईश्वरम् (ஈச்வரம்) எல்லாக் காரியங்களுக்கும் உபா தானமாக இருந்து போஷகமாக இருப்பதாலும் ஈச்வரனைப் போலப் புருஷார்த்தத்திற்குச் சாதகமாக இருப்பதாலும ஈச்வரத்தன்மை எய்துகிறது. 168

மாயாதத்துவம் ஒன்றாக இருந்தாலும் அதற்குப் பல்வேறுபட்ட காரியத்தைத் தோற்றுவிக்கின்ற தன்மையையும் துணைக்காரணத்தை விரும்பி நிற்கின்ற

व्यापि, अनश्वरम् पदायुध (दयुग) मेतत्पूर्वमेव व्याख्यातम् । अत्र एकत्वादिविशेषणानां पुनरुपादानं प्रति[पि-] पादय(यि) [षि] त विचित्रशक्तिमत्सहकार्या (र्य) धिकारान्त संरोधिरूप विशेषणद्वय सहवर्तितयैवेति न पौनरुक्त्यम् । अस्य मायातत्त्वस्य रूपमाचार्यैरप्युक्तम्—

தன்மையையும மிருகேந்திர சூத்திரத்தால் விளக்கு கின்றூர.

* ததேகமசிவம் பீஜம் ஜகதஸ்சித்ர சக்திமத்
ஸஹகார்யதிகாராந்த ஸம்ரோதி வ்யாப் யநச்வரம் சூ-28

அந்த மாயா தத்துவம் பரமகாரணமாயிருப்பதால் ஒன்ருகவுள்ளது; மயக்கத்தை உண்டுபண்ணுவதால் அசுத்தமானது; உலகிற்கு முதற்காரணமாகவுள்ளது; பலவித சக்திகளை உடையது. ஆகையால் மாயை ஒன்ருக இருந்தாலும் பலவிதமான ஆற்றலை உடையதாயிருப்பதால் பல்வேறுபட்ட காரியங்களைத் தோற்றுவிப்பதில் விரோதமன்று. மேலும், ஸஹகாரியாகவுள்ள கன்மங்களின் அதிகாரம் வரை அணுக்களைக் கட்டுப்படுத்தும் சுபாவமுடையது. இதனுல் இதற்குக் கன்மம் துணைக்காரணம் என்பது பெறப்பட்டது. கன்மம் இல்லையென்ருல், மாயாதத்துவத்தின் காரியமே நிகழாமற்போம். வியாபி, அநச்வரம் என்ற இரண்டு சொற்களும் முன்பே விளக்கப்பட்டன.

முன்பு மாயாதத்துவத்தின் இலக்கணத்தை ஸ்வாயம்புவ சூத்திரத்தினின்று கூறிய பொழுது ஒன்று முதலிய அடைமொழிகள் கூறப்பட்டிருப்பினும், அவற்றை மீண்டும் இங்குக் கூறியது குற்றமாமோ என ஐயம் நிகழ, அதனையறுப்பான் வேண்டி, அம்மாயை

சூ. [உரைசெய் மாயை யசிவ மொருமுதல்
கரும மன்னதி கார முடிவுள
விரித லின்றி மறைப்ப திறப்பறப்
பரவு சக்திகள் பல்வகை யுள்ளதால்]

"मायाख्यं चित्रशक्त्या परिगतमकलं कष्ट वर्त्मैकबीजं
नित्यं कर्मान्तरोधि स्वकृतिनिवसं (स) [नं] तत्कृतिव्याप-
कत्वम् (कश्च) ।
कार्याचित्वप्रकाश्यादचिदशिवकरं मोहकं स्वापकाले
सर्वाता(त्वात्मा) वासमेवं परमपिच सितं कारणं बोधकं तत ॥
इति 169

---

பல சக்திகளை உடையது (விசித்சக்திமத்); ஸஹகாரியான கன்மங்களின் அதிகாரம் வரை அணுக்களைக் கட்டுப்படுத்துவது (ஸஹகார்யதிகாராந்த ஸம்ரோதி) என்ற இரண்டு அடைமொழிகளைக் கூற வேண்டியிருத்தலால், அவற்றுடன் கூடியிருந்ததாலும் இங்குக் கூறப்பட்டுள்ளது. ஆதலால் இங்குக் கூறியது கூறல் என்ற குற்றமின்மை அறிக.

இந்த மாயாதத்துவத்தின் இலக்கணம் *ஆசாரிய ஸ்வாமிகளாலும் கூறப்பட்டுள்ளமை பின்வருமாறு காண்க.

"மாயா தத்துவம் அளவிறந்த சக்திரூபமான காரியங்களை உடையது; கலையற்றது (சூக்குமானது); அசுத்தாத்துவாவிற்கு முதற்காரணமாயுள்ளது; அழிவற்றது; பூர்வகன்மப் பயனைப் புசித்துக் கழிக்குமளவும் பந்தகமாக இருப்பது; தன்காரியமாகிய தத்துவங்களுக்கு ஆதாரமாயிருப்பது; தன் காரியத்திற்கு வியாபகமாயிருப்பது; தன் காரியங்களான தனுகரண புவனாதிகளில் அசேதனத்தன்மை உள்ளதால் தானும் அசேதனமாயுள்ளது; அஞ்ஞானத்தைக் கொடுப்பது; ஆன்மா அல்லாததில் ஆன்மா என மயக்க அறிவை உண்டாக்குவது; ஸம்ஹாரகாலத்தில் ஸகளர் பிரளயாகலர் ஆகிய எல்லா ஆன்மாக்களுக்கும் இருப்பிடமாயிருப்பது; இஃது அசுத்தமாயையாகும். இதற்கு

---

* த்ரிலோசன சிவாசாரியஸ்வாமிகள்.

अथ किरणसूत्रार्थे (र्धे) न शुद्धाशुद्धयोरूपादानयोः मायायो [र] धिष्ठातुं नि (तुर्नि) मित्तकारणस्य भेदं दर्शयति—

शुद्ध(द्धे)ऽध्वनि शिवः अर्ता

पो(प्रो)क्तोऽनन्तोऽसितेप्रभुः। सू. २९

शिवः शुद्धः परमेश्वरः शुद्धे - अशुद्धिरहिते, अध्वनि- विद्यातत्त्वभुवनाद्यात्मके मन्त्र मन्त्रेशाद्यात्मके च कर्ता निमित्तं प्रोक्तः-उदितः। तत्कृतिं (तं) तत्त्व भुवनादिकं समस्तमित्यर्थः।

अनन्तः- अनन्तादिको वर्गः, असिते -अशुद्धमायात्मके, प्रभुः -सृष्ट्यादिकर्ता, प्रोक्त इत्यनुषङ्गः।

अत्रानन्तादीनामीश्वरप्रेरणयैव कर्तृत्वमभिमतम्।

---

மேலான சுத்தமாயை இவ்விதமே பலவித சக்தி யுடையது; சூக்குமமானது; அழிவற்றது; ஆனல் அது சுத்த ஸ்வரூபமானது; சுத்தாத்துவாவிற்கு உபாதான காரணமாயுள்ளது; சிவன் முதலான சுத்தவஸ்துக்களைத் தெரிவிக்கின்றதாயுமிருக்கும்" என்று கூறப்பட்டுள்ளது காண்க. 169

பின்னர், கிரண சூத்திரத்தின் ஒருபகுதியால் சுத்தா சுத்தாத்துவாக்களுக்கு முதற்காரணங்களான சுத்தா சுத்தமாயைகளுக்கு நிமித்த காரணராகவுள்ளவர்களின் பேதத்தைக் கூறுகின்ருர்.

*சுத்தே z த்வநி சிவ: கர்த்தா ப்ரோக்தோ நந்தோ z ஸிதே ப்ரபு: சூ29

சிவபெருமான்; வித்தியாதத்துவ புவனம் முதலிய ஸ்வரூபமாகவும், மந்திர மந்திரேச்வரர் முதலிய ஸ்வரூபமாகவும் உள்ள சுத்தாத்துவாவிற்கு நிமித்த காரணமாவர். சுத்த த்த்துவ புவனங்கள் எல்லாம் சிவபெருமானுல் படைக்கப்பட்டது என்பது பொருள்

---

* சுத்த மாமத்து வாவிற் கிறைவனு
மெய்த்த வேர்ச்சிவ னென்பர் விழுமியோர்
அதத னுகு மனந்த னசுத்தமாய்
வைத்த மாயையின் மன்னவ னுமால். [சதமணிமாலை]

ननु एवमुपलब्धगोचरोऽपि न रागं विना तदुपादानाय प्रवर्तत इति । अत आह — रागेण रञ्जितस्या (श्चा) पीति ) रागेण-रागतत्वेन,रञ्जितः- जनितसक्तिः दुःखमोहादम्पुर (त्मक।) मपि भोग्यं सुखत्वेन प्रपद्यत इत्यर्थः । सक्तिजनकत्वं च रागतत्वस्यैव सम्भवति । वीतरागस्यातिमलिन (नेऽ) पि विषये भोगो नानुवर्तते ।

तदुक्तं तत्वसङ्ग्रहे—

"यज्जनिताभिषङ्गो:भोग्याय नरि क्रिया स रागोऽत्र" । इति

[अनेन]आत्मनः सक्तिमत्त्वांशे रागतत्वस्योपकारो,दर्शितः। एवमनेन तत्वत्रयेण जनितप्रवृत्तिः पुमान् पुनर्बुद्ध्यादिभिः करणैर्भोग्यं निष्पादयतीत्याह - बुद्ध्यादिकरणैर्युत इति।

---

கலையால் வெளிப்படுத்தப்பட்ட சைதன்யத்தை உடையவனும், வித்தையால் அறிவிக்கப்பட்ட விஷயங்களை உடையவனுமான ஆன்மாவிற்கு சுகதுக்க போகங்கள் நேரான விஷயங்கள். சப்தம் முதலியவை பரம்பரையான விஷயங்கள்: இதனால் ஆன்மாவிற்கு விஷயத்தை அறிவதில் வித்தியா தத்துவத்தின் உபகாரம் கூறப்பட்டது.

மிருகேந்திரம்

'ஞானசக்தியை வெளிப்படுத்துகின்ற பிரகாசமயமான வித்யா தத்துவத்தால் ஞானேந்திரியங்கள் கன்மேந்திரியங்களைக்கொண்டு அறியத்தகும் விஷயத்தை ஆன்மா அறிகின்றான்" என்று கூறுவது காண்க.

இவ்வாறு ஆன்மா வித்தையினால் வெளிப்படுத்தப்பட்ட விஷயத்தை உடையவனுயிருந்தும் அராகமில்லாமல் போகத்தில் ஈடுபாடு ஏற்படுவதில்லை என்பதைக் கூறுகின்றார், ('रागेण') (ராகேண) என்ற பகுதியால். ஆகையால் அராக தத்துவத்தால் உண்டான

बुद्ध्यादिभिः करणैः युतः- सहितश्चभवतीति शेषः ।

अयमर्थः —प्रधानस्य गुणानां चापूरकत्वेन बुद्ध्या-द्युपकारकत्वम् । तन्मात्राणां भूतानां चाधिष्ठानत्वेन काल नियत्योश्च प्रवृत्तिं प्रति प्रयोजकत्वम् । कालोहि प्रवृत्तमेव पुरुषं त्रय (त्रु) ट्यादिभिः कलयति । नियतिरपि प्रवृत्तमेव पुरुषं यत्र कर्मफलं तत्र [रागं जनयन्] तन्नियमयतीति ।

तदुक्तं तत्त्वसंङ्ग्रहे—

"अविमुक्त्वा (त्वा) त् करणानि तु कार्यमधिष्ठाय - चेष्टन्ते" इति । २००

---

ஆசையை உடைய ஆன்மா துக்கமோஹ ரூபமான போக்யத்தையும் சுகமாக நினைத்து அதில் அழுந்து கிருன். ஆசையை உண்டுபண்ணுவது அராக தத்துவத்திற்குத்தான் உள்ளது. அதனுல்தான் ஆசையற்றவருக்கு விஷயத்தில் போகம் ஏற்படுவதில்லை.

தத்துவஸங்கிரஹம்:-

உண்டுபண்ணப்பட்ட ஆசையை உடைய ஆன்மாவிற்குப் போக்கியப் பொருளில் எதனுல் ஈடுபாடு ஏற்படுகின்றதோ, அஃது இங்கு அராக தத்துவம் என்று கூறுவதையும் நோக்குக.

இதனுல் ஆன்மாவிற்குப் போக்கியப் பொருளில் ஈடுபாடு உண்டுபண்ணுவதில் அராக தத்துவத்தின் உபகாரம் கூறப்பட்டது.

கலை, வித்தை, அராகம் என இந்த மூன்று தத்துவத்தால் உண்டுபண்ணப்பட்ட ஆசையையுடைய ஆன்மா புத்தி முதலிய சாதனங்களால் போக்கியத்தை அனுபவிக்கிருன் என்று கூறுகின்ருர். ஆன்மா புத்தி முதலிய சாதனங்களுடன் கூடியிருக்கிருன் என்று.

एवमार्जितभोग्यस्यात्मनो भोगस्थानं सूत्रान्तरेणाह —

मायाद्यवनि पर्यन्त(न्ते) तत्वभूतात्मवर्त्मनि ।
भुङ्क्ते तत्र स्थितान् भोगान् भोगैकरसिकः पुमान् ॥

मायादिकं च तत् अवनिपर्यन्तं च मायाद्यवनिपर्यन्तं तस्मिन् । आत्म(वर्त्म)नः विशेषणमिदम् । माया आदिर्यस्येति अतद्गुणसंविज्ञानो बहुव्रीहिः । तथा [च] कलादिकस्यैव ग्रहणं न तु मायायाः, तत्र भुवनाभावेन भोगासम्भवात् ।

---

பிரதான தத்துவத்திற்கும் முக்குணங்களான குண தத்துவத்திற்கும் போஷகமாயிருப்பதால் அவைகளுக்கும் ஞானேந்திரியங்களின் உபகாரம் இன்றியமையாதது என்பது பொருள். இவை பஞ்ச தன்மாத்திரைகளையும் ஐம்பூதங்களையும் ஆச்ரயமாகக் கொண்டு, காலதத்துவம் நியதிதத்துவம் இவைகளின் பிரவிருத்திக்குக் காரணமாயுள்ளவை துடி, கணம் முதலிய வியவகார காரணங்களுக்குக் காரணமான காலமோ வென்றால் போகத்தை நுகர்வதற்கு கலாதிகளின் மூலமாக ஈடுபட்ட ஆன்மாவைப் போகத்தை அனுபவிக்கச் செய்கிறது. நியதி தத்துவமானது போகத்தில் ஈடுபட்ட ஆன்மாவிற்கு விருப்பை உண்டுபண்ணிக் கொண்டு கன்மபலத்தை இவ்வளவு என்று நிச்சயம் பண்ணி நிறுத்துகிறது.

தத்துவ ஸங்கிரஹம்

"இந்திரியங்களோ வெனில் விபுவாகமாட்டாமையால் †காரியங்களை *ஆதாரமாகக் கொண்டு செயல்படுகின்றன" என்று கூறுகின்றது. 200

---

† பூதங்களும் தன்மாத்திரைகளும் காரியம் என்னும் சொல்லால் சொல்லப்படுகின்றன.

* பூதங்களும் தன்மாத்திரைகளும் தூலரூபமாகவும் சூக்கும ரூபமாகவும் இந்திரியங்களுக்கு ஆதாரமாய் இருக்கின்றன.

तत्वभूतात्मवर्त्मनि तत्त्वनां भूतानां आत्मनां च वर्त्म तत्व भूतात्मवर्त्म तस्मिन् । अत्र तत्त्वशब्देन तत्त्वस्य (स्थ) भुवनानि लक्षणया उच्यन्ते । कलोच्चलित चैतन्य इत्यत्रैव तत्व वर्त्मनः प्रोक्तत्वा [त्] भूदशब्देन स्थूगुणयोगतो गौण्या वृत्यात्र कलादि क्षित्यन्त भुवनजानि भोगसाधनानि भौवनस्थूलशरीराण्युच्यन्ते आत्मशब्देन आत्मनः आक्षादुपकारकत्वाद् गङ्गायां घोष इति वदत्यन्तसन्निकर्षलक्षणयाभाव प्रत्ययसन्तान उच्यते । भावा अष्टौ धर्मादयः । प्रत्ययास्तु चत्वारः सिद्ध्यदयः । भुवन भौवनदेहभावप्रत्ययात्मके त्रिविधेऽपि वर्त्मनीत्यर्थः । २०१

---

இவ்வாறு போகத்தை ஈட்டிய ஆன்மாவிற்குப் போகஸ்தானத்தை வேருெரு சூத்திரத்தால் கூறுகின்ருர்.

மாயாத்யவநிபர்யந்த தத்வபூதாத்ம வர்த்மநி I
புங்க்தே தத்ர ஸ்திதாந் போகாந் போகைககரஸ்க: புமாந் II

'மாயாதிஅவநிபர்யந்தம்' என்பது சூத்திரத்திலுள்ள 'வர்தம்' என்ற சொல்லின் அடைமொழி. இங்கு மாயை முதல் பூமிவரை என்றவிடத்து அதத்குண ஸம்விஞ்ஞான பஹுவ்ரீஹி: அப்பொழுது மாயையை நீக்கிக் கலேமுதல் என்பது பொருள். ஏனெனில் மாயையில் புவனங்களில்லாததால் போகமும் ஏற்படாது. இங்குத் தத்துவ சப்தத்தால் தத்துவத்திலுள்ள புவனங்கள் இலக்கணையாகக்கூறப்படுகின்றன.

'कलोद्बलितचैतन्य (கலோத்பலித சைதன்ய) என்றவிடத்திலேயே தத்துவமார்க்கம் கூறப்பட்டது. பூத சப்தத்தால் தூலமான குணங்களின் சம்பந்தத்தைக்

---

போகமே விழைவுறு புருட னென்பவன்
மோகமார் மாயைதான் முதன்மண் ணீறென
வாகுமா தத்துவ மனைத்துங் கொண்டவண்
டீர்கலா நுகர்வினை நுகருஞ் சென்றரோ.

(சதமணிமாலை)

भावप्रत्ययार्थ उक्तः —

"भावयन्ति यतो लिङ्गं तेन भावाः प्रकीर्तिताः ।
प्रत्याययन्ति क्षेत्रज्ञं तेन ते प्रत्ययाः स्मृताः ॥ इति ।

त्रिविधेऽपि वर्त्मनि स्थितः भोगभोक्तृत्वेन स्थितो भूत्वाप्यस्मिन् पुमान् - पुरुषः भोगान् भुङ्क्ते -प्राप्नोतीत्यर्थः । अतएवायमीश्वरेण बलाद्भोगे नियुक्तस्सन् अनिच्छन्नपि कदाचिद्भोगं भुङ्क्ते ।

---

கொண்டு, கௌணீ விருத்தியால் இங்குக் கலை முதல் பூமி வரையுள்ள புவனங்களில் இருக்கின்ற போக சாதனமான தூல சரீரங்கள் கூறப்படுகின்றன. ஆத்ம சப்தத்தால் ஆன்மாவிற்கு நேரான உபகாரகமாக விருத்தலால், கங்கையில் இடைச்சேரி என்பதுபோல ஸாமீப்ய சம்பந்தமுள்ள சுத்தா இலக்கணையால் பாவப்ரத்யயங்கள் கூறப்படுகின்றன. தருமம் முதலிய எட்டும் பாவங்களாகும். சித்தி முதலிய நான்கும் பிரத்யயங்களாகும். புவனம், புவனதேஹம், பாவப் பிரத்யயம் ஆகிய மூன்று விதமான மார்க்கங்களிலும் என்பது பொருள். 201

பாவப்பிரத்யயங்களின் பொருள் வருமாறு:-

யாதொரு காரணத்தால் இலிங்கங்களாயிருந்து புத்தியைச் சாதித்துத் தருகின்றனவோ, அந்தக் காரணத்தால் பாவங்களெனக் கூறப்பட்டன. ஆன்மாவை அறிவித்து நிற்கின்றமையால் அவைப்ரத்யயங்கள் என்று கூறப்படுகின்றன.

புவனம், போக சாதனமான புவனத்திலுள்ள தூல சரீரம், பாவப்பிரத்யயம் ஆகிய இம்மூன்று வழியிலும் ஆன்மா போக்கியப் பொருளை அனுபவிப்பவனாக இருந்து போகங்களை அனுபவிக்கிறான் என்பது

तथा—

येन यत्र च भोक्तव्यं कृतं कर्म शुभाशुभम् ॥
स तत्र रज्वा बध्वेव बलाद्दैवेन नि(नी)यते ॥ इति । २०२

अपि चास्य भोगेच्छाविरह एव नास्तीत्याह-भोगैकरसिक इति । भोगेष्वेकेषु रसस्तन्निष्टोऽभिलाषो यस्य स तथा । मलीमसमपि भोगं भुञ्जानो न विरज्यति न च तृप्यतीत्यर्थः । अनेन च रागस्य भोगकालेऽपि व्यापारोऽस्तीति सूचयति । विद्यायाश्च करणत्वाद्भोगनिष्पत्तौ व्यापारो लब्धएव, कर्तुः करणं विना कर्मणि व्यापारायोगात् । विद्याव्यतिरिक्तस्य विषये व्यापार (रा) योगादि (त्) । एतत् त्रिविधवर्त्मन्यपि भोक्तृत्वं मतङ्गेप्युक्तम्

---

பொருள். ஆகையால் இவ்வான்மா இறைவனுல் பலாத்காரமாக போகத்தில் ஏவப்பட்டவனுய்க்கொண்டு விருப்பமில்லாதவனுக இருந்த போதிலும், சகல நிலேயில்போகத்தை அனுபவிக்கிருன்.

"எங்கு ஆன்மா நல்விஃன தீவிஃனயின் பயஃன அனுபவிக்க வேண்டியுள்ளதோ அங்கு இறைவனுல் கயிற்ருல் கட்டப்பட்டது போல உயிர் பலாத்காரமாகப் போக்கியத்தில் ஈடுபடுத்தப்படுகின்ருன்" என்று கூறும் செய்யுளும் இதற்குப் பிரமாணமாகும் 202

மேலும் ஆன்மாவிற்குப் போகத்தில் விருப்பமின்மையே இல்லே என்கிருர், भोगैकरसिकः (போகைக ரஸிகः) என்று. அஃதாவது போகத்திலேயே விருப்பமுடையவன் ஆன்மா என்பது பொருள். கீழ்ப்பட்ட போகத்தை அனுபவித்தும் திருப்தி அடைவதில்லே என்பதாகும். இதனுல் அராக தத்துவத்திற்குப் போக காலத்திலும் செயலுள்ளது என்று குறிப்பால் உணர்த்தப்படுகிறது.

போகம் உண்டாவதற்கு வித்தியாதத்துவம் கருவியாக இருப்பதால் வித்தியா தத்துவத்தின் செயலும்

"तद्बुच्च(द्र)लितर्योणु(वीर्यै)[ण] भुङ्क्ते प्रकृतिजान् गुणान्"
इति ।

तत्वसङ्ग्रहेऽपि —

"प [र्यट] ति कर्मवशतो भुवनजदेहेष्वयं च सर्वेषु" इति ।

अथ कुतो ? (को)भोगः कुतश्च वा भोग इति २०३

प्रश्नद्वयस्योत्तरं सूत्रान्तरेणाह —

भोगोऽस्य वेदना पुंसः सुखदुःखादि लक्षणः ।

तां समर्थित चैतन्यः पुमानभ्येति कर्मतः ॥ सू ४१

---

இன்றியமையாததாய் உள்ளது. கருத்தாவிற்குக் கருவி இன்றிச் செயல் ஏற்படாததால் என்று அறிக வித்தியாதத்துவத்தைத் தவிர, மற்றவைகளுக்குப் போகத்தை அறிவிக்கும் அறிவில் கருவியாயிருக்குந்தன்மை இல்லே. இவ்வாறு மூன்று வழியிலும் ஆன்மாவிற்குப் போக்தாவாயிருக்குந்தன்மை உள்ளது என்று மதங்கத்திலும் கீழ்க்கண்டவாறு கூறப்பட்டுள்ளது.

"கலாதிகளால் மிகுதியாக உண்டுபண்ணப்பட்ட அறிவாற்றல்களாலே மாயேயமான போக்கியங்களை ஆன்மா அனுபவிக்கின்ருன்" என்பது.

தத்துவஸங்கிரஹம்

"ஆன்மாவானவன் கன்மவசத்தால் உலகசம்பந்தங்களாயுள்ள தூலதேகங்களில் அலேகிருன்" என்று கூறுகிறது. 203

ஸகலஞன ஜீவனுக்குப் போகமென்பது யாது ? அப்போகம் எதஞல் ஏற்படுகின்றது ? என்னும் இரு விஞக்களுக்கும் விடையை மற்ருெரு சூத்திரத்தால் கூறுகின்ருர்.

अस्य पुंसः – पुरुषस्य, भोगः – भोगोनाम, वेदना-संवित्तिरनुभवः । स च भोगः सुखदुःखादिलक्षणः । आदि-शब्देन मोहो गृहितः । सुखादयो लक्षणः, लक्षणानि यस्य सः सुखादि लक्षणः । सुखदुःखादिभिर्विषयैरुपरक्तत्वात् सुख (ख) वेदना दुःखा (ख) वेदना मूढा (मोह) वेदना चेति त्रिप्रकारो भोग इत्यर्थः । भोगस्वरूप प्रश्नस्योत्तरमुक्त्वा निमित्त प्रश्नस्योत्तरमाह - [तामिति] तां- त्रिप्रकार(रा)मपि भोगरूपां वेदनां समर्थित चैतन्यः-कलाभिव्यक्तचैतन्यः, पुमान्- आत्मा, कर्मतः-कर्मवशात्, अभ्येति-प्राप्नोति । सुखदुःखं(ख)मोह भावेन विपक्वं कर्मैव पुरुषवेदनाया आलम्बनं भवतीत्यर्थः । २०४

---

* போகாஸ்ய வேதநா பும்ஸ: ஸுகதுக்காதிலக்ஷண: ।
தாம் ஸமர்த்தித சைதன்ய: புமாநப்யேதி கர்மத: ॥

இச்சகலஞன உயிர்க்குப் போகம் என்பது சுகதுக்கானுபவமாகும். அந்தப் போகமானது சுகதுக்கரூபமான விஷயங்களில் பொருந்தியிருப்பதால் சுகதுக்கரூபமாகும். இங்கு மூலத்தில் உள்ள ஆதிசப்தத்தால் மோகமும் கொள்ளப்படுகிறது. படவே, அது சுகத்தை அழுந்தி அறிதல், துக்கத்தை அழுந்தி அறிதல், மோகத்தை அழுந்தி அறிதல் என மூவகைப்படும்.

இதனுல் போகமென்பது யாது என்ற வினவிற்கு விடை கூறி, எதனுல் போகம் ஏற்படுகின்றது என்ற வினவிற்கு விடையளிக்கின்ருர். மேற்கூறிய மூன்று விதமான போகானுபவத்தைக் கலைகளால் வெளிப்படுத்தப்பட்ட ஆற்றலை உடைய சீவன் கன்ம பலத்தால் அடைகின்ருன். சுகதுக்க போகமென்ற தன்மையால் பக்குவமுற்ற கன்மமே

---

* தொலைத்திட வரியவாஞ் சுகதுக் காதிய
விலக்கண நுகருதற் கியைந்த வன்னவை
பலிப்புறும் வகைசெயப் படுமு ணர்ச்சியான்
விலக்கரும் வினையினுன் மேவி யுண்ணுமே (சதமணிமாலை)

शरीरादीनामपि भावाभावौ कर्मनिमित्तकौ शरीरादि विना कर्मणो भोगसाध [न] त्वानुपपत्तेरेव तदाक्षेपकतया हेतुत्वौ चित्यादिति सूत्रान्तरेणाह —

कर्मतश्च शरीराणि विषयाः करणानि च ।
भोगसंसिद्धये भोक्तुर्भवन्ति न भवन्ति च ॥ सू ४२

शरीराणि स्थूलरूपाणि, विषयाः -शब्दादयः, करणानि- बुद्ध्यादीनि एतानि च सर्वाणि भोक्तुः - भुञ्जानस्य पुरुषस्य- भोग[सं]सिद्धये-भोगसाधनाय, कर्मतः- कर्मनिमित्तात्, भवन्ति च उत्पद्यन्ते च, तत्कर्माभावेन भवन्ति च- न जायन्ते च । अत्रचकारेण सर्वथा यत्किञ्चिद्भोगस्य निमित्तं वस्तु तत् सर्वं कर्म इति सूचितम् । अत्रोदाहारणम् — सुखभोगि (ग)निमित्तं अहिकण्टकाद्यभावः । दुःख [भोग] निमित्तं पुत्रान्नाद्यभावः ।

---

சீவனின் அனுபவத்திற்குக் காரணமாகிறது என்பது பொருள். 204

சரீர முதலியவற்றின் தோற்றத்திற்கும் தோற்ற மின்மைக்கும் கன்மம் காரணம்; சரீரம் முதலியன இல்லாமல் கன்மத்திற்குப் போக சாதனத்தன்மை ஏற்படாமையால், அது குறித்துச் சரீரத்திற்குக் கன்மம் கரணமாகிறது என்பதே பொருத்தமானது என்பதை மற்ருெரு சூத்திரத்தால் கூறுகின்ருர்.

கர்மதஸ்ச சரீராணி விஷயா: கரணநிச
போகஸம்ஸித்தயே போக்துர்பவந்தி நபவந்திச

தூலரூபமான சரீரங்கள், சப்தம் முதலிய விடயங்கள், புத்தி முதலிய கரணங்கள் ஆகிய இவையெல்லாம் போக்தாவாகிய சீவனுக்குப் போகத்தின்

---

ஆகமுங் கரணமும் விடய மானதும்
போகமுண் பதற்கரும் புருடற் காகுநின்
றேகுமுன் வினையினு லென்றி யம்புறும்
பாகுமென் மொழியமர் பாக னுகமம் (சதமணிமாலை)

दुःख [मोह] भोगनिमित्तं स्रक्चन्दनाद्यभावः । दुःखभोग निमित्तं अहिकण्टकादिभावः । सुखभोगनिमित्तं †पुत्रान्नादि भावः । सुखमोहभोगनिमित्तं स्रक्चन्दनादिभाव इति ।

य(अ)त्र कर्मणां यथा शरीरादि जनकत्वं तथा शरीरि*णामेव कर्मजनकत्वात् ‡कर्मशरीरयोर्बीजाङ्कुरसन्तानस्यै (स्ये) व कर्मशरीरसन्तानस्यापि प्रवाहानादित्वमवसेयम् ।

तदुक्तं सर्वज्ञानोत्तरे—

"कर्मणा तु शरीराणि भावात् कर्मोदयोभवेत् ।
पूर्वोपार्जितकर्मणां(कृत्यानां)भावः संयोगकारकः ॥ इति ।

---

பொருட்டுக் கன்மத்தின் காரணமாக ஏற்படுகின்றன. கன்மம் இல்லை என்றால், சரீர முதலியவைகளும் ஏற்பட மாட்டா. இங்கு உம்மையால் எந்தப் போகத்திற்கும் காரணம் கன்மமே என்பது தெரிவிக்கப்பட்டது.

உதாரணம்:-

சுகபோகத்திற்கு நிமித்தம் பாம்பு, அரிட்டம் முதலியவை இல்லாமை. துக்கபோகத்திற்கு நிமித்தம் புத்திரன் உணவு முதலியன இல்லாமை துக்க மோக போகத்திற்கு நிமித்தம் மாலே. சந்தனம் முதலியன இல்லாமை. துக்கபோக நிமித்தம் பாம்பு. அரிட்டம் முதலியன இருத்தல். சுகபோக நிமித்தம் புத்திரன் உணவு முதலியன இருத்தல். சுக மோகம் போக நிமித்தம் மாலே, சந்தனம் முதலியன இருத்தல்.

இங்குக் கன்மமானது சரீரம் முதலியவற்றைத் தோற்றுவிப்பதில் எவ்வாறு காரணமாகிறதோ, அதே போன்று சரீரம் உள்ளவர்களே கன்மத்தைத் தோற்றுவிப்பதால் கன்மமும் சரீரமும், வித்தும் முளையும் போல வருவதால் இத்தொடர்பு பிரவாஹாநாதித்வம் எனப்படும்.

---

† ख पुत्राद्यन्नादि   * शरीरादिनामपि

‡ कर्मशरीरयो: ख पुस्तके नास्ति

अन्यत्र —

"नित्यद्वन्द्व समायुक्तमन्यो [न्यं] वअ (ट) बीजवत्" ।

इति । २०५

एवं बद्धात्मनः पशुदर्शनमात्रयुक्तां शिवादिदर्शन रहितां परमावस्थां सूत्रान्तरेणाह—

एवं मायाञ्जनस्था(स्थो)णुन्नि(र्नि)जदोषतिरस्कृतः ।

याति तन्मयतां तेषु मायाभोगेषु रञ्जितः ॥ सू. ४३

एवम्- उक्तप्रकारेण, कलया प्रवर्तितः विद्यया विव (वे)च्य बुद्धयादिभिरुपस्कृत्येत्यर्थः । मायाञ्जनस्थः-मायाञ्जन पदेन मायायां यानि तत्त्वानि, तानि परिगृह्यन्ते । तानि च कापि ? [कलादीनि] आत्मसंसर्गादि (त) शुद्धस्फटिकप्रख्य- मप्यणुं जपाकुसुमाद्युपाधिवत् स्वनिर्भासं कुर्वन्ति । बुद्ध्या आत्मानमञ्जयन्तीत्यञ्जनस्थ (नानि) इत्युच्यते (न्ते), तेषु तिष्ठति अतिरमणीय बुद्धया च वर्तत इति मायाञ्जनस्थः,

---

ஸர்வ ஞானோத்தரம்

"கன்மத்தால் சரீரங்கள் ஏற்படுகின்றன. சரீரத்தால் கன்மம் ஏற்படுகிறது. முற்பிறவியில் செய் யப்பட்டுக்கிடந்த நல்வினை தீவினைகளின்பயன் இப் பொழுதுள்ள தனுகரணங்களுக்குக் காரணமாக வந் துள்ளது" என்று கூறுகிறது.

பிறிதோரிடத்தில்

"சரீரமும் கன்மமும், ஆலமரமும் விதையும் போல, என்றுமே ஒன்றுக்கொன்று தொடர்பு உள்ளனவாகவே உள்ளன" என்றும் கூறப்பட்டுள்ளது காண்க. 205

இவ்வாறு கட்டுண்ட சீவனுக்கு சிவஞான மில்லாது பாசஞானத்தோடு மட்டும் கூடிய நிலையை மற்றொரு சூத்திரத்தால் கூறுகின்றார்.

---

क * मायाजितस्सोणु·

तादृशः अणुः - आत्मा, निजदोषतिरस्कृतः निजेन- सहजेन, दोषेण- मलेन- तिरस्कृतः- अथो(धो)नियमितः नोर्ध्वं शिवादिकं पश्यतीत्यर्थः । तादृशस्सन् रञ्जितः तैर्मायात्मकैर्भोग क्रिया विषयै रञ्जितः सन् तेषु मायाभोगेषु तन्मया (य) तां याति तदव्यतिरिक्तं तदभिन्नमात्मानं मन्यते, तदनुग्रहेणानुगृहीतं तदुपघातेन चोपहतमात्मानं मन्यत इत्यर्थः । २०६

---

ஏவம் மாயாஞ்ஜநஸ்தோZணுர் நிஜதோஷ திரஸ்க்ருத: l
யாதி தந்மயதாம் தேஷு மாயாபோகேஷு ரஞ்ஜித: ll

இவ்வாறு சொல்லியபடி மாயேயமான கலாதிகளால் ஈடுபடுத்தப்பட்டு வித்தையால் உபகரிக்கப்பட்ட என்பது பொருள். இங்கு ''மாயாஞ்ஜன'' என்ற சொல்லால் மாயையில் உள்ள கலாதி தத்துவங்கள் கொள்ளப்படுகின்றன. படவே, செம்பருத்தி மலர் தன்னை அடுத்துள்ள படிகத்தைத் தன்னிறமுடைய தாக்குமாறுபோல அக்கலாதிதத்துவங்களும் தம் சம்பந்தத்தால், படிகம் போன்ற நின்மலமான ஆன்மாவை தன் தன்மையற்றதாகச் செய்துவிடுகின்றன. விடவே, ஆன்மாவும் அவையே உயர்ந்தவை என்று எண்ணி அதில் அழுந்தி, இயல்பாய் பொருந்தியுள்ள ஆணவ மலத்தால் கீழ்நோக்கு உடையவனுகி, மேலுள்ள சிவபெருமானை உணர்வதில்லை. அத்தகைய ஆன்மா மாயேயமாகிற போகங்களில் ஈடுபட்டு அஃது அதுவாகவே ஆகிறுன்; அதனின் வேறு இல்லாதவனுகத் தன்னை அறிகிறுன். விடயசுகம் கிடைத்தபொழுது அருள் கிடைத்ததாகவும் இல்லாதபொழுது தனக்குத் தீமைவந்துள்ளதாகவும் நினைக்கிறுன். 206

---

மாயையை யடைந்தியன் மலம றைப்பவ
ணுயுறு மணுமிகு மாசை யாளனுய்ப்
போயுகு மாயையின் போக மெய்துவ
ணுயிடைத் தன்மைய ணுக மேவியே

एवं सकलावस्थस्य बद्धात्मनः [उचितार्थकानि नामानि सूत्रान्तरेणाह]—

*संसारी विषयी ‡भोक्ता क्षेत्री क्षेत्रज्ञ एव च ।

शरीरीचेति बन्धा(द्धा)त्मा सकलश्चोच्यते बुधैः ॥ सू ४४

[बद्धात्मा - बद्धः आत्मा] स्वरूपं यस्य सः बद्धात्मा । कलादिभिः सह वर्तत इति सकलः । तादृशः सकल एव आत्मैव संसारी शरीराद्यादानह (हा)नेन संसरतीति संसारी । विषयी विषयोऽस्य भोग्यत्वेन विद्यत इति विषयी । भोगान् भुङ्क्त इति भोक्ता । क्षेत्री क्षेत्रमस्य शक्तिव्यक्तिमनोऽधिकरणमस्तीति क्षेत्री । क्षेत्रज्ञः - क्षेत्रं पाशजालं भोग्यत्वेनोपस्थितं

---

இவ்வாறு சகல நிலையிலிருக்கின்ற உயிர்களுக்கு ஏற்றவான வேறு பெயர்களை மற்றொரு சூத்திரத்தால் கூறுகின்றார் :

* ஸம்ஸாரீ விஷயீ போக்தா க்ஷேத்ரீ க்ஷேத்ரஜ்ஞ ஏவச ।
சரீரீசேதி பத்தாத்மா ஸகலஸ்சோச்யதே புதை : சூ 44

பந்தாத்மா (பத்தாத்மா) அன்மொழித்தொகை. கலாதிகளோடு கூடியவன் சகலன். பாசங்களால் கட்டுண்ட சகலனான சீவன் பிறப்பிறப்பென்னும் வகையில் போக்குவரவு புரிதலால் 'ஸம்ஸாரி' என்றும் விடயங்களைப் போக்கியமாகக் கொண்டதால் விடயி' என்றும், போகங்களை நுகர்வதால் 'போக்தா' என்

---

* इदं सूत्रं मातृकायां नोपलभ्यते परन्तु व्याख्याकेवलं दृश्यते अतः व्याख्यामनुसृत्य सूत्रमत्र निवेशितम् ।

‡ क भोगी

* [போத்துறு விடயியைப் புணர்கு டும்பிதான்
கேத்திரி சரீரியென் கின்ற பேரொடு
வாய்த்துள சகலனென் றிசைப்பர் மாயையி
னூர்த்துள வணுவினை யறிஞர் தாமரோ.]

जानातीति क्षेत्रज्ञः । शरीरमस्य भोगायतनत्वेन विद्यत इति शरीरी इति च बुधैरुच्यते । तत्तन्निमित्ताश्रयेण शास्त्रव्यवहारा एव ताः संज्ञा इत्यर्थः

सुप्रभेदेतु —

त्रिमलैर्बध्यते चात्मा सकलः परि *चारि(वादि) तः ।
सकलश्चेति बद्धात्मा संसारि (री) विषया (यी) तथा ॥
क्षेत्री क्षेत्रज्ञ भोक्ता च पशुज्ञा (ज्ञा) नी तथैव च ।
भोगी चैव शरीरीच आत्मपर्याय वाचकः ॥इति । २०७

इत्थं सकलावस्थमात्मानं निरूप्य शुद्धावस्थां (स्थं) निरूपयितुं तदुपादानभूतं प्रथमं शक्तिपातं मृगेन्द्रसूत्र सार्धद्वयेन दर्शयति—

तमश्शक्त्यधिकारस्य निवृत्तेस्त प(त्प)रिच्युतौ ।
व्यनक्ति दृक्क्रियानन्त्यं जगद्बन्धुरणोः शिवः ॥ सू. ४५

---

றும், சக்தியை வெளிப்படுத்துகின்ற மனத்திற்கு ஆதாரமாக இருப்பதால் 'க்ஷேத்ரி' என்றும், பாச சமூகங்களை அனுபவப் பொருள்களாக அறிதலால் 'க்ஷேத்திரஞ்ஞன்' என்றும், போகத்திற்கு இடமாகச் சரீரத்தைப் பெற்றிருத்தலால் 'சரீரி' என்றும் அறிஞர்களால் சொல்லப்படுகின்றான். அந்த அந்தக் காரணங்களைக் கருதியே ஆகம நூல்களில் பெயர்கள் குறிப்பிடப் பட்டுள்ளன என்று கண்டுகொள்க.

இவ்வாறே சுப்பிரபேதத்திலும் மும்மலங்களால் கட்டுண்ட ஆன்மா சகலன் என்று கூறப்படுகிறான், அவன் ஸம்ஸாரி, விடயி, க்ஷேத்ரி, க்ஷேத்ரஞ்ஞன், போக்தா, பசு, ஞானி, போகி, சரீரி என ஆன்மா வின் ஒரு பொருள் உடைய பல சொற்கள் கூறப் பட்டுள்ளன. 207

---

* ख परिवारितः

तमश्शक्त्यधिकारस्य तमश्च शक्तिश्च तमश्शक्ती, तयोरधिकारः तमश्शक्त्यधिकारः तस्य तमसः- मलस्य शक्तेः भगवत्सम्बन्धिन्यास्तिरोधानशक्तेश्च योऽधिकारः न्यग्भ(ग्भा)वना (न)‡व्यापृतत्वं तस्येत्यर्थः । निवृत्तेःनिवृत्तिर्विरामः तस्माद्धेतोः तत्परिच्युतौ तस्याति (स्ति) *रोधनादर्शनशक्तेः परिच्युतिः- कैवल्याभिमुखीभावः तस्यां सत्यां, जगद्बन्धुः– जगतो बन्धुः जग दुद्धरणप्रवणः, शिवः- परमेश्वरः, अणोः - आत्मनः, दृक्क्रियानन्त्यं दृक् च क्रिया च दृक्क्रिये दृक्क्रिययोरानन्त्यं परिपूर्णत्वं, व्यनक्ति प्रकटीकरोति । तयोरेवानन्तयोर्दृक्क्रिययोर्मलावच्छिन्नत्वात्

இதுகாறும் சகல நிலையில் உள்ள சீவனை விளக்கி, இனிச் சுத்த நிலையிலுள்ள சீவனைக் கூறத் தொடங்கி அதற்கு முதற்காரணமான சக்தி நிபாதத்தை மிருகேந்திராகமத்திலுள்ள இரண்டரைச் சூத்திரத்தால் விளக்குகின்றார் :

* தமஸ்சக்த்யதிகாரஸ்ய நிவ்ருத்தேஸ்தத் பரிச்யுதௌ I
வ்யநக்தி த்ருக்கிரியாநந்த்யம் ஜகத்பந்துரணோஸ்சிவ: II சூ 45

तमश्शक्त्यधिकारस्य (தமஸ்சக்த்யதிகாரஸ்ய) இஃது உம்மைத்தொகையுடன் கூடிய ஆறும் வேற்றுமைத் தொகை. ஆணவமல சக்தி தேய, திரோதன சக்தியின் அதிகாரமாகிய மறைத்தலும் நீங்க, வீடுபேற்றில் விருப்பம் நிகழும். அப்பொழுது பரமகருணாநிதியாகிய சிவபெருமான் உயிர்களுக்கு ஞானக்கிரியைகளின் பரிபூர

‡ ख न्यग्भावनव्यापृतत्वं  * (ख) तिरोधानात दशन

* [இறைவன் சத்தி யிருளது நிலைமை
யொழிய மற்றது கழிதலு முயிர்க்கு
விரியு மறிவுந் தொழிலும் விளக்கும்.]

[ஸ்ரீலஸ்ரீ வெள்ளியம்பலவாணசுவாமிகள்]

* தீதிருட் சத்திதன் செய்கை மீட்சியா
லாதிநற் சத்தியி னகற்சி யிற்பெரும்
போதமெய்க் கிரியைக டிகழ்த்தும் பொற்புற
மூதுயிர்க் குலகுரு வாகு முன்னவன். [சதமணிமாலை]

आवृता [नन्त्य] न्त्यो(यो) मलपरिपाकेन आवरणापगमात् अभिव्यक्तिः क्रियते, नत्वपूर्वतया उत्पाद इत्यर्थः । अनेन कर्मनाशे मलपरिपाके च सति भगवतोऽनुग्राहिका शक्तिः पशुषु पततीत्युक्तं भवति ।

तदुक्तं पौष्करे—

कर्मनाश (शा) न्मलस्यापि विपाके सहकारिण[:] ।
पतत्युन्मीलनी शक्तिस्तदानुग्रहरूपिणी ॥ इति । २०८

शक्तिपातस्य दुर्ज्ञेयतया तस्य ज्ञापकानि दर्शयति—

येषां शरीरिणां शक्तिः पतत्यविनिवृत्तये ।
तेषां तल्लिङ्गमौत्सुक्यं मुक्तौ द्वेषो भवस्थितौ ॥ सू ४६
भक्तिश्च शिवभक्तेषु श्रद्धा तच्छासके विधौ ॥ सू ४७

---

ணத்தன்மையை வெளிப்படுத்துகிருர். உயிர் ஞான க்ரியைகளின் பரிபூரணத்தன்மையை உடையதாய் இருந்தபோதிலும், அது மலத்தோடு கூடியிருப்பதால் ஞானக்ரியைகளின் பரிபூரணத்தன்மை மறைக்கப் பட்டிருக்க, மலபரிபாகம் ஏற்பட்டபொழுது, ஆணவ மலத்தடை நீங்குவதால், ஆன்மாவுக்கு ஞானக்ரியை களின் பரிபூரணத்தன்மை வெளிப்படுகிறது; புதிதாகத் தோன்றவில்லை என்பது பொருள். இதனுல் கன்ம நாசமும் மலபரிபாகமும் ஏற்பட்டபொழுது சிவபெருமா னுடைய அனுக்கிரகசக்தி உயிர்களிடத்தில் பதிகிறது என்பது சொல்லப்பட்டதாகிறது.

பௌஷ்கரம்

"கன்மம் நாசமுற்று, அக்கன்மத்திற்கும் உமி தவிடு போல் ஸஹகாரியாயிருந்த மலமும் பக்குவப் பட்டபொழுது, ஞானக்ரியா சக்திகளைத் தூண்டுகின்ற தும் தீக்ஷை முதலியவைகளுக்குக் காரணமாகவுள்ளது மான அனுக்கிரஹ சக்தி ஆன்மாவினிடத்தில் பதி கிறது" என்று கூறுவது காண்க. 208

शरीरिणां शरीरमस्यास्तीति शरीरी तेषां शरीरिणां, शक्तिः- पारमेश्वरी शक्तिः, अविनिवृत्तये विनिवृत्तिः पुनराविर्भावः अविनिवृत्तिः [अपुनराविर्भावः] अविनिवृत्तये अपुना (न)रावि- र्भावाय, [पतति] अत्र (त्रा) शरीरिणां तावद् गुरुभिः शक्ति- पातस्य दुर्लक्ष्यत्वात् शरीरिणामित्युक्तम् । तेषां शरीरिणां, मुक्तौ मोक्षे, औत्सुक्यं उत्कण्ठा, भवस्थितौ भवे-संसारे स्थितिः- वर्तनं तस्यां, द्वेषः - वैराग्यं, शिवभक्तेषु - शिव भक्तिपरेषु, भक्तिश्च तच्छासके सः शिवः शासकः यस्य तस्मिन् तच्छासके विधौ -शास्त्रे, शिवागमेष्वित्यर्थः । तत्र श्रद्धा च तल्लिङ्गं शक्ति पातस्य लिङ्गं चिह्नम् । एभिर्लिङ्गैर्मन्दधियोऽपि शरीरिणां शक्तिपातमनुमिमतां इति भावः

---

சக்தி நிபாதத்தை அறியமுடியாதாகையால் அதைப் புலப்படுத்தும் அடையாளங்களை மேல்வரும் சூத்திரத்தால் கூறுகின்றார்.

யேஷாம் சரீரிணும் சக்தி: பதத்யவிநிவ்ருத்தயே
தேஷாம் தல்லிங்கமௌத்ஸுக்யம் முக்தௌ த்வேஷோபவஸ்திதௌ
பக்திஸ்ச சிவபக்தேஷு ச்ரத்தா தச்சாஸகே விதௌ.

சரீரம்எடுத்தவர்களுக்கு மீண்டும் பிறப்பின்மைக்காகச் சிவபெருமானின் திருவருட் சக்தி பதிகிறது. சரீரமில்லாவிடத்துத் திருவருட்சக்தி விழுவது காணமுடியாமையால், இங்குச் சரீரி என்று கூறப்பட்டது. அவர்களுக்கு வீடுபேற்றில் விருப்பமும், பிறவியில் வெறுப்பும், சிவனடியார்களிடத்துப் பக்தியும், சிவபெருமானால் அருளிச் செய்யப்பட்ட

---

† अनुमिन्वन्ति 'ख' पुस्तकपाठः

[உயிரின் பிறவி யொழிதற் பொருட்டு
நிகழுங் காலைச் சத்திநி பாத
மொன்றிடை விருப்பு முலகியல் வெறுப்பு
மன்பு மரனடி யார்வயிற் சைவ
மென்பத னிலைகொண் டெழுதலுங் குறியே.]

2. சத்திமன் னியகுறி யொருவர் தம்மிடை
முத்தியின் விழைவுள முனிவு டம்பினிற்
பத்தியிங் குயர்சிவ பத்தர் பாலெழின்
மெய்த்திறம் விதித்திடும விதியி னேயமே [சதமணிமாலை]

श्रीमत्स्वायंभुवे—

"क्षीणे तस्मिन् धिया सास्यात् परं निश्रेयसं प्रति" इति २०९

एतच्छक्तिपातस्य प्रयोजनं मतङ्गसूत्र चतुष्टयेनाह—

तन्निपाताच्च तस्यद(स्येत्थ)मज्ञस्यप्यभिलाषिणः ।
बुद्धिरुत्पद्यतेऽकस्माद्विवेकेनात्मवर्तिना ॥ सू ४८

इत्थं - एवं प्रकारेण, अज्ञस्य - अनात्मन्यात्माभिमान-युक्तस्य, अभिलाषिणः [अभिलाष] इच्छा यस्य तादृशस्यापि तस्य -सकलात्मनः, तुविशेषोऽस्ति? तन्निपातात् तस्या[ः]शक्तेः

---

சிவாகமங்களிடத்து அளவிறந்த பற்றும் அடையாளங்களாகும். இவ்வடையாளங்களால் மந்த மதியினரும் சீவனுக்குச் சக்திநிபாதம் ஏற்பட்டதை அறிகின்றனர்' என்பது பொருள்.

ஸ்ரீமத் ஸ்வாயம்புவம்

"ஞானத்தால் மலத்தின் அதிகாரம் குன்றிய பொழுது சக்தியானது பரமுக்தியின் பொருட்டுப் பதியும்" என்று கூறுவதையும் ஒப்புநோக்குக. 209

சக்தி பதிதலால் ஏற்படும் பயனை மதங்காகமத்தின் நான்கு சூத்திரங்களைக் கொண்டு விளக்குகிறார்.

* தந்நிபாதாச்ச தஸ்யேத்த மஜ்ஞஸ்யாப்யபிலாஷிண: ।
புத்திருத்பத்யதேzகஸ்மாத் விவேகாநாத்ம வர்த்திநா ॥ சூ 48

இவ்வாறு ஆன்மா அல்லாதவற்றிலும் ஆன்ம பாவனை செய்த அஞ்ஞனும் விஷயத்தில் விருப்ப முடையவனுமான ஸகலனுக்கும் சக்திநிபாதம் ஏற்பட்டதால், ஆத்மாவிஷயமான அறிவால் 'அநித்திய மானதும் அசுத்தமானதும் துக்கமானதும் ஆன்மா அல்லாததும் ஆன மாயேயமாகிய சரீரத்தினின்றும்

---

* [அறிவில ஞயினு மவற்குச் சத்திவீழ்
வுறுதலாற் றனனிடை யுறுமு ணர்ச்சியான்
மறிவுறு மவாவினிவ் வாறு புத்திதான்
செறிவுறுங் காரண மின்றிச் செப்பினே.] [சதமணிமாலை]

निपातात् निपातनातोद्धेः, आत्मवर्तिना आत्मविषयेण, विवेकेन-अनित्याशुचिदुःखानात्मभूतायाः प्रकृतेरस्यो (न्यो) [हं] चेतनात्मकः पुरुषः स्वतोऽवभासमानः परमेणोदित इत्येवंविधेन विवेकेन इत्यर्थः । तेन युक्त इति शेषः । बुद्धिः- मतिः, अकस्मात्- अकारणात, उत्पद्यते - जायते । तत्र शक्तिपात-व्यतिरेकेण हेत्वन्तरं नास्तीत्यर्थः । २१०

इत्थं विवेकानन्तरमुत्पद्यमानं कार्यमाह—

विवेकिनो विरक्तस्य जिज्ञासा चोपजायते ।

जिज्ञासोपेत चैतन्यं पशुं संसारसागरात् ॥ सू ४९

जिघृक्षया युक्तीति ? [युनक्त्येनं युक्तं प्रेरयति प्रभुः] सू ५०

विवेकिनः - पूर्वोक्त विवेक बुद्धियुक्तस्य, विरक्तस्य- संसारे वैराग (ग्य) [व]तश्च, जिज्ञासा -ज्ञातुमिच्छा जिज्ञासा प्रधा नात्मक संसार निवृत्तिहेतुरीश्वर पुरुष विषय ज्ञानेच्छेत्यर्थः ।

---

வேறுபட்டவன் யான்; யான் இயற்கை அறிவுடையேன்; பரமேச்வரன் திருவருளால் பிறப்பெடுத்தவன்' என்ற விவேகத்துடன் கூடிய புத்தி வேறு காரணமின்றியே ஏற்படுகிறது. ஆதலால் இதற்குத் திருவருட்சக்தி பதிதலேயன்றி வேறு காரணம் இல்லை என்பது பொருள். 210

இத்தகைய ஞானம் ஏற்பட்ட பிறகு உண்டாகும் செயலைக் கூறுகின்றார்:

விவேகினோ விரக்தஸ்ய ஜிஜ்ஞாஸா சோபஜாயதே ।
ஜிஜ்ஞாஸோபேத சைதன்யம் பசும் ஸம்ஸார ஸாகராத் ॥ சூ 49
ஜிக்ருக்ஷயா யுக்தீதி ?யுநக்த்யேநம் யுக்தம் ப்ரேரயதி ப்ரபு: ॥ சூ 50

---

[விரத்தனும் விவேகிபா லறிவி ருப்புறு
மிருத்தியி னறிவுறு மவாவு ளான்றனைக்
கருத்தழி பவக்கடல் கடத்து வானெடு
பொருத்திநின் றியக்குறும் பொருளி லீசனே.] [சதமணிமாலை]

सा उपजायते -उत्पद्यते- । जिज्ञासोपेतचैतन्यं- जिज्ञासया उपेतं- सहितं, चैतन्यं यस्य तं, पशुं- आत्मानं, संसारसागरात्- संसार एव सागरः समुद्रः तस्मात्, जिघृक्षया- ग्रहीतुं उद्धर्तुं इच्छया, युनक्ति योजयति । भगवानितिशेषः । पुनः किं करोतीत्यत आह एनं युक्तं प्रेरयिता (यति) प्रभुरिति । युक्तं एनं- पशुं, प्रभुः परमेश्वरः, प्रेरयिता (यति)आचार्यं प्रति प्रेरयतीत्यर्थः । २११

आचार्यशिष्ययोरुभयोरपि सम्बन्धसम्पादक ईश्वर एवेत्याह

प्रेरणे प्रेरकः श्रीमान् द्वयोरपि स मन्त्रराट् ।
अनुग्राह्यस्य विनये तथानुग्राहकस्य च ॥ सू ५१
कारुण्या(ण्ये) त्वनयोर्यस्मात्तयोर्योग स(स्तु)दुर्लभः ॥
सू ५२

---

முன்சொல்லப்பட்ட விவேகபுத்தியோடு கூடிய வைராக்கியமுற்ற சீவனுக்கு, சிறப்பாக ஸம்ஸாரத்தி னின்றும் விடுதலைக்குக் காரணமான சிவபெருமானைப் பற்றியும் ஆன்மாவைப் பற்றியும் அறிவதில் ஆசை யுண்டாகிறது இவ்வாருன விருப்போடு கூடிய அறி வுடைய ஆன்மாவைப் பிறவிக்கடலிலிருந்து ஏற்று வதற்குச் சிவபெருமான் விரும்புகிருர், இங்குச் சிவ பெருமான் என்பது வருவித்துக்கொண்டது. மேலும் என்ன செய்கிருர் எனில், அத்தகைய ஆன்மாவை ஆசாரியரை நாடிச்செல்லுமாறு தூண்டுகிருர் என்பது. 211

ஆசாரியர் மாணவர் இருவர்களுடைய தொடர்பை உண்டுபண்ணுகிறவர் சிவபெருமானே என்பதை மேல்சூத்திரத்தால் கூறுகின்ருர் :

श्रीमान् सर्वज्ञत्वादै(द्यै) श्वर्ययुक्तः, मन्त्राणां राट्-मन्त्र नायकः, मः प्रभुः, प्रेरणे प्रेरक कर्मविषये, द्वयोरपि शिष्याचार्ययोरुभयोरपि, प्रेरकः । तयोः प्रेरणांशे विशेषमाह- अन्वित्यादि । अनयोः- शिष्याचार्ययोर्मध्ये, अनुग्राह्यस्य- अनुग्रहयोग्यस्य, विनये विशिष्टो नयो विनयः गुरु शुश्रूषात्मकः तस्मिन् प्रेरक इत्यनुषङ्गः । तथैव अनुग्राहकस्य अनुग्रह- कर्तुराचार्यस्य च, कारुण्ये करुणैव कारुण्यं चातुर्वर्ण्यादित्वात् [ष्यन्] प्रत्ययः तस्मिन् । तु शब्दादनुग्रहेच्छायामपि प्रेरक इत्यनुषङ्गः । तथा च प्रेरकः शिव एव अनुग्राह्यानुग्राहकयोः

---

* ப்ரேரணே ப்ரேரக: ஸ்ரீமாந் த்வயோரபி ஸமந்த்ரராட் ।
அநுக்ராஹ்யஸ்ய விநயே ததாநுக்ராஹகஸ்யச ॥ சூ 51।
காருண்யே த்வநயோர் யஸ்மாத் தயோர்யோகஸ் ஸுதுர்லப: சூ 52

முற்றறிவு முதலிய ஐச்வர்யத்தோடு கூடியவரும் மந்திரங்களுக்கெல்லாம் தலைவருமாகிய சிவபெருமான் குரு, சீடன் இவ்விருவர்களுக்கும் சம்பந்தத்தைச் செய்வதில் பிரேரகராவார். இவர்களை ஏவுவதில் சிறப்பினைக் கூறுகின்றார். சீடன் ஆசாரியர் இவ்விருவர்களுள் அனுக்கிரகத்திற்கு யோக்கியமாகவுள்ள சீடனைக் குருவின் பணிவிடை என்னும் விநயத்திலும், ஆச்சாரியரை அனுக்கிரஹம் செய்யும் கருணையிலும் கூட்டிவைக்கிறார். இங்கு ‘ तु ’ (து) என்னும் மிகைச் சொல்லால், ஆசாரியரை அனுக்கிரகம் செய்ய வேண்டுமென்ற விருப்பத்திலும் கூட்டிவைக்கிறார் என்பது

---

* [இருவர்தம் மிடத்தினு மிறையி யக்குவ
னருளருள் செய்பவற் கடங்கு நற்செயல்
பரிவொடு மருள்செயப் படுமவ் வற்கிவர்
மருவரும் யோகமோ வரிது மண்ணினே.] [சதமணிமாலை]

सम्बन्धं करोतीत्यर्थः । तत्र हेतुमाह — यस्मादिति । यस्मात् कारणात् तयोः -शिष्याचार्ययोः [योगः] सम्बन्धः, सुदुर्लभः - ईश्वरं विना सुदुर्घटः, तस्मात् ईश्वर एव सम्बन्ध जनक इत्यर्थः ।

तथा पौष्करे—

वैराग्यं जायते क्षिप्रं संसाराद्दुःख सागरात् ।
दिदृक्षा जायते शम्भोः पादपङ्कजयोरपि ॥
कदा द्रक्ष्यामि देवेशं मोक्ष्येऽहं बन्धतः कदा ।
को वा दर्शयिता शम्भोरिति संजायते मतिः ॥
एवं संसारतो भीतमनुगृह्णाति चेश्वरः ॥ इति । २१२

---

பெறப்படுகிறது. ஆகையால் சிவபெருமானே பிரேரகராக நின்று இருவர்களுக்கிடையே சம்பந்தத்தை உண்டுபண்ணுகிறார் என்பது பொருள். ஏனெனில், குருசீடருடைய சேர்க்கை சிவபெருமான் கூட்டுவித்தாலன்றி ஏற்படுவது அரிது. ஆதலால் சிவபெருமானே இவர்களுக்குச் சம்பந்தத்தை உண்டு பண்ணுகிறார் என்று அறியத்தக்கது.

பௌஷ்கரம்

"துன்பக் கடலான பிறவியினின்று வைராக்கியம் ஏற்பட, சிவபெருமானின் திருவடித்தாமரைகளைக் காணவேண்டுமென்ற விருப்பம் நிகழ்கிறது; 'எப்பொழுது சிவபெருமானைக் கண்குளிரக் காண்பேன்? எப்பொழுது பாசக்கட்டினின்று விடுபடுவேன்? எவர் சிவபெருமானைக் கண்டுகளிக்க உபாயங்களை உபதேசிப்பார்?' என்ற எண்ணம் ஏற்படுகிறது. இவ்வாறு பிறவியைக் கண்டு அஞ்சிய ஆன்மாவுக்குச் சிவபட்டாரகர் பாசங்களை நீக்கிச் சிவத்தன்மையை வெளிப்படுத்தி அருள்புரிகின்றார்" என்று கூறுவது உணர்க. 212

ननु शक्तेः कथं निपातः ? तस्या व्यापकत्वात्, व्यापकस्य वस्तुनः च्युतिलक्षणनिपातायोगात्; अग्नेरुष्णत्ववत् शिवसमवायिन्यास्तस्याः शिवात् च्युत्ययोगाच्च । किञ्च नित्यव्यापकशक्तेः सर्वथा सर्वकालं पश्वात्मसु स्थितत्वाद् युगपन्मुक्ति प्रसङ्गः । न च सा शक्तिः कस्मिंश्चिद् विशिष्टकाल एवानुग्रहकारिणीति वाच्यम् । तर्हि कालस्यैव मोक्षकर्तृत्वापत्तेः, शिवेन प्रयोजनाभावप्रसङ्गात् । अतः कथं शक्तिपात इति चेत् ।

मैवम् । द्विधा शब्दप्रवृत्तिर्गौणी मुख्येति । अत्र पात-शब्दप्रवृत्तिर्गौणी । यथा लोके अस्य दृष्टिरस्यां कामिन्यां पतितेत्युक्ते न सा पुरुषाद्विच्युता कामिन्यां पतिता दृश्यते, किन्तु दृश्य दर्शकसम्बन्धमात्रेण सम्बन्धाद् दृष्टिः पतितेत्युपचर्यते । तद्वदिह अस्मिन् पुंस्यपि

---

சக்தி எங்கும் வியாபித்திருப்பதால் அச்சக்திக்குப் பதனம் என்பது எவ்வாறு பொருந்தும்? எங்கும் வியாபகமாகிய வஸ்துவிற்கு நழுவி விழுதல் என்பது ஏற்படாதாகையாலும், அக்னியினிடத்துச் சூடுபோலச் சிவபெருமாஞேடு சமவாய சம்பந்தமுடைய அச்சக்திக்குச் சிவபெருமானிடமிருந்து பிரிந்து பதிதல் என்பது ஏற்பட முடியாமையாலும் சக்திநிபாதம் என்பது எவ்வாறு பொருந்தும்? மேலும் என்றுமுள்ளதும் வியாபகமாகவுள்ளதுமான சிற்சக்தி எப்பொழுதும் எக்காலத்திலும் ஆன்மாக்களிடத்தில் இருப்பதால் எல்லா உயிர்களுக்கும் ஒரே சமயத்தில் முக்தி ஏற்பட வேண்டி வரும். இன்னும் அச்சக்தி ஏதாவதொரு கால விசேடத்தில் அனுக்கிரக ரூபிணியாக ஆவாள் எனின், அதுவும் பொருந்தாது. அப்பொழுது காலமே மோக்ஷத்தைக் கொடுக்கும் என்பது ஏற்படவே, சிவபெருமாஞல் பயனின்மை நிகழுமே ஆதலால் சக்திபதனம் என்பது எவ்வாறு எனின் கூறுவம்:

பதனம் என்பதற்கு நீகொள்ளுமாறு பொருளன்று. சப்தபிரயோகம் கௌணம் எனவும், முக்கியம் எனவும்

अनुग्राह्यानुग्राहकत्वलक्षणसम्बन्धेन सम्बन्धात शक्तिः पतितेत्युपचारेण उक्ता, न मुख्यत इत्यदोषः ।

अयमेवार्थः शङ्कोत्तरतया किरणागमे स्पष्टं प्रतिपादितः ।

तद्यथा—

गरुड उवाच —

"शक्तिपाताद् भवेद्दीक्षा निपातो न विभुत्वतः ।
शिवस्य सर्वदैव स्थिता पशोः ‡
स्थितत्वात् सर्वदा शक्ति (क्ते) र्भवोच्छर्वित (च्छित्तिः)न किं भवेत् ।
कालोवा स च(चि) [व]ः प्रोक्तो यदिकालः शिवेन किम्"

ईश्वर उवाच—

उपचारेण शिवा (शब्दा) नां प्रवृत्तिरिति दृश्यते ।
यदा पुमान् विभुर्नित्यो विनष्टः शिवतां गतः ॥
एवं शक्तिनिपातोऽपि प्रोच्यते चोपचारतः ।

---

இருவகைப்படும் இங்குப்பதனம் என்ற சொல் கௌண மானது. எவ்வாறெனில், உலகில் இவனுடைய கண் இம் மடந்தைமேல் விழுந்தது என்று சொன்னால், அக்கண் புருடனிடமிருந்து நழுவி அம்மடந்தையிடம் விழுந்தது காணப்படவில்லை. பார்க்கப்படுகிறவனுக்கும் பார்ப்ப வனுக்கும் ஏற்படும் சம்பந்தந்தான் கண் (பார்வை) விழுந்தது என்று உபசாரமாகச் சொல்லப்படுகிறது. அதுபோலவே, ஆன்மாவினிடத்தும் அருளுக்குப் பாத்திரமானவன் அருளுகின்றவன் என்பதான சம் பந்தம் உள்ளதால், சக்திபதனம் என்று உபசாரமாகக் கூறப்பட்டது; வாச்சியப் பொருளாகக் கூறப்பட

---

‡ अवशिष्टः पद्यभागः मातृकायां लुप्तः

सिद्धान्तेऽपि—

यथार्कस्य प्रभास्सद्यो मेघजालेन वारिताः ।
तद्वद् ज्ञानात्मिका शक्तिः पाशजालैस्समावृता ॥
पक्वपाशेषु सुव्यक्ता पती (पति) तेत्युपचर्यते ॥ इति ।

शक्तिपा [तानन्तरं] अद्रिपातभीतवत् संसाराद्भीतः [शिष्यः] शिवं देशिकं गच्छति ।

किरणे

निपातभयतो यद्वद्वस्तुनः सहसा भवेत् ।
तस्मादन्यत्र यात्येव तथात्मा देशिकं प्रति ॥ इत्यादि ।

२१३

---

வில்லே. ஆதலால் குற்றமன்று என்க. இதுவே ஐயமும் விடையுமாகக் கிரணுகமத்தில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

கருடன் வினவுகிருர்:

"சக்திபாதத்தின் காரணமாகத் தீக்கை ஏற்படும். அச்சக்தியோ விபுவாக இருத்தலால் அதற்கு எவ்வாறு நிபாதம் ஏற்படும்? ஆன்மாவினிடத்தில் எப்பொழுதும் சிற்சக்திஇருத்தலால் பிறப்பறுதல் ஏன் நிகழக்கூடாது? அச்சக்தி பாதமும் சிலகாலத்தில்தான் நிகழுமெனின், காலமே போதுமே; சிவபெருமான் எதற்கு?" என்று.

அதற்கு ஈச்வரன் விடைகூறுகின்ருர்.

"சொல்லின் பிரயோகம் உபசாரமாகவும் காணப்படுகிறது. உதாரணமாக, ஆன்மா வியாபியாய் என்றுமுள்ளவன்; இவன் சிவத்தன்மையை அடைந்தான் என்று சொல்வது போல, சக்தியின் பதனமும் அவ்வாறே உபசாரமாகச் சொல்லப்படுகிறது'' என்று.

சித்தாந்தத்தில்

"சூரியனின் ஒளி மேகங்களால் மறைக்கப்படுவது போல, ஆன்மாக்களிடத்திலுள்ள ஞானக்ரியா சக்திகளும் பாசக்கூட்டங்களால் மறைக்கப்பட்டுள்ளன. பாசங்கள் பக்குவமுற்ற பொழுது அருட்சக்தி வெளிப்படுகிருள். அதைத்தான் பதனம் என்று உபசாரத்தால்

एवं शक्तिपातमुक्त्वा तदनन्तरभाविन्यां दीक्षया प्राप्तं शुद्धात्वस्थास्वरूपलाभं स्वायंभुवसूत्रेणाह—

स देशिकमनुप्राप्य दीक्षाविच्छिन्न बन्धनः ।

प्रयाति शिवसायुज्यं निर्मलो निरुपप्लवः ॥ सू ५३

सः - निश्रेयसप्राप्त (प्ति) कामः शक्तिपातवान् पुरुषः, देशिकं-शिवेच्छयाधिगतमेव गुरुं, अनुप्राप्य- अधिगम्य, दीक्षा-विच्छिन्नबन्धनः- दीक्षय (या) विच्छिन्नानि [बन्धनानि यस्य]स दीक्षाविच्छिन्नबन्धनः गुरोर्दीक्षामासाद्य दीक्ष (क्षा) तः त्रिमल-बन्धनानि विच्छिन्नानीत्यर्थः ।

---

கூறுகிறேம்” என்று கூறுவது காண்க.

சக்திபாதம் ஏற்பட்டபிறகு, மலே சரிந்ததால் பயந்த மனிதன் வேறுவழியில் செல்லுவது போல, பிறவி யில் பயமுற்றசீடன் குருவை அடைகிறுன். கிரணுகமத் திலும் இவ்வாறே கூறப்பட்டிருக்கின்றது அறிக. 213

இவ்வாறு சக்திபாதத்தைப் பற்றிக் கூறி, பின்னர் ஏற்படும் தீக்கையால் உண்டான சுத்தாவத்தையின் ஸ்வருபலாபத்தைச் சுவாயம்புவ சூத்திரத்தால் கூறுகின்றுர்:

* ஸ தேசிக மநுப்ராப்ய தீக்ஷாவிச்சிந்ந பந்தந: 1
ப்ரயாதி சிவஸாயுஜ்யம் நிர்மலோ நிருபப்லவ: 11 சூ 53

வீடுபேற்றை அடைய விரும்பியவனும் திருவருட் சக்தி தோயப் பெற்றவனுமாகிய சீவன் சிவபெரு மானின் தூண்டுதலால் எழுந்தருளிய ஆசாரியமூர்த்தி யை அடைந்து அவரிடமிருந்து தீக்கை பெற்று மும் மலங்களால் ஏற்பட்ட பந்தங்கள் நீங்கியவன் ஆகிருன்.

---

* [குருவை நண்ணி நற் றீக்கையி னுற்குலேந்
தொருவு பந்த முடைய வவனிவன்
மருவி நின்மல னுய்த்துயர் மாய்த்துறுந்
திரிவ றுஞ்சிவ சாயுச்சி யத்தையே] (சதமணிமாலே)

तथा वरुणापे (णप) द्धत्याम्—

"क्रियया वाथ शक्त्या वा दीक्षा सा सर्वतो मता ।
दीक्षया मुच्यते देही त्रिविधाद्भवबन्धनात्" ॥ इति ।

एवंभूतस्सन् अतएव निर्मलः- मलरहितः, तथाविधो-भूत्वा शिवसायुज्यं - मोक्षं शिवतुल्यत्वं,- प्रयाति- प्राप्नोति । अ (त) था चिन्त्यविश्वे—

दीक्षयित्वा विधानेन षट्त्रिंशत तत्त्वकोपरि ।
निष्कले निर्मले तत्त्वे योजयि (य) त्येव निश्चयः ॥ इति ।

अत्र 'निर्मल' इत्यनेन शुद्धावस्थाया [ः] केवलावस्थातो भेदो दर्शितः । निरुद्ध (प) प्लव इत्यनेन बद्धावस्थातो विशेषः इति । २१४

इत्थंभूत दीक्षाया एव मोक्षहेतुत्वं नतु ज्ञानादीनामिति सर्वज्ञानोत्तरसूत्रं दर्शयति—

तत्त्वैरेभिर्निबद्धात्मा सर्वं धर्मैश्च संयुतः ।
नान्येन शक्यते मोक्तुं वर्ज्य दीक्षां शिवात्मिकाम् ॥ सू ५४

---

வருணபத்ததி

"தீக்கை இருவகைப்படும்; கிரியாவதி, ஞானவதி என. தீக்கையால் சீவன் மும்மலங்களால் ஏற்பட்ட பிறவி என்ற கட்டினின்று விடுவிக்கப்படுகிறான்" என்று கூறுகின்றது.

இவ்வாறு மும்மலத்தினின்று விடுபட்டனாய்க் கொண்டு நின்மலன் ஆகிச் சிவனுக்குச் சமானமா யிருப்பதை அடைகிறான்.

சிந்தியவிச்வம்

"ஆசாரியர் சீவனை முறைப்படி தீக்கை செய்து முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்த தத்துவாதீத னான நின்மலமான பரசிவத்தில் சேர்ப்பிக்கின்றார்" என்று சொல்லுகிறது.

एभिः त [त्वैः - कलादिभिः] सर्वधर्मैः सर्वैश्च तत्तत्त्व-धर्मैर्भुवनादिभिश्च, संयुतः सहितः, निबद्धात्मा - अनादिमलेन प्रवाहरूपेण कर्मणा च नितरां बद्धो निबद्धः स चासौ आत्मा च निबद्धात्मा सम्बद्धात्मा, शिवात्मिकां- शिवस्वरूपां, दीक्षां देशिकव्यापाररूपां, वर्ज्य-वर्जयित्वा, अने(न्ये)न ज्ञानादिनोपायेन मोक्तुं- मोचयितुं न शक्यते ।

तथा —

'ज्ञानादिभिर्न मोक्षोऽस्ति तस्माद् दीक्षैव मोचनी ।
सर्वस्यानुग्रहकरः शिवो देव [ः] स्वभावतः ॥
दीक्षया चात्र मुक्तिः स्यात् सर्वेषां प्राणिनामिह ।
तस्मात्तु शिवसामर्थ्यान्मुक्तिः सर्वत्र सिद्ध्यति ॥

---

இந்தச் சூத்திரத்தில் 'நின்மலன்' என்ற சொல்லால், மலத்தோடு கூடிய கேவலாவத்தையினின்று வேறுபடுத்திச் சுத்தாவத்தையைக் கூறினர் என்க.

'நிருபப்லவ' என்னும் சொல்லால் பாசத்தோடு கூடிய நிலையினின்றும் வேறுபடுத்தினர் என்றுணர்க.

214

இத்தகைய தீக்கைதான் வீடுபேற்றிற்குக் காரணம்; ஞானம் முதலியவற்றுக்குக் காரணத்தன்மை இல்லை என்பதை ஸர்வஞானோத்தர சூத்திரத்தால் விளக்குகிறார்

* தத்வைரேபிர் நிபத்தாத்மா ஸர்வதர்மைஸ்ச ஸம்யுத: ।
நாந்யேந சக்யதே மோக்தும் வர்ஜ்ய தீக்ஷாம் சிவாத்மிகாம் ॥ சூ 54

---

* [தத்து வத்தின் தளைப்படு கின்றவ
னெத்தி றத்த தரும மிசையினுஞ்
சித்த நற்சிவ தீக்கையி னுலலான்
மெய்த்து கட்டு விடுப்பது வேறிலை] (சதமணிமாலை)

तथा निश्वासे—

स्नानेन निर्मलो मन्त्री जपात् सिद्धिर्नसंशयः ।
पूजायां(जया)सन्निधानेन(नं च)होमेन फलप्रदः(भागम)[वेत्]
ध्यानेन सर्वगं देवं योगैर्योगित्वमाप्नुयात् ।
व्रतेन कायसु (शु) द्धिः स्याद् दीक्षया मुक्तिरिष्यते ॥ इति

तथा पुराणे सौरसंहितायाम्—

'कृत्वा तु नैष्ठिकं (कीं) *दीक्षामविमुक्ते (ता) †वसन्ति ये ।
तेषां परपरमं ज्ञानं दद्यादन्ते परं पदम्" ॥ इति ।

---

கலாதிதத்துவங்களோடும் தத்துவ தருமமான புவனம முதலியவைகளோடும் கூடியவனும், பிரவாஹ ரூபமான ஸஹஜமலத்தினுலும் கன்மமலத்தினுலும் பந்திக்கப்பட்டவனுமான சீவனைச் சிவஸ்ரூபமான தீக்கையாலன்றி *வேறு ஞானம் முதலிய உபாயத்தால் முக்தியடைவிக்கமுடியாது.

அவ்வாறே

"ஞானம் முதலியவற்ருல் வீடுபேறு சித்திக்காது; தீக்கையால்தான் வீடுபேற்றை அடையமுடியும். அருள் பாலிப்பவர் சிவபெருமானே ஆவர். எல்லாப் பிராணிகளுக்கும் சிவதீக்கையால்தான் முக்தி ஏற்படுகிறது. ஆதலால் சிவபெருமானின் திருவருள்தான் முக்கியம்" என்று சாத்திரம் கூறுகின்றது காண்க.

நிச்வாசகாரிகை

உபாசிக்கிறவனுக்கு "நீராடுவதால் அழுக்குப் போதலும்" மந்திரஜபத்தால் மந்திரசித்தியும், பூசையால் ஸாந்நித்யமும், ஹோமத்தால் குறித்த பயனும், தியானத்தால் எங்கும் வியாபித்துள்ள இறைவனை உள்ளத்தில் காணுதலும், யோகங்களால் யோகித்தன்மையும், விரதத்தால் காயசுத்தியும், தீக்கையால் வீடுபேறும் சித்திக்கும்" என்று சொல்லுகிறது.

---

 * ख विमुक्ताः † ख निवसन्ति

• அபரஞானம்

स्कान्दे भृगुशापे च

नानाश्रम [कृत]ः कश्चिदुत्कर्षो विद्यते नृणाम् ।
परां दीक्षां विना शैवं (वीं) बन्धत्रयविमोचनीम् ॥
तस्मान्मुक्तिर्दीक्षयैव नाश्रमैर्नान्यकर्मभिः ॥

तथा ज्ञानतिलके—

'न दानैर्न तपो यज्ञैर्नव्रतैर्नियमैर्धृतैः ।
न स्नान तीर्थ सम्भूतैर्लक्ष्यते परमं पदम् ॥
अ (ना)नेकै पापसंवा (स्तपसां त्रा) तैर्लभ्यते पुण्यसञ्चयैः ।
बध्नन्ति सर्वथात्मानं को(को)शागारं कृमिर्यथा ॥" २१५

अयं मलपाकवशात् शक्तिपातकर्मणा दीक्षया मोक्षं याति, न तु ज्ञानादिभिरुपायैः तेषां दीक्षाङ्गत्वेन श्रवणात्,

---

ஸாரஸம்ஹிதா

"எந்த ஆன்மாக்கள் பந்தத்தினின்று விடுபடாமல் இருக்கின்றார்களோ, அவர்கள் மோக்ஷசாதனமான தீக்கையைப் பெற்றுப் பரஞானத்தையுமடைந்து வீடு பேற்றையும் அடைகின்றனர்" என்று கூறுவது காண்க.

ஸ்காந்தம் பிருகுசாபத்தில்

"மனிதர்களுக்கு ஆச்சிரமநிலையால் எந்த உயர்வும் இல்லை. சிவதீக்கையால் ஆணவ கன்ம மாயா பந்தங்கள் நீங்குகின்றன; வீடுபேறு கிட்டுகிறது. அஃது ஆச்ரமங்களாலும் கன்மங்களாலும் கிட்டுவதில்லை" என்று கூறப்பட்டுள்ளது.

ஞானதிலகம்

"தானம் தவம், வேள்வி, விரதம் நியமம், பல புண்ணிய தீர்த்தங்களில் நீராடுதல், பலவிதமான தவங்கள் நல்வினை முதலியவைகளால் வீடுபேற்றை அடையமுடியாது. வலை பட்டுப்புழுவைப் பந்திப்பது போல இவை ஆன்மாவைப் பந்திக்கின்றன." என்று கூறுகின்றது. 215

योगादेः शिवविषयस्य दीक्षया विनानुपपत्तेः, मलस्य च द्रव्यत्वेन चक्षुःपटलादिवत् ज्ञानमात्रेण निवृत्त्यभावात्, चक्षुर्वैद्य व्यापारेणै (णे) व दीक्षाख्येनेश्वर व्यापारेणैव निवृत्तिसिद्धेश्च । उक्तं श्रीमत्पौष्करे—

"दीक्षैव मोचयेत्पाशान् शिवत्वं च ददात्यणोः ।"

षट्सहस्रिकायामपि—

दीक्षैव मोक्षदा पुंसां कं ? चिदभिव्यक्तिकारिणी ॥

इति । २१६

दीक्षाव्यापारेणाभिव्यज्यमा[ना] त्मचैतन्यस्वरूपं मृगेन्द्र सूत्रेणाह—

कर्तृशक्तिरणोर्नित्या विभ्वी चेश्वरशक्तिवत् ।

तमच्छ(श्छ)न्नतयार्धे(र्थे)षु नाभाति निरनुग्रहा । सू ५५

---

இந்த ஆன்மா, மலம் பக்குவமுற்றதால் முறையாக சக்திநிபாதம் நிகழ, தீக்கையால் வீடுபேற்றை அடைகிருன். ஞானம் முதலிய உபாயங்களால் அதனை அடையமுடியாது; ஞானம் முதலிய உபாயங்கள் தீக்கைக்கு அங்கமாகச் சொல்லப்படுவதால் என்றறிக.

சிவபெருமானைக் குறித்துச் செய்யும் யோகம் முதலியவைகளும் சிவதீக்கை அன்றி ஏற்படாமையாலும், மலமும் திரவியமாக இருப்பதால் கண்ணிற்குப் படலம் போல ஞானமாத்திரத்தால் விலகாமையாலும், அது கண் மருத்துவருடைய செயலால் நீங்குவது போல, தீக்கை எனப்படும் ஈச்வர வியாபாரத்தாலேயே ஆணவமல நிவிருத்தி ஏற்படும்.

பௌஷ்கரம்

"தீக்கைதான் பாசங்களினின்றும் விடுவித்துச் சீவனுக்குச் சிவபேற்றினை அளிக்கிறது" என்று சொல்லுகிறது.

अणोः- आत्मनः, कर्तृशक्तिः- ज्ञानक्रियात्मिका शक्तिः, ईश्वरशक्तिवत् - ईश्वरस्य शक्तिस्तद्वत्, नित्या - आद्यन्तरहिता, विह्वा (श्वी) - व्यापिकाच । यद्येवं नित्यत्वाद् विभुत्वाच्चा सर्वदाह(भान) प्रसङ्गा (ङ्गः)

तथा—

व्यञ्जिका यत्र यत्रास्य शरीरं तत्र तत्र तु ।
भोग्यार्थं स्याद्गुणव्यक्तिव्यापित्वं तेन गम्यते ॥ इति ।

---

ஷட்ஸஹஸ்ரிகா

"ஞானசக்தியை வெளிப்படுத்துகின்ற தீக்கை தான் உயிருக்கு மோக்ஷத்தை அளிக்கிறது" என்று கூறுகிறது. 216

தீக்கை என்னும் செய்கையால் வெளிப்படுத்தப் படுகின்ற ஆன்மாவின் ஞானக்ரியா சக்தியின் இலக்கணத்தை மிருகேந்திர சூத்திரத்தால் கூறுகின்றார்.

கர்த்ருசக்திரணோர்நித்யா விப்வீ சேச்வரசக்திவத் ।
தமஸ்சந்நதயா1ர்தேஷு நாபாதி நிரநுக்ரஹா ॥ சூ 55

சீவனுடைய ஞானக்ரியா ரூபமான சக்தியானது சிவபெருமானுடைய சக்தியைப் போன்று முதல் முடிவு இல்லாதது; வியாபகமானது. இவ்வாறு நித்தியமாகவும் விபுவாகவும் இருக்குமானால் அதற்கு என்றும் பிரகாசித்தல் ஏற்படவேண்டிவரும்.

அவ்வாறே

"சீவனுக்கு எவ்வெவ்விடத்தில் கலாதி வியஞ்சகம் உண்டாம், அவ்வவ்விடத்தில் சுகதுக்க போகத்திற்காக சரீரமும் உண்டாம்; அவ்வவ்விடத்தில் ஞானக்ரியா சக்திகளின் தோற்றமும் ஏற்படுகிறது என்பதனால் அச்சக்தியும் வியாபகமானது என்று பெறப்படுகிறது. படவே, அது என்றும் பிரகாசிக்கவேண்டும் என வினவக் கூறுகின்றார்.

---

தாவில் கத்துரு சத்தி யுயிர்க்கிறை
வீவில் சத்தியி னித்த வியாபியா
மாவ வித்தை மறைத்தலின் மன்னருண்
மேவ ருத்தத் ததுவிளங் காதரோ] [சதமணிமாலை]

अत आह — अर्थेषु - विषयेषु करणीयस्वरूपेषु, तमच्छ(श्छ)न्नतया तमसा- अनादिमलेन, छन्नतया- आवृतत्वात, निरनुग्रहा- अनुग्रहा (हो) -व्यञ्जकः, तद्रहिता सती नाभाति- न भासते।

तदुक्तं रत्नत्रये —

"गलिते सर्वथा बन्धे विमुक्ते चाणवे मले।
सर्वार्थद्योतिका शक्तिः शिवस्येव विजृम्भते ॥" इति। २१७

आत्मशक्तेर्विभुत्वेऽपि तद्भास [स्य] व्यञ्जकाधीनत्वात सर्वज्ञतापि नास्तीति पराख्य सूत्रेण दर्शयति—

**विभुः सन् ज्ञानरूपोऽपि प्रदेशे वेत्ति येन तत्।**
**किञ्चिज्ज्ञ स्तेन सः प्रोक्तो व्यवधानानिदर्शनात्॥** सू ५६

---

அந்த ஞானக்ரியா சக்தி அநாதி மலத்தால் மறைபுண்டு வியஞ்சகம் இல்லாததாய்க் கொண்டு செய்ய வேண்டிய விஷயங்களில் பிரகாசிப்பதில்லை என்றறிக. இரத்தினத்திரயம்

"பாசங்கள் நீங்கவே, ஆணவமலமும் நீங்குகிறது. அப்பொழுது எல்லாவற்றையும் பிரகாசிக்கச்செய்கின்ற ஞானக்ரியாசக்தியானது சிவபெருமானின் ஞானக்ரியா சக்தி போல வியாபகமாய்ப் பிரகாசிக்கின்றது" என்று கூறுகின்றது. 217

ஆன்மாவின் சக்தி வியாபகமாயினும் அது விளங்க உபகரணம் வேண்டியிருத்தலால், அதற்கு முற்றறிவுத் தன்மையும் இல்லை என்பதைப் பராக்கிய சூத்திரத்தால் சொல்லுகிறுர்.

*விபுஸ்ஸந் ஜ்ஞாந ரூபோzபி ப்ரதேசே வேத்தி யேந தத் ।
கிஞ்சிஜ்ஞஸ்தேந ஸ: ப்ரோக்தோ வ்யவதாநாநிதர்சநாத் ॥ சூ56

---

* நிறைந்த ஞான நிலையுள ளுயினு
மிறந்து தானிடை யீடின்றிக் காண்கில
னறிந்து ளாஞே சிடத்தினி லாதலாற்
செறிந்து ளான்சிற் றறிஞ னெனவவன் (சதமணிமாலை)

ज्ञानरूपः ज्ञानमेव[रूपं]स्वरूपं यस्य सः ज्ञानरूपः । विभुः - व्यापकः, सन्नपि प्रदेशे - कलादिव्यञ्जकप्रदेशे, येन कारणेन तत् - ज्ञेयं, वेत्ति - जानाति, तेन - कारणेन सः- आत्मा, किञ्चिज्ज्ञः, किञ्चित् जानातीति किञ्चिज्ज्ञः, प्रोक्तः- प्रतिपादितः । तत्र हेतुमाह - व्यवधानानिदर्शनात् । व्यवधाने, व्यञ्जकरहितस्थले, अनिदर्शनात्- निदर्शनाभावात् ज्ञानाभावादित्यर्थः । २१७

यद्यात्मनो व्यञ्जकवशात् किञ्चिज्ज्ञत्वं, तर्हि दीक्षारूप व्यञ्जके सत्यपि सर्वज्ञत्वमात्मनो नस्यात्; व्यञ्जकत्वाविशेषात् इत्याशङ्कां दृष्टान्तपूर्वं व्यञ्जकतारतम्यप्रतिपादकेन सूत्रान्तरेण निरस्यति—

स्वल्पेऽपि(भि) व्यञ्ज(ज्य)ते स्वल्पं मह म(न्म) हति तत् स्थितम् ।

[या]दृक् तादृक् भवेत् तस्य प्रदीपस्तिमिरे यदा(था) ॥ सू. ५७

---

சீவன் ஞானவடிவினனுயும் வியாபகனுயுமிருந் தாலும், கலாதிவியஞ்சகங்களைக் கொண்டு அறிய வேண்டியதை அறிகின்ற காரணத்தால் அவன் சிற்ற றிவுடையவன் என்று கூறப்படுகிறுன்; இங்குக் காரணம் கூறுகிருர் व्यवधानानिदर्शनात् (வ்யவதாநா நிதர்சநாத்) என்று. கலை முதலிய வியஞ்சகம் இல்லாதபொழுது அவ்வறிவு நிகழாமையால் என்பது பொருள். 218

ஆன்மாவிற்கு வியஞ்சகத்தின் துணை வேண்டி யிருத்தலின் காரணமாகச் சிற்றறிவுத்தன்மை ஏற்படு கிறதென்ருல், அப்பொழுது தீக்கை என்ற வியஞ்சகம் ஏற்பட்டபொழுதும் ஆன்மாவுக்கு முற்றறிவுத் தன்மை ஏற்படமாட்டாது, இதுவும் வியஞ்சகமாக இருத் தலால் - என்னும் ஐயத்தை உதாரணத்தின் மூலமாக வியஞ்சகத்தின் தாரதம்மிய வகையைச் சொல்லுகின்ற

तत्- मलरुद्धं चैतन्यं, स्वल्प (पे)- व्यञ्जके स्वल्पे सति, स्वल्पं स्वयमभिव्यज्यते । महति-व्यञ्जके महति सति, महत् अभिव्यज्यते । तत्र दृष्टान्तमाह-यथा तिमिरे-अन्धकारे, प्रदीपः- अर्थव्यञ्जकप्रदीपः, यादृक् अल्पव्यञ्जको वा महाव्यञ्जको वा भवेत्, तथा तस्य चैतन्यस्य व्यञ्जकमित्यध्याहारः । तादृक् तथाविधं अल्पं वा महद्वा स्थितं व्यञ्जकतया स्थितमिति ।

तथा च कलादिरूपादल्पाद्व्यञ्जकात् दीक्षारूपस्य महा व्यञ्जकतया च न चात्मनस्सर्वज्ञत्वानुपपत्तिरित्यर्थः । २१९

---

மற்றொரு சூத்திரத்தால் நீக்குகிறார்.

* ஸ்வல்பேzபிவ்யஜ்யதே ஸ்வல்பம் மஹந் மஹதி தத் ஸ்தீதம்
யாத்ருக் தாத்ருக் பவேத் தஸ்ய ப்ரதீப ஸ்திமிரே யதா 11 சூ 57

மலத்தால் தடையுண்ட ஞானமானது வியஞ்சகம் குறைவாக இருக்குங்கால், சிறிது வெளிப்படுகிறது. வியஞ்சகம் பெரிதாக இருக்குங்கால், ஞானமும் நன்கு விளக்கம் பெறுகிறது; இங்குத் திருட்டாந்தம் கூறு கின்றார். திணிந்த இருளில் விளக்குச் சுடரின் சிறுமை பெருமைக் கேற்பப் பொருள் புலப்படுவது போல, உயிரின் அறிவும் வியஞ்சகத்தின் சிறுமை பெருமைக்கு ஏற்றவாறு வெளிப்படும். ஸ்வல்ப வியஞ்சகமான கலாதி களைக்காட்டிலும் தீக்கை மஹத்தான வியஞ்சகமாக இருப்பதால், ஆன்மாவிற்கு முற்றறிவுத் தன்மை ஏற்படமாட்டாது என்பது இல்லை என்பது பொருள். 219

---

* [தெரிய ஞானஞ் சிறிதிற் சிறியதாப்
பெரிது தன்னிற் பெரிதென நிற்குமெப்
பரிசி ருந்துள தப்பரி சாவதா
மிருளின் வைகு மெரிசுட ரென்னவே] சதமணிமாலை

आत्मनः चेतनत्वं च स्वशक्तियोगात् अचेतनत्वं च तदभावादित्येतत् निश्वासकारिकासूत्रेण दृष्टान्तमुखेन दर्शयति-

स चेतनः स्मृतो जीवो यदा शक्त्या तु युज्यते ।
अन्यथा निष्कलो ह्यात्मा विषसुप्त्येव लक्ष्यते ॥ सू ५८

जीवः-आत्मा, यदा तु-यस्मिन्काले, शक्त्या-अभिव्यक्तया स्वशक्त्या, युज्यते सम्बध्यते, तदा सः- जीवः, चेतनः-चैतन्य युक्तः इति स्मृतः । आगमज्ञैरितिशेषः । अन्यथा हि- अभि-व्यक्तशक्त्यभावे, आत्मा-जीव [:], निष्कल [:]कला चैतन्यं तद्रहितो निष्कलः अचेतन इति । तत्र दृष्टान्तमाह-विषसुप्त्येव विषेण सुप्तिः मूर्च्छा तथेव तथायुक्त इव लक्ष्यते -दृश्यते ।

यथा विषमूर्च्छावस्थायामात्मनश्चैतन्याभिव्यक्त्यभा-वादेव अचेतनत्वं न तु चैतन्यराहित्यात्; तथास्यापि

---

சீவனுக்குச் சேதனத் தன்மை சக்தி யோகத்தாலும், அசேதனத்தன்மை சக்தி யோகம் இன்மையாலும் நிகழும் என்பதை நிச்வாசகாரிகையின் சூத்திரத்தால் உதாரணமூலமாக விளக்குகிறார்.

* ஸசேதந: ஸ்ம்ருதோ ஜீவோ யதா சக்த்யா து யுஜ்யதே ।
அந்யதா நிஷ்கலோ ஹ்யாத்மா விஷஸுப்த்யேவ லக்ஷ்யதே ॥ சூ 58

சீவன் எப்பொழுது அருட்சக்தி யோகத்தால் அறிவாற்றல் வெளிப்படுகின்ற நிலையை அடைகின்றானோ, அப்பொழுது அவன் சேதனன் என்று ஆகம வல்லுநர்களால் கூறப்படுகிறான். அறிவாற்றல் வெளிப்படாத நிலையில் அவ்வான்மா அசேதனன் எனச் சொல்லப்படுகிறான்.

---

* [அறிவ னுருவன் சத்தி யடுத்திடிற்
செறிவு றுனெனிற் செப்பிய சீவனிங்
கறிவி லானென் றறையப் படுவரோர்
மறிவு மால மயக்குளனென்னவே] (சதமணிமாலை)

चैतन्यव्यक्त्यभावादेवाचेतनत्वं, न तु सर्वथा लोष्ठवत् चैतन्याभावादित्यर्थः । २२०

अथातीतावस्थि (स्थ) स्यात्मनो ज्ञानशक्त्या प्रबोधनं दृष्टान्तमुखेन किरणसूत्रेण निरस्यति—

गुरुर्यथाग्रतः शिष्यान् सुप्तान् दण्डेन बोधयेत् ।
शिवोऽपि मोहनिद्रायां सुप्ताञ्छक्त्या प्रबोधयेत् ॥ सू ५९

---

(இவ்விடத்துத் திருட்டாந்தம் கூறுகின்றார்)
"विषसुप्त्येव" (விஷஸுப்த்யேவ) என்று.

விடத்தால் மூர்ச்சையுற்றவனைப் போல ஆன்மா காணப்படுகிறான். விடத்தால் மூர்ச்சையுற்ற நிலையில் தன்னறிவு விளங்குவதில்லை. அதனால் அஃது அசேதனத்தன்மை. ஆனால் அவனிடம் அறிவு இல்லாத காரணத்தால் இல்லை; மூர்ச்சை தெளிந்த பின்னர் அறிவு வெளிப்படுகிறதைக் காண்கிறோம். அதுபோலவே, சேதனத்தன்மைக்கு அபிவ்யக்தி இல்லாமையாலேயே அசேதனத்தன்மை நிகழ்கிறது. ஆதலால் பாஷாணத்தைப்போல, என்றும் அவன்பால் அசேதனத்தன்மை இல்லை என்பதாம். 220

மேலும் மயங்கிய நிலையில் உள்ள ஆன்மாவிற்குத் திருவருட்சக்தியால் அறிவு விளக்கம் ஏற்படுகிறது என்பதை உதாரண வாயிலாகக் கிரண சூத்திரத்தால் நிராகரிக்கின்றார்

* குருர் யதாக்ரத: சிஷ்யாந் ஸுப்தாந் தண்டேந போதயேத் ।
சிவோऽபி மோஹநித்ராயாம் ஸுப்தாந் சக்த்யா ப்ரபோதயேத் ॥ சூ59

---

* [குரவன் முன்றுயில் கொள்ளுமா ணாக்கனை
யுரிய கோலி னுணர்த்துவ னீசனுந்
துரிய போகத் துயில்பெறு வான்றனை
யரிய சத்தியி னுலறி விப்பனால்.] சதமணிமாலை

यथा गुरुः- आचार्यः, अत्र गुरुशब्दार्थः—

गु शब्दस्त्वन्धकारश्च रु शब्दस्तन्निरोधकः ।
अन्धकारनिरोधित्वाद्गुरुरित्यभिधीयते ॥

अग्रतः - पुरतः, सुप्तान्- निद्रापरवशान्, शिष्यान्- शासनार्हान्, दण्डेन- वेत्रादिना करणेन, बोधयेत्- प्रबोधयेत । अग्रेस्थितत्व(त्वा)विशेषेऽपि शासनार्हान् मलपरिपाकयोग्यत्वेन गुरुर्दण्डेन बोधयति, नत्वशिष्यानित्यर्थः । तथा शिवोऽपि परमेश्वरोऽपि, मोहनिद्रयां मा(मो)हः- मलः तस्य [निद्रा] कार्य प्रत्यसामर्थ्यं परिपाकविशेषः, तस्यां सत्यामपि, सुप्तान्- तन्निवृत्युपायसंविर (द्र) हितान् पशून्, शक्त्या- करणीभूतया ज्येष्ठाशक्त्या बोधयेदिति । २२१

आत्मशक्तेरभिव्यक्तिप्रकारं दृष्टान्तमुखेन सूत्रान्तरेण प्रतिपादयति—

यथा भेषजसामर्थ्यादशक्तानां बलं परम् ।
तेन तच्छक्तियोगेन सामर्थ्यममितं भवेत् ॥ सू ६०

---

குரு என்பவர் ஆசாரியராவார். குரு என்ற சொல்லின் பொருள் வருமாறு... 'கு' இருள்; (அஞ்ஞானம்) 'ரு' அதைத் தடை செய்தல். அஞ்ஞானத்தை விலக்குவதால் குரு எனப்படுகிறார். ஆசாரியர் தம் முன்னிலையில் உறங்கிக் கொண்டிருக்கும் உபதேசிக்கத் தகுந்த சீடர்களைப் பிரம்பினால் தட்டி எழுப்புவார். மலபரிபாகத்தால் தகுதியுடையவர்களாக இருத்தலால், குரு சீடர்களைப் பிரம்பால் தட்டி எழுப்புகிறார்; முன்னிலையில் இருப்பினும் உபதேசிக்கத் தகாதவர்களை எழுப்பவில்லை. அவ்வாறே சிவ பெருமானும் ஆணவமலத்தால் தடைப்பட்ட அறிவாற்றலினின்று அதை நீக்கும் உபாயஞானம் இல்லாத ஆன்மாக்களைத் தமது ஜ்யேஷ்டா சக்தியால் எழுப்பு கிறார் என்பது பொருள். 221

अशक्तानां-व्याधिना सामर्थ्यरहितानां, भेषजसामर्थ्यात्-भेषजस्य-औषधस्य सामर्थ्यात्-वीर्यात्, यथा- येन प्रकारेण,परं-उत्कृष्ट (ष्टं), बलं- प्राग् विद्यमानसामर्थ्यं, भवेदिति शेषः। तथा तेन तच्छक्तियोगेन-तस्य- शिवस्य, शक्तिः रौद्री अनुग्राहक शक्तिः-तस्या योगेन- सम्पर्केण, मितं न भवतीत्यमितं-देशकाल परिच्छेदशून्यं, सामर्थ्यं-प्राक्सिद्धरूपं ज्ञानक्रियात्मकं सामर्थ्यं, भवेत्- अभिव्यक्तं भवेदिति। २२२

पराकृय सार्धसूत्रेण न केवलमस्यात्मनो मोक्ष एवशिवः शक्त्यापेक्ष्या (शिवशक्त्यपेक्षा) किन्तु देह भोगयोगयोरपीत्याह

शिवत्वाद्युज्यते मोक्षे पशुत्वाद्युज्यते तनौ।
भोगेष्वपि च सामर्थ्यात् कर्मणो(णां)मुनिसत्तम॥ सू ६१
ईश्वराधिष्ठितात्मासावस्वतन्त्रो यु(य) तस्तु सः। सू ६२

---

ஆன்மசக்தி வெளிப்படும் விதத்தை உதாரண வாயிலாக மற்றொரு சூத்திரத்தால் விளக்குகிறார்:

* யதா பேஷஜ ஸாமர்த்யாதசக்தாநாம் பலம் பரம்।
தேந தச்சக்தி யோகேந ஸாமர்த்ய மமிதம் பவேத்॥ சூ 60

நோயால் வலிமை இழந்தவனுக்கு மருந்தின் ஆற்றலால் எவ்வாறு மேலான முன்னிருந்த வலிமை ஏற்படுகிறதோ, அவ்வாறே சிவபெருமானின் அருட் சக்தியின் சம்பந்தத்தால் தேச காலங்களால் அளவிட முடியாத இயல்பாகவிருந்த ஞானக்கிரியா ரூபமான ஆற்றல் ஆன்மாவினிடத்தில் வெளிப்படுகிறது என்பது பொருள். 222

---

* மருந்தி னாற்றலின் மிக்க வலிவரும்
அரந்தை நோயிற் றவர்க்கது போலிறை
பொருந்து சக்தி பொருந்தி லளவிலா
திருந்த வாற்ற லிசையு முயிர்க்கரோ ]

यतः-यस्मात्कारणात्, अस्वतन्त्रः-इष्टप्राप्त्यनिष्टपरिहारयोः स्वातन्त्र्यरहितः- ततः, तस्मात् कारणात्, ईश्वरेण - परमेश्वरेण अधिष्ठितः आत्मा- स्वरूपं ज्ञानक्रियात्मकं, यस्य असौ आत्मा, शिवत्वात्-शिवत्वं पशुत्वनिवृत्तिः मलपरिपाकः तस्मान्निमित्तात्, मोक्षे युज्यते-सम्बध्यते । पशुत्वात्- पशुत्वं मलपरिपाकाभावः, तस्मात्, तनौ- देहे, युज्यते । कर्मणां सामर्थ्यात् भोगेष्वपि- सुखदुःखात्मकेष्वपि, युज्यते । मुनिसत्तम इति श्रोतुः सम्बोधनम् । २२३

---

ஆன்மாவிற்கு வீடுபேற்றை அடைவதற்கு மாத்திரம் சிவசக்தியின் துணை வேண்டும் என்பதில்லை; தனுகரண புவன போகங்களை அடைவதிலும் சிவசக்தியின் துணை வேண்டற்பாலது என்பதைப் பராக்கியத்தின் ஒன்றரைச் சூத்திரத்தால் சொல்லுகின்றார்

* சிவத்வாத் யுஜ்யதே மோக்ஷே பசுத்வாத் யுஜ்யதே தநௌ!
போகேஷ்வபிச ஸாமர்த்யாத் கர்மணாம் முனிஸத்தம II சூ 61
ஈச்வராதிஷ்டிதாத்மாஸாவஸ்வதந்த்ரோ யதஸ்து ஸ: ! சூ 62

எக்காரணத்தால் ஆன்மா விரும்பியவற்றை அடைவதிலும் வேண்டாதவற்றை விலக்குவதிலும் சுதந்திரமற்றவனாக இருக்கின்றானோ, அக்காரணத்தால் சிவபெருமான் ஆன்ம அறிவிலே தங்கி நின்றுணர்த்த, ஆன்மா மலபரிபாகத்தின் காரணமாக வீடுபேற்றை அடைவிக்கப்படுகிறான். மலபரிபாகம் நிகழாதபொழுது அவ்வான்மா தனுகரணங்களுடன் சேர்க்கப்படுகிறான். கன்மங்களின் வலிமையால்சுகதுக்க போகங்களிலும் சேர்க்கப்படுகிறான் என்பது பொருள்.

---

* அகன்றுள சுதந்த ரத்தா லானதிட் டிக்கப் பட்டு
மிகன்றுள வினையாற் போக மிசைபவ னெனினு மென்றும்
புகுந்துள பசுத்து வத்தாற் பொருந்துவன் யாக்கை தன்னிற்
நிகழ்ந்துள சிவத்து வத்தாற் சேருபவன் முக்தி யான்மா.]
(சதமணிமாலை)

